ஸ்ரீபிரசன்ன வெங்கட தாசரின் கிருதிகளில் ஆத்யாத்மிக சிந்தனை
பாகம் - 1

## ஸ்ரீபிரசன்ன வெங்கட தாசரின் கிருதி

# "ஸமஸ்த நாம மணிகண ஷட்சரண பத்யமாலா"

**(கன்னடத்தின் முதல் விஷ்ணு சஹஸ்ர நாமம் - நாமங்களின் விவரங்களுடன்)**

**கன்னடத்தில்: டாக்டர் திரு.வி.பி. குல்கர்ணி**
**தமிழில் : 'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்**




**ஸ்ரீபிரசன்னவெங்கட பிரகாஷன**
#15, 'மந்திராலய' (பிரஷாந்தி நகர)
6ம் 'பி' மெயின் ரோட். 17ம் க்ராஸ்
இஸ்ரோ லேஅவுட், பெங்களூரு - 560078
தொலைபேசி: 080-2666538. கைப்பேசி: 94448011954
Email: rsk9651@yahoo.com/subhasbk@gmail.com
trust@prasannavenkatadasaru.org
website : www.prasannavenkatadasaru.org

ஸ்ரீபிரசன்ன வெங்கட தாசரின்
சமஸ்த நாம மணிகண ஷட்சரண பத்யமாலா
கன்னடத்தின் முதல் விஷ்ணு சஹஸ்ர நாமம் -
நாமங்களின் விவரங்களுடன்

Written by : Dr.V.B.Kulkarni
Published by : Sri Prasanna Venkata Publications
No.15 'Mantralaya' (Prashantinagar)
9th B Main Road, 17th Cross
ISRO Layout, Bangalore - 560078

வெளியீடு: 2021 ஜ்யேஷ்ட சுத்த சதுர்தசி (23-06-2021)
ஸ்ரீஸ்ரீபாதராஜர் ஆராதனையன்று வெளியிடப்பட்டது.

பக்கங்கள்: 226

புத்தகம் கிடைக்கும் இடம்:

1. Shrimati: REKHA KAKHANDAKI
No.15, 'Mantralaya' Prashantinagar
9th 'B' Main Road, 17th Cross
ISRO Layout, Bangalore - 560078

2. 'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்
கைப்பேசி: 8904458276
Email: haridasa.vijayan@gmail.com
jagannathakesava.blogspot.com

# உரையாளரின் உரை

ஹரியின் கருணை தக்க காலத்தில் கிடைப்பது போல, முற்பிறவியின் நற்செயல்களும் பலன்களைக் கொடுக்கிறது. கற்றதும் குறைவு, ஆசார விசாரங்களும் அவ்வளவே. ஆனால் இவற்றைக் கணக்கில் எடுக்காமல், என் குலதெய்வமான திருப்பதியின் ஸ்ரீவேங்கடேசனின் ஆணைக்கேற்ப, இந்த அற்புத சேவையை செய்ய நான் தயாரானேன்.

பகவந்தன் மூலமாகவே தன் நாக்கில் 'ப்ரஸன்ன வெங்கட' என்னும் நாமாங்கிதத்தைப் பெற்ற தாச ஸ்ரேஷ்டர் - சம்ஸ்கிருத மற்றும் கன்னட மொழி இரண்டிலும் பண்டிதர் ஆனார். அத்தகைய தாசார்யர் இயற்றிய இந்த பத்யத்தில், ஸ்ரீவியாசர் இயற்றிய ஸ்ரீவிஷ்ணு சஹஸ்ர நாம ஸ்தோத்திரத்தில் இருப்பதைப் போலவே, சஹஸ்ர நாமங்கள் வரவில்லையென்றாலும், அருகில் உள்ள எண்ணையே கணக்கில் கொள்ள வேண்டும் என்னும் அபிப்பிராயத்தில் நான் இதற்கு - ஸ்ரீபிரஸன்ன வெங்கட தாசார்யர் இயற்றிய 'ஸ்ரீவிஷ்ணு சஹஸ்ர நாம ஸ்தோத்திர - என்றே பெயர் வைப்பதில் பிரச்னை இல்லை என்று நினைக்கிறேன்.

உடுப்பி ஸ்ரீபலிமாரு மற்றும் பண்டாரகெரெ மடங்களின் பீடாதிபதிகளான ஸ்ரீஸ்ரீ வித்யாமான்ய தீர்த்தர், தம் மடத்தின் பண்டித சிஷ்யரான ஸ்ரீஸக்ரி ராகவேந்திர உபாத்யாயர் மூலமாக ஸ்ரீவிஷ்ணு சஹஸ்ரநாம ஸ்தோத்திரத்திற்கு எழுதிய டீகா கிரந்தத்தை இந்த கிருதியில் அதிகமான பயன்படுத்தியிருக்கிறேன்.

பண்டிதர்கள் இதனை படித்து, குற்றம் குறைகள் ஏதேனும் இருப்பின் அவற்றை எனக்கு சொல்லுமாறு வேண்டிக் கொள்கிறேன்.

ஹரிதாசர்களின் பாதகமலங்களில்

**டாக்டர். வி.பி.குல்கர்ணி**
**பலகுந்தி - 587125**

# முன்னுரை

ஸ்ரீ ப்ரஸன்ன வேங்கட தாஸர் 600-க்கும் மேற்பட்ட கீர்த்தனைகள், 20-க்கும் மேற்பட்ட உகாபோகங்கள், 9-க்கும் மேற்பட்ட சுளாதிகள், கோலு பாட்டு போன்றவற்றை ரசனை செய்த மஹனீயர். சிறு வயதிலேயே தாய், தந்தையரை இழந்து, உணவிற்கே கஷ்டப்பட்டவர். ஸஜ்ஜனர்களின் சகவாஸத்தால் திருமலை ஸ்ரீ நிவாஸனின் தரிசனம் கண்டு, வாழ்வில் திருப்பு முனை கண்டு, பகவானே அவருடைய ஸ்வரூப யோக்யதையைக் கண்டு அவருக்கு தரிசனம் அளித்து, அங்கிதம் அளிக்கும் விதமாக அவரின் நாவில் 'ப்ரஸன்ன வேங்கட" என்னும் முத்திரையை எழுதி அனுக்கிரஹம் புரிந்துள்ளான். திருமலையில் பகவானே அர்ச்சகர்களுக்கு சூசனை அளித்து, தாஸருக்கு பூஜா விக்ரகங்களை அருளியுள்ளான். தாஸர் அருளிய 'ஸத்யபாமா விலாஸ', 'பேத முக்தாவளி', 'நாரத கொரவஞ்சி', 'ஸ்ரீ கிருஷ்ண பாரிஜாத', 'கோபி கீதம்', 'நாராயண பஞ்ஜரம்' போன்ற படைப்புகளின் வரிசையில் 'ஷட்சரண பத்மமாலா' என்பது பகவானை பல்வேறு நாமங்களிலே துதித்து பிரார்த்தனை செய்யும் விதத்தில் கன்னடத்தில் அமைந்த க்ரந்தமாகும்.

'ஷட்சரண பத்மமாலா' என்பது 71 பத்யங்களில் ஸ்ரீமன் நாராயணனின் பல்வேறு குணங்களை, மஹிமைகளைப் போற்றும் வகையில் உள்ள பல்வேறு நாமங்களைக் கொண்டு துதிபாடும் வகையில் அமைந்த கிரந்தமாகும். இது தாஸர், 956 நாமங்களிலே பகைவனைத் துதித்து பிரார்த்தனை (அ) ஸ்தோத்திர ரூபத்தில் அருளிய கிரந்தமாகும்.

பல்லவியில் தாஸர், "ஸ்ரீரமாவர ஸ்ருதிவினுத ஸூக² ஸாரக்³ரஹக்கெ ஸர்வேஷ ஸுரத்ரும வாரிஜாக்ஷ முகுந்த³ முரஹர நரஸிம்ஹ நமோ" என ஆரம்பித்து, அதிலும் முக்கியமாக இந்த கிரந்தத்திற்கு மங்கள பதமாக அமையும் வகையில், 'ஸ்ரீ' எனத் தொடங்கி, ஸர்வ ஸம்பன்னனான ஸ்ரீ லக்ஷ்மியின் வல்லபனான ஸ்ரீ ஹரியைப் போற்றி வர்ணித்துள்ளார். மேலும், ஒவ்வொரு பத்யத்தின் இறுதியிலும் பகவானின் நாமங்களைக் கூறி "நமோ

நமோ" எனப் போற்றி பிரார்த்தனை செய்யும் வகையில் இயற்றி உள்ளார் தாஸர்.

தாஸர் புராணோக்தமான, வேதோக்தமான ரூபங்களை, நாமங்களை, பல்வேறு பத்யங்களில் வரிசைப்படுத்தி குறிப்பாக 'பத்மநாப', 'தாமோதர', 'உபேந்த்ர', 'அச்சுத' 'ஜனார்த்தன', 'வாஸுதேவ', 'ஸங்கர்ஷண', 'அனிருத்த', 'அதோக்ஷஜ', 'விஸ்வ', 'தைஜஸ', 'ப்ராக்ஞ' முதலான நாமங்களைக் கொண்டு துதித்துப் பாடியுள்ளார்.

பகவானின் பல்வேறு அவதார ரூபங்களை 'ராம' , 'கிருஷ்ண', 'நாரஸிம்ஹ', 'த்ரிவிக்ரம', 'கபில', 'யக்ஞ', 'மஹிதாஸ', 'தத்தாத்ரேய' , 'நாராயண', 'ருஷப' முதலான நாமங்களினால் பல்வேறு பத்யங்களில் துதித்ததுடன், முக்கியமாக ராம மற்றும் கிருஷ்ண அவதாரங்களில் பகவானின் மஹிமைகளை லீலைகளை, வர்ணிக்கும் வகையில் குறிப்பிட்டு வர்ணித்து ஸ்தோத்திரம் செய்துள்ளார் தாஸர்.

பகவானின் ஸ்ரீ ராம அவதாரத்தின் லீலைகளை வர்ணிக்கும் வகையில் 'தாடகாந்தக', 'ஜனகஜாவர', 'லக்ஷ்மணாக்ரஜ', 'ஜனகவாக்வர', 'தினபகுலபதி', 'தஸஸிர ஹனன காரண', 'பரதபாலக', 'ராமராஜ' முதலான நாமங்களில் தாஸர் குறிப்பிட்டு துதித்துப் பாடியுள்ளார்.

பகவானின் ஸ்ரீ கிருஷ்ண அவதாரத்தின் லீலைகளை 'பூதனாந்தக', 'நவநீதப்ரிய', 'ததிஸார போஜக', 'பக ஹர, 'கரி ஹர', 'சாணூர ஹர', 'மாதுலாந்தக', 'பார்த்த ஸ்தாபக', 'கௌரவாந்தக' முதலான நாமங்களினால் போற்றியுள்ளார் தாஸர். குறிப்பாக கிருஷ்ணாவதார காலத்தில் பக்தர்களைக் காத்து அனுக்ரஹம் புரிந்த விதத்தையும், அத்தகைய அருளுக்கு பாத்திரரான பக்தர்களை மனதில் கொண்டு 'அக்ரூராபிஷ்டத', 'விதுரவரேண்ய', 'உத்தவவரேண்ய', முதலான நாமங்களினால் பகவானைக் கொண்டாடி வணங்கியுள்ளார் தாஸர்.

மேலும் தாஸர் பகவானின் ஸர்வோத்தமத்வத்தை, அதிலும் குறிப்பாக பகவான் அனந்த கல்யாண குண பரிபூர்ணன், மற்றும் ஸர்வதோஷதூரன் என்பதை பறைசாற்றும் படியாக 'ஸ்ருதி

வினுத', 'ஸூரேஷ', 'ஆதிபுருஷ', 'ஸூவ்யாப்த', 'ஞானானந்த', 'நித்ய த்ருப்த', 'நிர்பயாத்ம', 'அனவேத்ய',' "ஸதத விபுத நியாமக', 'ஸம்பூர்ணவாச்ய', 'அஸேஷ தூரதூர, 'அப்ராக்ருத', 'பரமபுருஷ', 'அவ்யய', 'அதிஸயாத்புத', 'அனந்தகுணநிதி', 'ஸமாதிகாபக்ஷ', 'ஸகல புவன நிவாஸ', 'பஹூள ஜீவாந்தரீய', 'பராத்பரா', 'வர்ஜித கலுஷ', 'ஸுசரித', 'ஸர்வபுக்', 'ஸ்வபூர்ண' முதலான பல்வேறு நாமங்களினால் துதித்துள்ளார்.

தைத்யர்களை அழித்து தர்மத்தை நிலை நாட்டுபவன் என்பதைக் காட்டும் வகையில் பல்வேறு பத்யங்களில் 'பூதனாந்தக', 'தாடகாந்தக', 'கௌரவாந்தக', 'மதுமதன', 'கைடப விதாரண', 'தஸஸிர ஹனன காரண', 'க்ஷிதி பரஹர', பகாந்தக', 'வாத சக்ரா நிஷ்ட ஹர' முதலான பல்வேறு நாமங்களினால் ஸ்தோத்திரம் செய்துள்ளார் தாஸர்.

அதே நேரத்தில் தமது பக்தர்களின் மேல் கருணை கொண்டவன், பக்தர்களுக்கு உண்டாகும் ஆபத்தைக் களைந்து ரக்ஷிப்பவன் என்பதைக் குறிப்பிடும் வகையில் 'கருணஸாகர', 'காமிதார்த்தக', 'தீனவத்ஸல', 'ஸௌக்யகர', 'உதாரலீல', 'மோக்ஷவல்லப', 'பவமலக்ன', "முமுக்க்ஷூவரத', 'தயாபர', 'ஸுரத்ரும', 'அஸூபவிலுண்டிகா', ' கருணநிதி', 'நுதஜனமந்தார', 'தாரீத்ரய தூரக', 'அசேஷஸஹ' முதலான பல்வேறு நாமங்களினால் மனமுருகி வேண்டிப் பாடியுள்ளார் தாஸர்.

மேலும் தாஸர் எல்லா தேவதைகளுக்கும் அனுக்ரஹம் புரிபவன், ப்ரியமானவன், அனைவராலும் போற்றப்படுபவன் என்பதாக 'வாணீதவப்ரிய', 'அனுமஹத் ரமாதேவி ப்ராண தேவுரு கணேஷ ப்ரிய', 'முனிபூஜித', 'இந்த்ரபூஜித', 'ஸ்ருதிவினுத' முதலான நாமங்களினால் போற்றியுள்ளார் தாஸர்.

பகவானின் ரூப சௌந்தரியம், லக்ஷணங்கள், ஆயுதங்கள், வாஹனம், ஆபரணங்கள் முதலியவைகளைக் கொண்டு துதிக்கும் வகையில் 'ஸேஷ ஸயன', 'சாரங்கபாணி', 'கூர்ச்சபாணி', 'கட்கெபாணி', 'இஷுபாணி', 'பண்டுராம்பக', 'முரளிதரகர',

'ஹிரண்மயவஸன', 'க்ஷுராயுதனெ' என்பதாக பல்வேறு நாமங்களினால் வெவ்வேறு பத்யங்களில் போற்றியுள்ளார் தாஸர்.

அதிலும் லட்சுமியுடன் கூடிய பகவானின் ரூபங்களை லக்ஷ்மிக்கு பகவான் அருள் புரிவதை விளக்கும்படியாக 'ஸ்ரீஸ்ரீஷ', 'ஸ்ரீராமவர', 'லக்ஷ்மீஸ', 'லக்ஷ்மீதர', 'பைஷ்மீஸ', 'வைதேஹி மனோஹர' முதலான நாமங்களைக் கொண்டு பகவானை ஸ்தோத்திரம் செய்துள்ளார்.

தாஸர் மேலும் அதிஸயத்தக்க வகையில், பகவானின் பல்வேறு குணங்களை, மஹிமைகளை எண்களின் (எண்ணிக்கைகளின்) அடிப்படையில் தொடுத்து வரிசைப்படுத்தி 47 முதல் 56 வரையிலான பத்யங்களில் வர்ணித்துள்ளார். உதாரணமாக 47 வது பத்யத்தில் 'ஏகவ்யாபக', 'ஏக போஜக', 'ஏக தாரக', 'ஏக ஸூசக', 'ஏக பத்ர' என்பதாக பகவானின் தனித்துவத்தைப் புகழ்ந்து, முறையே பின்வரும் பத்யங்களில் த்வய, த்ரய, சதுர், பஞ்ச, ஷட், ஸப்த, அஷ்ட, நவ, தஸ எனத் தொடங்கும் வகையில் நாமங்களை வரிசைப்படுத்திக் கொடுத்துள்ளார்.

70 வது பத்யத்தில் ஆச்சார்யர் ஸ்ரீமன் மத்வாசாரியாரையும், அந்தர்யாமியான ஸ்ரீஹரியையும் 'மத்வ வல்லப', 'மத்வ தீர்த்தக', 'மத்வமதபர', 'மத்வபதே', 'ஸ்ரீ மத்வயதிநுத', 'மத்வபுஷ்கரபா', 'மத்வபோஷக', 'மத்வபாஷக' முதலான நாமங்களினால் துதித்து ஸ்ரீ ஹரி வாயுவை ஸ்தோத்திரம் செய்துள்ளார் தாஸர்.

இறுதியில் 71வது பத்யத்தில், இந்த க்ரந்தத்தை பூர்த்தி செய்யும் வகையில், அனைவருக்கும் ஆனந்தத்தை, அளிப்பவனும், பக்தர்களின் சேவையினால் மகிழ்ந்து பிரஸன்னமாகும் பகவானை, 'பிரஸன்ன பவன', 'பிரஸன்ன பாஷன', 'பிரஸன்ன கார்ய', 'பிரஸன்ன குணநிதே', 'பிரஸன்ன நாமத ', 'பிரஸன்ன தேஜத', 'பிரஸன்ன முர்த்தே', 'பிரஸன்ன புருஷ', 'பிரஸன்ன கதன', 'பிரஸன்ன பூஷண', 'பிரஸன்ன ஸொாங்கித', 'பிரஸன்ன சரித', எனத் துதித்து, தம்முடைய அங்கித நாமத்தைக் கொண்டு 'பிரஸன்ன வேங்கட' எனப் போற்றி, இறுதியில் இத்தகைய உயரிய "நாம மணிகண ஷட்சரண பத்ய மாலாவை" ஸ்ரீ கிருஷ்ணார்பணம்

செய்வதாலேயே பிரஸன்னமாகும் ஸ்ரீ ஹரியை 'பிரஸன்ன கிருஷ்ண' என்ற நாமத்தாலே துதித்து பூர்த்தி செய்துள்ளார் தாஸர்.

பகவானின் குணங்களை, மஹிமைகளைப் போற்றும், ஸ்தோத்திர ரூபத்தில் இயற்றப்பட்டுள்ள இத்தகைய உயரிய கிரந்தத்தை அனுதினமும் பாராயணம் செய்து, விஸேஷமான அர்த்தங்களைத் தெரிந்து கொண்டு ஸ்ரீ பிரஸன்ன வேங்கட தாஸரின் அந்தர்யாமியான ஸ்ரீ பிரஸன்ன வேங்கடனின் அனுக்ரஹத்திற்கு பாத்திரராவோமாக!

இத்தகைய சிறப்பு வாய்ந்த ஸ்ரீ பிரஸன்ன வேங்கடதாஸர் அருளிய 'ஷட்சரண பத்யமாலா' எனும் உயரிய கிரந்தத்தின் மூலத்தையும், அதன் விஸேஷ அர்த்தங்களையும் பாமரரும் அறியும் வண்ணம் தமிழில் 'ஜகன்னாத கேஸவ' திரு. சத்ய நாராயணன் அவர்கள் வெளியிட்டுள்ளார். அவர் ஸ்ரீ பிரஸன்ன வேங்கடதாஸரின் 'நாராயண பஞ்ஜரம்', 'பிடனோ நின்னங்கரி ஸ்ரீ நிவாஸ' போன்றவற்றையும் தமிழில் மிக அழகாக மொழிபெயர்த்து வெளியிட்டுள்ளார். அவருக்கு ஸ்ரீ பிரஸன்ன வேங்கட தாஸரின் அந்தர்யாமியான ஸ்ரீ ஹரி ஆயுள், ஆரோக்யம், ஐஸ்வர்யம் இவைகளை அருளி இன்னும் பல நூல்களை வெளியிட பிரார்த்தனை செய்கிறேன்.

**'பிரஸங்க பூஷணம்', 'பிரவசன பூஷணம்'**
**S.லக்ஷ்மிபதிராஜா**
**மேடவாக்கம், சென்னை**
**13-6-2021**

# முன்னுரை - 2

தாச சதுஷ்டயர்களுக்குப் பிறகு ஹரிதாச சாகித்யத்தில் ஒளிர்ந்தவர், அத்யந்த சத்வபூர்ணமான சாகித்யத்தைக் கொடுத்தவர் பிரசன்னவெங்கட தாசர். விஜயதாசர் போன்ற அபரோக்ஷ ஞானிகளே, பிரசன்ன வெங்கட தாசரின் சாகித்யத்தை பாராட்டி கௌரவித்திருக்கிறார் என்றும் பார்க்கிறோம். இவரின் 'பிடெனோ நின்னங்க்ரி ஸ்ரீனிவாசா' பாடாத பஜனா மண்டலியே இல்லை. அதன் இனிமையை அனுபவிக்காத ஹரிதாச சாகித்யத்தை அறிந்தவரே இல்லை. அவரின் ஒவ்வொரு பாடல்களும், மிகவும் பவித்ரமான சாகித்ய க்ருதிகளாகும்.

விஷ்ணு சஹஸ்ரநாமத்தைப் போலவே பரமாத்மனின் நாம மகிமையை கன்னட பத்ய மாலையாக பிரஸன்ன வெங்கட தாசர் 'சமஸ்த நாம மணிகண ஷட் சரண பத்யமாலா' என்று இயற்றியிருக்கிறார். முதலிலிருந்து கடைசிவரை விஷ்ணு நாமத்தின் சரங்களை கன்னட எழுத்துக்களில் கோர்த்து இங்கு கொடுத்திருக்கிறார். கன்னடத்தில் தாசருக்கு இருந்த ஆளுமை மற்றும் சம்ஸ்கிருதத்தில் அவருக்கு இருந்த திறமையை இந்த கிருதி எடுத்துக் காட்டுகிறது.

பரமாத்மனின் நாம, ரூப, குண, க்ரியைகள் வெவ்வேறல்ல. அவையும் சாட்சாத் பரமாத்மனே என்ற மத்வாசார்யரின் வாக்கிற்கேற்ப இந்த கிருதியும் வந்திருக்கிறது.

பிரசன்ன வெங்கட தாசரைப் போன்ற சிறந்த ஹரிதாசரின் அனைத்து கிருதிகளைக் குறித்தும் ஒரு ஆராய்ச்சிப் பார்வை, பல நூற்றாண்டுகள் கழிந்தாலும் இன்னும் முழுமையாக நடைபெறவில்லை என்பது ஒரு குறையே. ஆனாலும் ஸ்ரீபிரசன்ன வெங்கட பிரகாஷன மூலமாக, திருமதி. ரேகா காகண்டகி மற்றும் பிரசன்ன வெங்கட கல்சரல் மற்றும் சேரிடபிள் டிரஸ்ட் (ரி)ன் டாக்டர். சுபாஷ் காகண்டகி அவர்களின் முயற்சியால், இந்த செயல் சிறப்புடன் துவங்கியிருக்கிறது என்பது மகிழ்ச்சிக்குரிய செய்தி. தாசார்யரின் மொத்த கிருதிகளின் ஆத்யாத்மிக

சிந்தனையை கவனித்து, அதனை அனைவருக்கும் பகிர்ந்தளிக்கும் செயலாக முதல் தொகுப்பு இந்தப் புத்தகமாக வந்திருக்கிறது. அதற்காக காகண்டகி தம்பதிகளுக்கு மனம் நிறைந்த வணக்கங்கள்.

கிருஷ்ணனின் எதிரில் இருந்து, பீஷ்மாசார்யர், அவனின் ஒவ்வொரு குணங்களையும் 1,000 நாமங்களாக பாடிய வர்ணனை, யுகம் யுகமாக புகழ்பெற்று வந்திருக்கிறது. அது பவித்ரத்திலும் பவித்ரம். மங்களத்திலும் மங்களம். லட்சக்கணக்கான மக்களின் வழிகாட்டியாக இருக்கிறது. அதைப்போலவே குணங்களைக் கொண்டிருக்கும் இன்னொரு கிருதி என்றால், அது, பிரசன்னவெங்கட தாசரின் இந்த க்ருதியே. இங்கு தாசர் பரமாத்மனின் நாமங்களை, வரிசையாக தொடுத்திருக்கிறார்.

உதாரணத்திற்கு, தூஷணாந்தக என்ற தாசர், கரதூஷணர்களை சம்ஹாரம் செய்த விக்ரமி, அந்த பரமாத்மன் என்கிறார். பலானுஜபரித என்கிறார். பலராமன், பிரலம்பாசுரனைக் கொன்ற சம்பவத்தை நினைவுகூர்ந்து, இத்தகைய பலசாலியான பலராமனால், விரும்பப்பட்ட ஸ்ரீகிருஷ்ணன் என்கிறார். கலரவ என்று பகவந்தனை அழைக்கும் தாசர், கழுத்தில் ரவ என்றால், வேதங்களையே மூச்சாகக் கொண்டிருக்கும் ஹயக்ரீவ அவதாரத்தை விளக்குகிறார்.

தாசர் எவ்வளவு அற்புதமாக இந்த கிருதியை இயற்றியிருக்கிறாரோ, அவ்வளவு இனிமையாகவே இதன் உரையை டாக்டர். குல்கர்ணி அவர்கள் எழுதியிருக்கிறார். இத்தகைய வேலையால், தாசருக்கு மகத்தான சேவையை செய்திருக்கிறார் டாக்டர்.

இத்தகைய அற்புத கிருதி வெளிவருவதற்கு முக்கிய காரணமாக இருந்த திருமதி. ரேகா காண்டகி மற்றும் டாக்டர். சுபாஷ் காகண்டகி இருவருக்கும், மற்றும் உரை எழுதிய டாக்டர். குல்கர்ணி அவர்களுக்கும் என் பக்திபூர்வகமான நமஸ்காரங்கள்.

**வித்யாவாசஸ்பதி டாக்டர். அருளுமல்லிகெ பார்த்தசாரதி**

# வெளியிடுவோரின் உரை

ஸ்ரீபிரசன்ன வெங்கட தாசரிடமிருந்து வெளிவந்த பல்வேறு கீர்த்தனைகளில் சிறந்ததான ஒரு கிருதி - சமஸ்த நாம மணிகண ஷட்சரண பத்யமாலா. தற்போது வரை கிடைத்திருக்கும் தாசரின் கிருதியில் அடங்கியிருக்கும் சிந்தனை, அர்த்தங்களின், தத்வங்களின், சித்தாந்தங்களின் உள் அர்த்தம் அவற்றின் அழகினை அறிந்தால் மட்டுமே தாசரின் அந்தரங்கத்தை கொண்டு சேர்த்தால் மட்டுமே நம் முயற்சி வெற்றி பெறுகிறது.

இப்படியாக இந்த செயலுக்கு தாசரின் ப்ரேரணையின்படி, நம் அனைவரின் நிறுவனங்களான ஸ்ரீபிரசன்ன வெங்கட பிரகாஷன, மற்றும் ஸ்ரீபிரசன்ன வெங்கட கல்சுரல் அண்ட் சேரிடபிள் டிரஸ்ட் (ரி) பெங்களூரு மூலமாக இந்த புத்தகத்தில், முதன்முதலில் வந்த 'ஸ்ரீபிரசன்ன வெங்கட விஜய' இப்போது இரண்டாம் தொகுப்பாக அவரது 'சமஸ்த நாம மணிகண ஷட்சரண பத்யமாலா' வாக வந்திருக்கிறது. இதன் அர்த்தங்களை விளக்கி எழுதியிருப்பவர் டாக்டர். வி.பி. குல்கர்ணி அவர்கள். இது ஒரு மிகச்சிறந்த கிருதியாகும்.

அடுத்தும், தாசரின் அனைத்து கிருதிகளையும், இது போலவே தாசரின் வ்ருந்தத்திற்கு, தாச சாகித்ய பக்தர்களுக்கு கொண்டு சேர்க்கும் நோக்கம் நமதாகும். அதற்கு அனைத்து வித்வாம்சர்களின், பண்டிதர்களின் மற்றும் அனைத்து தாசர்களின் பக்தர்களின் உதவியும் நமக்கு வேண்டும்.

இந்த கிருதியை ஆழமாக படித்தாய்ந்து சிறப்புடன் விளக்கிய டாக்டர். வி.பி.குல்கர்ணி அவர்களுக்கும் மற்றும் இதற்கான முன்னுரையை எழுதிக் கொடுத்த, உலகப் புகழ் பெற்ற தாச சாகித்ய வித்வாம்சரான வித்யாவாசஸ்பதி டாக்டர். அரளுமல்லிகெ பார்த்தசாரதி அவர்களுக்கும் நம் அனந்த நன்றிகள். இந்த கிரந்தத்திற்கு அருளுரை எழுதிக் கொடுத்த இந்த தாசரின் ஞானகாரியம் நிரந்தரமாக நடக்குமாறு ஆசிர்வதித்த நம் அனைவரின் குருகளான பரமபூஜ்ய ஸ்ரீ 108 ஸ்ரீசத்யாத்ம தீர்த்த

ஸ்ரீபாதங்களவருக்கு நம் பக்திபூர்வகமான அனந்த வந்தனைகள். மற்றும் இந்த கிரந்தத்தின் கையெழுத்துப் பிரதியை நமக்குக் கொடுத்து உதவிய ஸ்ரீத்ருவாசார்ய காகண்டகி மற்றும் ஸ்ரீபிரஹ்லாத ஜெ. காகண்டகி அவர்களுக்கும் அனந்த நன்றிகள்.

**ஸ்ரீபிரசன்ன வெங்கட பிரகாஷன மற்றும்**
**ஸ்ரீபிரசன்ன வெங்கட கல்சுரல் அண்ட் சேரிடபிள் டிரஸ்ட் (ரி)**
**சார்பாக**
**ஸ்ரீமதி ரேகா காகண்டகி**
**டாக்டர். சுபாஷ் காகண்டகி**

# ஸ்ரீபிரசன்ன வெங்கட தாசரின்
# ‘ஸமஸ்த நாம மணிகண ஷட்சரண பத்யமாலா’

பாமினி ஷட்பதி - ராகம்: நாடி - தாளம் : த்ரிபுட

ஸ்ரீரமாவர ஸ்ருதிவினுத ஸுக2
ஸாரக்3ரஹக்கெ ஸர்வேஷ ஸுரத்3ரும
வாரிஜாக்ஷ முகுந்த3 முரஹர நாரஸிம்ஹ நமோ ||

க3ருடக3மன கு3டா3ளகாகி2ள
ஷரணஜன ஸுரதே4னு ஸுரமணி
கருணஸாக3ர காமிதார்த்த2த3 து3ரிதாக3ஜஸிம்ஹ |
ஸரசிஜாஸன ஸேவ்ய முக்தா
ப4ரணநமித ஸுரேஷ நிஷாசர
ஹரணஷீல ஸதா3க3மக்ஞேயாதி3 புருஷ நமோ || 1

விஷ்வக3ர்ப்ப4 விசித்ர சரித்ர ஷு
பா4ஷ்வவத3ன விஷால விக்ரம
ஷஷ்வதே3ஷ ஸுவ்யாப்த ஞானானந்த3 ப3லபூர்ண |
நஷ்வரேஷ்வர ஸவித1ரேஷ்வர
ஈஷ்வரேஷ்வர வேத3கோ3சர
ஸுஸ்வபா4வ நவாம்பு3தா3ங்க3 க்ருபாளு க்ருஷ்ண நமோ || 2

ஜனப முனினுத தாடகாந்தக
ஜனகஜாவர லக்ஷ்மணாக்3ரஜ
ஜனகவாக்3வர இந்த்3ரபூஜித ஸூர்ய ஸுதபாலா |
தி3னப குலபதி தீ3னவத்ஸல
வனதி4ப3ந்த4 விஹார த3ஷஷிர
ஹனன காரண ப4ரதபாலக ராமராஜ நமோ || 3

பூதனாந்தக ஷகஜமாரக
வாதசக்ரா நிஷ்பஹர நவ

நீதப்ரிய த[3]தி[4]சார போ[4]ஜக கோ[3]பவது[4]லோல ।
ஸீதகர குலதிலக ஷ்ருதி வி
க்[2]யாத கரிசாணூர ப[3]கஹர
மாதுளாந்தக பார்த்த[2]ஸ்தா[2]பக கௌ[1]ரவாந்த நமோ ।। 4

சக்ர ஷங்க[2] க[3]தா[3]ப்[3]ஜத[4]ர த்ரி
விக்ரமாச்யுத வரஹ வாமன
நக்ரஷிக்ஷக நாக[3]ரக்ஷக நித்யத்ருப்த ஹரே ।
ஷக்ர கி[3]ரிஜார்ஜித பதா[3]ப்[3]ஜ த்ரி
வக்ர வது[4] ஸௌந்த[3]ர்யதா[3]யக
அக்ரூராபி[4]ஷ்டத[3] விது[3]ர உத்[3]த[4]வ வரேண்ய நமோ ।। 5

மதும[4]த[2]ன கைடப[4] விதா[3]ரண
குத[4]ரவர அனந்தவர்ணா
பி[4]த ஜனார்த்த[3]ன ஸாமகா[3]யனவேத்[3]ய அனவேத்[3]ய ।
விதி[4] நிஷேதா[3]லிப்த ஸததவி
புத[4] நியாமக நிர்ப[4]யாத்ம த்ரி
வித[4] ஜனாஸ்ரய குஷஷயன ஸாரங்க[3]பாணி நமோ ।। 6

வாஸுதே[3]வ குபா[4]ஷ வாஹக
வாஸுவீய கபில ருஷப[4] மஹி
தா[3]ஸ யக்ஞ த[3]த்தாத்ரேய நாராயண நிராமய போ[4] ।
ஸ்ரீ ஸனாதன ஸகலபு[4]வவனி
வாஸ ஸங்கருஷண ஸதாஸ்மித
ஹாஸ ஸோம தி[3]வாகரேக்ஷண ஸ்வப்ரகாஷ நமோ ।। 7

சேஷஷயன ஜக[3]ச்சராசர
போஷகாதா[4]ரக ஸ்வஜனஹ்ருத்[3]
பூ[4]ஷணாபரிச்சின்ன அப்ரேயாதி[3] ஸ்ருதிவக்த ।

கோ[4]ஷ[2]வர்ண ஸம்பூர்ணவாச்யா
சேஷ தோ[3]ஷவிதூ[3]ர க[2]ளஜன

பீ4ஷணாப்ராக்ருத அனுபம பரமபுருஷ நமோ || 8

இஹத்ப4ய க்ஷயகர கு3ணத்ரய
ரஹித வ்ருத்3தி4ஹ்ராஸ வர்ஜித
விஹக3 விஷ்வ தைஜஸ ப்ராக்ஞ அவஸ்தா2த்ரயதா3தா |
அஹிதனாஷ பரேஷ க3ஹனாத்
க3ஹன அவ்யய அதிஷயாத்3பு4த
ப3ஹுள ஜீவாந்தரீய அந்தர்ப3ஹி: ஸ்வதந்த்ர நமோ || 9

பூர்ணகாமாம்போ3தி4 ஸ்ரீவட
பர்ணதல்ப பராத்பரா ப்ரதி
வர்ண நிக3மாக3ம அதர்க்யானந்த ஸத்கு3ணநிதே4 |
நிர்ணயாதீ1தா1னிருத்3த4 ஸு
கா2ர்ணவாச்யுத ஸௌக்2யாகர நவ
தீர்ணவிக்3ரஹ பத்மனாப4 உதா3ரலீல நமோ ||10

மோக்ஷவல்லப4 ப4வ மலக்4ன மு
முக்ஷுவரத3 முனீந்த்3ர ஸுமனோ
த்4யக்ஷ தா3மோத3ர த3யாபர ஜிததி3தஜ ஸமர |
பி4க்ஷுகான்வயப்ரிய ஸமாதி4கா
பக்ஷ ஸ்ருஷ்ட்யாத்3யஷ்ட காரண
த3க்ஷாத்4வர பரபி3ரம்ம நிவஹாத்3 பி4ன்னரூப நமோ || 11

கண்ட2கௌஸ்துப4 பூ4ஷணாம்ஷாs
குண்டி2தாத்மைஷ்வர்ய அஷுப4வி
லுண்டி2காதோ4க்ஷஜ உபேந்தி3ர ஸ்ரீ ஸ்ரீஷ அனிருத்3த4 |
குண்டி2த ஜனனமரண ஷிரிவை
குண்ட2 பத்3மாம்லான துலஸி
கண்ட2 மாலான் விதஸுக3ந்த4 ஞானகோஷ நமோ || 12

நிர்ஜரேஷ்டத3 நீதப2லத3 கு
து3ர்ஜனார்த3க தூ3ஷணாந்தக
நிர்ஜிதாகி2ள ஸுஜனபாலக நிஷாசரௌக4 ஹர |
வர்ஜிதகலுஷ நித்யவிபு3த4ர
உர்ஜிதர சாரித்ர விமலகு3
நார்ஜிதோத3தி4 உபத்3வஜ வைராக்3ய புருஷ நமோ || 13

அபுஷயன ஆத்3யப்த இஷ்டஜ
ந பரக3திப்ரத3 ஈ ஷவரனுத
உபமவிரஹித ஊர்த்3வக்ரப்ரிய ருஜுர்பி4 ந்ருபத4ர |
உபதது3ஷ்க்ருத ஈக2மோத3க
சபல ஏகானேக விக்3ரஹ
ஸ்வபர ஐஷ்வர் யோஜ ஔதா3ர்ய ஸஹஸ்ர நமோ || 14
(மேலுள்ள இந்த நுடி – அம், அ: அக்ஷரமாலை இருக்கிறது)

கருணநிதி4 க2ளஹகெ3யராத3 ப
க4ர க4ராதி3 ஸம்யங் ஞானாத்மக ஸு
சரித ப்ராக்ருத ச2விரஹித ஜனபா ஜு4ஷ ருஷபா4
ரூருஜக3த்பர்யஜன கமர ட3
மரத4ரேட்4யனே கூ3ட4கு3ணசித்
பரகுத4ரதி4 கோச்சாரஜாரக3 த3னஹ ஸூத4னத3 நமோ || 15
(மேலுள்ள இந்த நுடி – த2 - அக்ஷரமாலை இருக்கிறது)

நரஸகா2மித பஷுப க4ணிமத3
ஹர ப3லானுஜப4ரித விக்ரம
மருத காங்கெ3யெரக்4ன நெரலேஷ்வர லக்ஷ்மீஷா |
வரத3ராஜ ஷஷிவத3ன ஷக்ருஷ
நிரத ஸர்வபு4க் நுக்ஞ ஹவ்யே
ஷ்வர ஸ்வத்ருப்த ஸ்வபூர்ண லக்ஷ்மீத4ர யக்3ஞாங்க3 நமோ
|| 16
(மேலுள்ள இந்த நுடி – ள – அக்ஷரமாலை இருக்கிறது)

கபட நாடக காலகிதவப4
யபரிஹர கீசகரிபு ப்ரிய
குபுருஷாந்தக கூத3கேஷனெ கைவல்யகேஷ |
விபுலகோஷனெ கௌஷிக முனீந்திர3 ம
க2 பரிபோஷ2க கம்புகந்த4ர
தபன கோடிப்ரகாஷ கஷ்யபஸுத ஸுரேந்த்3ர நமோ || 17
(மேலுள்ள இந்த நுடி – க: – அக்ஷரமாலை இருக்கிறது)

க2ரவிதா3ரக கா2தி3 பஞ்சக
ப4ரத3கி2ளகு3ரோ வ்ருஜஸகீ2மனோ
ஹர ஸுகு2ரபுட ஷோபி4த க2ட்3க3கூ2ர்ச்ச இஷு2பாணி |
ஸுரஸகே2ளன பரஸுகை2க ஷ
ரீர விசிஷ்ட ஸூகோ2த3யாங்க்குர
வரஸு கௌ2தா3க2ண்ட3 பரஷோ து3க்கஹரண நமோ || 18
(மேலுள்ள இந்த நுடி – க2: அக்ஷரமாலை இருக்கிறது)

க3க3னனாபா4கா3த3 சரித கி3
ரிக3ணஸேவ்ய ஸுகீ3தப்ரிய கு3
ப்தகு3ண கூ3ட4தீ4 கே3ஹத்ரயயுத கை3தி3ஹ கோ3கோ3ப்த |
ஸ்வக3த க3லரவ க3வ்ஹராங்கித
ஸ்வக3ஹநோத்தர ஷுப4 ஸுக2கர
ஸுக3மஸூக்ஷ்ம ஸுது3ர்க3மாலய விஜிதரோஷ நமோ || 19
(மேலுள்ள இந்த நுடி – க3: - அக்ஷரமாலை இருக்கிறது)

க4டஸ்ரவண கா4தக லகி4மயக்
சடுலகாத்ராகீ4ஜன ஹரண
படு ரகு4த்3வய பிஷிதபோ4ஜக கோ4கக2த்3யோத |
கடி2ணௌகே4ண்டமான க2ள ஸங்
கட நிவாரக கோ4ரரோத4கர
நடகாகௌ4க4 விதா3ர க4ண்டாசாப தீ3ர்க்க4 நமோ || 20
(மேலுள்ள இந்த நுடி – கை4, க4: - அக்ஷரமாலை இருக்கிறது)

சக்ஷுஷாலய சாருக3ண ஸ்யத்
குக்ஷே சீரத்3வயா சுதேதர
ரக்ஷ சூடா3சேஷ்ட சைத்3யஹராத்3ய சோராரே
ரிக்ஷ ஜாதா வர சௌராகிதி
லக்ஷ ப்ரதிபாத்4யக்ஷ சந்த3ன
வ்ருக்ஷவன ஸ்ருக்3த4ர ருச:ஸ்வனப்ரிய புருஷ நமோ || 21
(மேலுள்ள இந்த நுடி - சி - அக்ஷரமாலை இருக்கிறது)

ச4த்ரசா4ரோச்சி ப ஜ
க3த் ஷிக்ஷக முர ந்ருபசே4தி3னி
ர்வசை4க சர நமோத்3ரேக மாந்த3ஹரா |
ஷத்ருபி4சௌ:ர்ய பூ4ஷித
ஸத்ரபூ4க் ச4ந்தோ3மயாத்மக
புத்ர பௌத்ர ப்ரபௌத்ர ஷோபி4த ஸ்வச்ச4வர்ண நமோ || 22
(மேலுள்ள இந்த நுடி - சே4, சூ4, சோ4, ச4: - அக்ஷரமாலை
இருக்கிறது)

ஜயத1ரானன ஜாட்3யஹர ஜித
ப4யநிசய ஜீவௌக4ஹர க்ஷய
ஜீர்யஜாஸுர ஜனகனுத ஸுரஜேஷ்ட2 ஜைனதி3ஹன் |
லய ஜலாஸ்ரய ஜோதிர் மயதனோ
வ்யய வ்ரு ஔகஸ வந்த்3ய ஜம்பு3னி
லய குவலயாயுஜ ஆனந்த3 ப3லக3 நமோ || 23
(மேலுள்ள இந்த நுடி - ஜு ஜூ ஜ: - அக்ஷரமாலை
இருக்கிறது)

ஜூ4ட3திசர ஜுஞ்சா4மருச்சர
உடு3பசர ஜி4ல்லிக வனேசர
ஔஷதீ4சர ஜூ4ரிகஸுர ஜு4ண்டாவலய ஜூ4ணிசர |
ஒட3னெ ஜு4ங்கரிஸுதலி ஜை4டி3யு
த3ட3தி3 ஜொ4ண்டி3யோள்சரிஸி ஜௌ4ங்கரி
ஸ்யொட3லினொளு ஜு4ங்காரபூர்ண ஜு4ஷபதியே நமோ || 24
(மேலுள்ள இந்த நுடி - ஜு - அக்ஷரமாலை இருக்கிறது)

பட லஹைம கடாஹப4ஞ்சக
நிடிலத்3ருக் டீகார்த்த4 ஸுப்ரிய
கடுமதிக்4ன ப4வேட்4ய டங்கான்வித கராப்3ஜேஷா ।
ஜட2ர ந்ருப ஸுகுடா2ர த4ரஸத்
கடி2ணகர ஸுகடோ2ர யோத4ன
மட2விகார ஷரௌங்க4ஸம்ஹர ந்ருஹரேப்4ருகு3ஜ நமோ ।। 25
(மேலுள்ள இந்த நுடி – 1. டோ1, டி1, டை1, டோ1, டீ1, ட1: மற்றும் 2. டீ2, டு2, டோ2, டெ2, டை3, டே3, டம்3, ட3: - அக்ஷரமாலை இருக்கிறது)

குண்ட3 லீஷ ஷ4டா3ஸ்ய ஸன்னுத
பண்டி3தார்ச்சித பண்டு3ராம்ப3க
மண்ட3லேஷ பி3டௌ3ஜனுத ந்ருவிட3ம்ப3ன சரித்ர ।
பண்ட4ராபுர ராஜ விட2லா
க2ண்ட3மதி பாக2ண்ட3 தூ3ஷ2க
ஷண்டா3மரக ப்ரபு4க்4ன முனி புண்ட3ரீகவரத3 நமோ ।।26
(மேலுள்ள இந்த நுடி – 1. டீ3, டூ3, டெ3, டை3, டோ3, ட3: மற்றும் 2. ட4 வைத் தவிர அனைத்து அக்ஷரமாலை இருக்கிறது)

ப்ரணதப்ரிய ப்ரணாயப்ரிய விப்ர
அணுமஹத் ரமாதே3வி ப்ராணதே3வரு கணேஷப்ரிய
க்ஷண க்ஷணைக ஸுவ்யக்த தா4ரண
ந்ருண க3ணௌத்வாடணா ரணௌகா4ங்
க3ண பயோச்சாசண கு3ணாங்க1 ஷரண்ய ஸுக2த3 நமோ ।। 27
(மேலுள்ள இந்த நுடி – ணூ, ண: – அக்ஷரமாலை இருக்கிறது)

ஸத்யவ்ருத ஸத்வாத்ம காக3மாட்4ய
தத்வேஷ ஸூரரு திலமாத்ரார்பகேஷ்டத3
மித்2ய தூ3ஷ2க தீர்த்த2ஸ்ரவ துர்யாத்மா தூர்ணப்ரிய ।
நித்ய தேஜன தைத்திரிய ஸ்ருதி
ஸ்துத்ய தோயாயுன த்4ருதௌஷ2த4
பத்2யதாந்த்ரிக பரமசேத1: பரமகால நமோ ।। 28

ப்ரத2ம புருஷ ப்ருதா2த்மஜான்ருப
மதி2த வீர்ய ரதீ2ந்தி3ர பரிசர
ப்ருது2விபூ1ஜித ஸ்தூ2லக்ருத்ய யதே2ச்ச ஸ்தை2ர்யமதே |
பதி2க ஸத3ன யதோ2க்த ப2லத3 வி
பத2ரதௌ4க4ப ஸூரத2 சரண கு
பத2தூ3ரக3 பி3ரம்மஸ்த1ம்பா4ந்த2ஸ்த ஸ்வஸ்த2: நமோ || 29
(மேலுள்ள இந்த நுடி - த2ம் - அக்ஷரமாலை இருக்கிறது.
ஸ்தூ, ஸ்தை, ஸ்த: என்று வரிசையாக வந்திருப்பதால், தூ2, தை2
மற்றும் த2: வும் வந்ததாக ஆயிற்று).

த3ஹர வ்யோமக3 தா3த்ருதா3ந்த ஹ்ருத்3
கு3ஹஸத3ன கர்த்த து1ஹினபி3ந்த3க3
அஹோக4 தீ3ர்க்க4மயூக2 து3ர்கா3 வ்யாக்ருதாம்ப3ரகா3 |
ஸ்வஹிக3 தூ3ரக3 தே3வதைத்யரக3
தோ3ஹன கார்யக3 தௌ3த்யகர்மக3
த்3ரோஹிணதே3ஹ்யக3 த3ண்ட3காரக3 த3ர்ப்பகஸஹ நமோ ||
30
(மேலுள்ள இந்த நுடி - தி3, த3: - அக்ஷரமாலை இருக்கிறது)

த4ர்ம நிசயப தா4து ஸமூஹப
கர்மதி4ஷ2ணப தீ4ர ப்ரக்ஞப
நர்மவாக்3மிப து4 நிகத3ம்ப3ப தூ4ர்ஜ சாங்கிதப |
சர்மக2ட்க3ப தே4னு விப்ரப
வர்ம தை4ர்யாங்கித பாதோ4க்ஷஜ
நிர்மலாத்ம தௌ4ம்யர்க3ப த்4வநிப ஜனப நமோ || 31
(மேலுள்ள இந்த நுடி - த4ம், த4: - அக்ஷரமாலை இருக்கிறது)

நக3வித்4ருதகர நாக3க3ர்வஹன்
நிக3மரிபுனாஷக நீதபிரபு4
ஸுக3ணஸேவ்ய நுதஜனமந்தா3ர நூதனாப்ஜாங்க்4ரி |
யுக3யுகா3ந்தர நேமனைஷ்2டிக
ஸுகு3ணனோத3தே4 ஸௌக3னந்த3க
விக3த ஸ்னேஹவிமனஷ்ட ஜக3தோ3த4ரணஷீல நமோ || 32

(மேலுள்ள இந்த நுடி – நௌ மற்றும் நः அக்ஷரமாலை இருக்கிறது)

பவன மத பர பாகபி4த்தம்
ஸ்தவனநிரத பினாகிமோஹக
ஸுமது4 பீயூஷத4ர ஸுபுஷ்ப விஹாஸ பூர்ணப்ரபா4 |
கவிவரத3 ஜைமினி ஸுமந்த பை
ல வைஷம்பாயன ஷுகவிபோஷ2க பௌரா
ண விரசக பஞ்சராத்ர பா4ரத ஸூத்ரகர்த்த நமோ || 33
(மேலுள்ள இந்த நுடி – பே1 மற்றும் ப1: - அக்ஷரமாலை இருக்கிறது)

பலிதஸத்3ரஸ பா2லலேக2க
லலித ஸ்பிதாத்மக ஸ்பு2டித4வரு
ஜ்வல மருத்ப1யः பே2னபு4க்பதே விஸ்போ2டக கசாஹ |
ப3லப3லத3 பா3ணக்4ன பி3லகி3ரி
நிலய முனி ஹ்ருன்னிலய பு3த4 மண்
ட3ல விராஜித போ3த4யுத ப3ந்த4மோக்ஷரக நமோ || 34
(மேலுள்ள இந்த நுடி – பீ2, பூ2, பை2, பே2, ப2ம், ப2: மற்றும் பீ3, பூ3, பெ3, பை3, பே3, ப3: - அக்ஷரமாலை இருக்கிறது)

ப4த்ரபத3 பா4வுகபி4ஷ2க்3வர
ருத்3ர பீ4கர பு4க்திதா3 தா3
ரித்3ர்யதூ3ரக பூ4ரிபூ4தித3 பே4த3வாதீ3ஷா |
ஹ்ருத்3ருஜஹன் பை4ஷ்மீஷ போ4ஜேஷா
க4த்3ரி குலிஷ குஷஸ்த2ளோக ஸோ
பத்3ரவார்த்த3க பௌ4மவரப்ரத3 ப4ங்க3ரதித நமோ || 35
(மேலுள்ள இந்த நுடி – ப4: - அக்ஷரமாலை இருக்கிறது)

மகரத்4வஜ ஜிததமாஸ கா2மிதா
ப4குலஜீவனமீன முரலீத4
ரகர மூலகவீந்த்3ர மேத்4யசரித மைது3னபா |

ஸுகரமோஹக மௌனிபூஜித
சகிதகரனுஜீந்த்3ர கருணாம்
ப3க ப3காந்தக மஞ்சுஹாஸ மஹாதி4ராஜ நமோ || 36

யக்ஞ பி4க்ஷுக யக்ஞரத இம்
த்3ராக்ஞா தூ3ஷக ஈஷணாத்4ருத
ஸுக்ஞராட்3யுக3 மூக3ஸம்ப4வ மூத2போத்தம்ஸ |
அக்ஞபி4த்3யேகேஷ மௌனிக3
ணக்ஞ மௌவ்வனபும்ஸ மந்த்ரா
ர்த்த2க்ஞ போஷ2க கிங்கரோத்4ருத காமகாஷ்ட2 நமோ || 37
(மேலுள்ள இந்த நுடியில் - யா, யே, யீ, யு, யெ, யை, யோ, யம் ய:
- அக்ஷரமாலை இருக்கிறது)

ரஸிகராஜிப ராஜ்யசக்ரப
வஸு பரிக்ஷப குலபரீக்ஷிப
பரர பாந்த2ப ருஜிகு3ணௌக4ப ரூப ப3ஹுரூபா |
அஸுப ரேதோத்ப4வப ரைக3ப
ரஸப ரோரௌப்ய நக3பபா
குஸும பா3ணப ரங்கா3க்ஷேத்ரப ரஹஸ்ய பால நமோ || 38
(மேலுள்ள இந்த நுடியில் ரஹ = ர: என்று
பயன்படுத்தியுள்ளார்).

லவஜனக லாக4வகராஜ்ப லி
ப்தவிமல ஸ்ரீசந்த3னாங்க3 லீ
லாவினோத3 வனசரபாவன லுப்தவது4 ப2ல போ4க்தா |
மலாப4 போ3த4க ப4வஜபாக்ஷர
அதீஷ மோஹமத3 விரஹித லோப4
க்4ன லௌகிக ப்ரவஹேத லங்கௌக ஸார்த்த3க லுப்ததுஷ்ட
நமோ || 39
(மேலுள்ள இந்த நுடியில் லூ, லெ, லை மற்றும் ல:
வந்திருக்கிறது).

வக்த்ருவர வால்மீகி க்ருதீஷ வி
வித்தமதி பரரீஷ க3திப்ரத3
வ்யக்த ஸுசரித பூர்த்4வபட ப்ரஸ்தா2ப வேத்3ய நமோ |
ரிக்தப4ய வைதே3ஹி மனோஹர
த்யக்தப்ருக்ருத வொம்பே1ஷதா4க்ஷயா
த்3யுக்திவாசக வந்த்3யவந்தி3த வஹகவாஹக நமோ || 40
(மேலுள்ள இந்த நுடியில் – வீ, வு, வெள – அக்ஷரமாலை வந்திருக்கிறது).

ஷமயுதாக்ரணி ஷாம ஷிவகர
க3மன ஷீக்4ரக3 ஷுத்3த4வித்3யோ
த்3யம ஷுசிவ்ருத ஷூர்ப்பனகி2மத3 ஹர்த்தா சேஷ ஸஹ |
ஷமத3மாம்பு3தெ4 ஷைலக்3ருஹ ஸம்
யமீக3ணார்ச்சித ஷோகதாப ப்ர
ஷமன கௌஜாரமுத மஹாப்ரபோ4 ஷாந்தஷஸ்த நமோ || 41
(மேலுள்ள இந்த நுடியில் – ஷௌ, ஷ: – அக்ஷரமாலை வந்திருக்கிறது).

ஷட்3விபூ4தே நிஷா2த3ப4யஹர
ஷட்3வதூ4த4வ ரிஷிவதூ4ஸக2
ஷாட்3வலசர இஷ்டீக இஷு2காண்ட3 ஸவிஹாரா |
ஷட்3விகாரதீத விஜிதா
நட்3வேஷ உசித ஸௌரபே4யபூ4
விட்3வரக்4ன வ்ருக்ஷாக்4ன ஸ்வர்ண விஷ2ங்க3சாப நமோ || 42
(மேலுள்ள இந்த நுடியில் – ஷூ, ஷெ, ஷை, ஷோ, ஷே, ஷ: – அக்ஷரமாலை வந்திருக்கிறது).

ஸரஸிஜானன ஸாத்4யஸித்3த4 நி
கரகரார்ச்சித ஷிக்ஷாரக்ஷக
ஸுரஹ்ருன் மந்தி3ர ஸூரி ஹ்ருத்3கு3ஹஸேவ்ய ஸுரமொளி
|

நிரஜஸைந்த4வ ஷாஸ்திர ஸ்தோமா
ப4ரணதோஷ2க ஸௌம்யரத்னா
கரக3 நிரஞ்சன ஸஞ்சயோத்ஸவ ஸஹஜஷௌர நமோ || 43
(மேலுள்ள இந்த நுடியில் – ஸீ– அக்ஷரமாலை வந்திருக்கிறது).

ஹலிஸஹக3 ஹார்த்தி3கமனோக3த
ப2லத3 ஹிரண்யவஸன ஹீரா
வலய ஹுதபு4க்3 ப3லத3 ஹூணபவித்ர ஹேத்வார்த்தா2 |
ஜலதி4 புரபதெ ஹைமராஷித3
ப3லத3 ஹோமத3 ஹௌத்ர பா4க3த3
ஸலலிதோத3ன பரமஹம்ஸ ஸத்கூலஹருஷ நமோ || 44
(மேலுள்ள இந்த நுடியில் – ஹ: – அக்ஷரமாலை வந்திருக்கிறது).

பளவாந்தகளாட்4யயக்ஞா
வளிக்ருதாத3ர நிர்வளீக அ
கி2ள க்ருபாளுவரேண்ய ஜீவ ஜிளுக த்ருப்திகர |
ஸ்த2ள களேவர ப4ரித பி3ரம்மவீ
புள களைக்ய தளோர்த்4வ மத3வி
வ்ஹள பௌளக4னெ நிஷ்களங்க களா ப்ரபூர்ண நமோ || 45
(மேலுள்ள இந்த நுடியில் – ளௌ மற்றும் ள: – அக்ஷரமாலை வந்திருக்கிறது).

க்ஷதவிதூ3ர க்ஷௌரும்பு3 ப3ந்தி3த
க்ஷிதி ப4ரஹர க்ஷீர நிதி4 க்3ருஹ
அதுள க்ஷுத்3ராரெ க்ஷூராயுத3னெ க்ஷீமைஷ்வர்ய
க3திக3தெ க்ஷௌ தீ3பைக்ய க்ஷோணி
பதிபதெ க்ஷௌமரதா2 க்ஷௌந்தி ப4
ரித ந்ருகோத்3த4ர க்ஷத்தாவல்லப4க்ஷ த்ரியவேஷ நமோ || 46
(மேலுள்ள இந்த நுடியில் – க்ஷை, க்ஷம், க்ஷ: – அக்ஷரமாலை வந்திருக்கிறது).

ஏகராத்3 விஷ்வேக காரக
ஏகவ்யாபக ஏகஸ்தா2பக
ஏகபோ4ஜக ஏகயோஜக ஏகலோகாத்ம ।
ஏகஸ்ருங் பு4வனைக வர்த்த4க
ஏகமாரக ஏக தாரக
ஏக யாசக ஏக ஸூசக ஏக பத்ர நமோ ।। 47

த்3வயக்ரியேஷ்வர த்3வய ப்ரதே2ஷ்வர
த்3வய ஸுவிஸ்தார த்3வய விகோ3சர
த்3வய நிவாரக த்3வயப்ரதா3ரக த்3வய ஸமய பூர்ண ।
த்3வய ப்ரவாஹக த்3வய நியாமக
த்3வய நிரந்தர த்3வய த்3வயேதர
த்3வய ஸுபோ3த4க த்3வய ப்ரஸாத3க த்3வய ப4யக்4ன நமோ ।। 48

த்ரியுக3 த்ரிவிக்ரஹ த்ரிபத3 கா ல
த்ரயக3 த்ரிதி3வப த்ரிபத2கா3பி த்ரி
நயனாரிஹன் த்ரிபுரமோஹக த்ரயத்ரிம்ஷத் ஸுரப ।
த்ரியுகு3தி3த த்ரிகு3ணேஷ ஸாக3ர
த்ரியபபஞ்சக த்ரிவித4பா4ஷ்ய நி
சயர சக த்ரித3ஷார்ச்ச த்ரிஜக3து3த்3த4ரண மார்க்க3 நமோ ।। 49

சதுர்விதா4த்மா சதுர்ப4ஜாங்கித
சதுர்மூபா3தி3ப சதுர்விதா4ர்த்த2த3
சதுர்வர்ணாஸ்ரம சதுர்முக்தி சதுஷ்டயேஷ்வரதா ।
சதுஸ்ஸமுத்ரகெ3 சதுரதரமதி
சதுர் விதா4யத சதுர்ப3லாம்பு4தி3
சதுர்வேதா3ர்த்தி2த சரண சதுஷ்யாஸ்த்ரபூஜ்ய நமோ ।। 50

பஞ்சமுக2 முக2பஞ்ச முக2னுத
பஞ்சஜனரிபு பஞ்ச மோக்ஷத3
பஞ்ச பாண்ட3வ ப்ராணவர பஞ்சாக்ருதவ்ராத ।

பஞ்ச ஷரபித பஞ்சவ்யோஹ ஸு
பஞ்சபே4த3மத பஞ்ச பர்வஹ
பஞ்ச காலக்ஞக்ஞ ஸம்ப்4ருத பஞ்சபா3ண நமோ || 51

ஷட்ஸஹோத3ர ஷட்சரணசர
ஷட்பத்னான்ஹன் ஷடூ3ர்மிஹர
ஷட் ஷக்தாத்மக் ஷட்கு3ணேஷ்வர ஷட்3ருத ப்ரவஹ |
ஷட்கராபி4த3 ஷட்பரோக்ஷத3
ஷட்க்ருக3 ஷட் ஷாஸ்த்ய ப்ரய த1ம
ஷட்கஸஹக3 ***** நமோ || 52
(மேலுள்ள நுடியில் கடைசி வரியில் கடைசி இரு நாமங்கள் மட்டும் கிடைக்கவில்லை).

** 53ம் நுடி கிடைக்கவில்லை

அஷ்டகாரண ஷிஷ்டமஹிஷேய
ரஷ்டகாஸ்ரம அஷ்டமதஹர
அஷ்டகாஷ்டக அஷ்டபூ4ததா3வ்யஷ்ட ஸ்ருத்யஹ |
அஷ்டத3ள அக்ஷோபஜஹர
அஷ்ட நாக3ப அஷ்ட பு4ஜத4ர
அஷ்டாயுத4 ஸம்ப்4ருதாஷோஷ2த4 த்ரிபா4ங்க3 நமோ || 54

நவஸுரத்னா ப4ரணயுக த்ரி
ர் நவக1ப்ரிய நவத்3வார புரப்ரபே4ம்
நவஷக்த்யாத்மக நவக்3ரஹ நவத3யாகு3ண |
நவரஸேஷ்வர நவப்ரஷேஷப
நவ நிதீ4ஷ நவார்த4னே தா4
நவரிபுவெ நவகோச்ய மரரிம் நமித சரண நமோ || 55

த3ஷஷதானன த3ஷஷதாம்ப3க
த3ஷஷத ஸுதோர்த3ண்ட3 த4ரக2ள
த3ஷத3ஷாபி4த3 த3ஷஷதாபி4த3 க2கா2மரப

த3ஷவரூத2ஜ த3ஷமுக2க்4ன த்ரி
த3ஷ ப3யாந்தக த3ஷககுப4 ஹஸத்
த3ஷன த3ஷமதிபா4ஷ்ய ரதத3ர்ஷனி ஷத்3ரக்ஷ நமோ || 56

ஷதஸுகா2ர்த்தி4த ஷதாப்3தி2ஷயன ஸு
ஷதமகா2ர்ச்சித ஷத கோ3பீபதெ
ஷதஸோமப ந்ருஷஷதக ஸ்தா2பக ஷதஷதாம்ஷத4ரா |
ஷதகுஞ்சஹன் ஷதகுலோத்3த4ர
ஷதாயு:ப்ரத3 ஷதாபராத4ப
ஷதஸஹஸ்ரார்க்காபி4 ஷதபத்ராக்ஷஸுக2த3 நமோ || 57

க்ஷிதிப்லவோத்3த4ர க்ஷிதிப்4ருலோத்3த4ர
க்ஷிதிதளோத்3த4ர க்ஷிதிசரனகர
க்ஷிதி த்ரிபத3த4ரக்ஷிதி பக்ஷயகரக்ஷிதி கன்யாம்ஸகர |
க்ஷிதிஜனாகர க்ஷிதிக2ள மோஹக
க்ஷிதிப3ரார்த்த3க க்ஷிதிதிபாலனகர
க்ஷிதிவலயசர க்ஷிதிஜனேதர க்ஷிதி ஸுரேஷ நமோ || 58

அம்பு3க3மன பயோம்பு3மத2ன ல
யாம்பு3 தளகா3ருணாம்பு3 ஸடபா3
ஹ்யாம்பு3 ப்ரவஹக அம்பு3ஷோஷக அம்பு3தி4 மத3க்4ன |
அம்பு3க்3ருஹ மஹாம்பு3தே4 த3
ர்மாம்பு3ஸ்ரீமத் அம்பு3ஜேஷ ஸு
தா4ம்பு3தி4 ஸமானோத3யாம்பு3த3 கா3த்ரக பித நமோ || 59

அக்3னிபி3ப4 அப்3த்4யாக்3னி ஸஹசர
அக்3னிமய ப்ரளயயாக்3னி லோசன
அக்3னி கார்யாக்3ஞாக்3னி பூஜித அக்னிஹோத்ர யுதா |
அக்3னிருத அன்னாக்3னி கோபன
அக்3னிஸ்தா2பக அக்3னிவ்யாபக
அக்3னிவர்த்த4க அக்3னிதீ3பக அக்3னிவர்ண நமோ || 60

வாதஜனக சக்ர வாதஸமபி4ரம
வாதாக்3ரஜ நாஸிக ஜலய
வாத ஸமக்வாஷாங்க வாதப்4ராத்ருஹித கரணௌ ।
வாத ஸக2க3த வாதப4வனுத
வாத ஸுதமத வாதரஷன ஸு
வாதஸம ஹரிக3மன ஸூத்ரவாத ஜனக நமோ ।। 61

அம்ப3 ரமணஜார்ச்சித நவாம்ப3ர
அம்ப3ர க்ரீடா3ம்ப3ராளக
ஸம்ப4ஜித ஸ்வாம்ப3ர ப4ரித பத3 அம்பா3ரேணுகன் ।
அம்ப3ரக3வங்கேந்தி3ர த்3வாம்ப3ராப ஹராம்ப3ர
அம்ப3ரக3 ஹயகா3ம்ப3ரபம் பாம்ப3கஸ நாபி4 நமோ ।। 62

ஷப்3த3போ3த4க ஷப்3த3காரக
ஷப்3த3 க4ர்க4ர ஷப்த3 ஹூகர
ஷப்3த3 பாரக3 ஷப்3த3 வீரக3ம்பீ4ர ஷப்3தா3ங்கா ।
ஷப்த3ஷோத4க ஷப்3த3 தூ3ஷ2க
ஷப்3த3 ஸ்தா2பக ஷப்3த3 விஸ்த்ருத
ஷப்3த3 பி3ரம்மாக்3ஞேஷ ஷப்3தா3தீத ஷப்3த3 நமோ ।। 63

வ்ருஷ2ப4 கே3ஷ்டமிது2ன மர்த்த3க
விஷ22ய கர்கஷ ம்ருத்யு பரிஹரி
விஷ2ரத3ன கன்யா பதிஸக2 வ்ருஸ்சிகாபா4ங்கா3 ।
விஷ2பத4ன ஹர மகரகுண்ட3ல
விஷ2கும்ப4 ஸ்தன பானதத்பர
விஷ2ய ஸுக2மய மீன மேஷா2ரூட4 விஷ2ய நமோ ।। 64

அஷ்வரூப மஹாப4ரணி ஸக2
விஷ்வக்ருதி காயங்கி3 வரரோஹி
ணீஷ்வரோத்3ப4வ ம்ருக3மதா3ங்காரி த்3ரவிணஹரணௌ ।

நிஸ்வஜன புனர்வஸூத3 கு3ரோர்கு3ரோ
ஹ்ரீஷ்வராஸன பித்ருசயார்ச்சித
ஸ்வஸ்வபா4க்3ய ஸூபூர்ணாம்ருத மர்யோத்தர ஸூஹஸ்த
நமோ || 65

சித்ரரத2ஸாதி ஷததூ3ர ம
ருத்தானுராத4 கோத்3த4ர
கோ3த்ரி ஸூர்க2ர மூலராக்ஷஸ வந்த்3ய ஜலரூப |
ஷத்ரு ஸ்ரவணாஹித த4னிஷ்ட2 ந
க்ஷத்ர ஷதபதி குலஜ மத்3யபூ
ர்வோத்தர பா4த்3ரபதே3ஷ ரேவதி ரமணௌஜ நமோ || 66

கரார்ச்சித கிதவஹர ஸத்ய
வ்ருதப க்ரீடா3பத3கு த4ரகு
ஜித நிக3மவேத்3ய கோ3க2ரமுக2 கோஸல ஜவரபா |
ஸ்ருதிஹராஹர கண்ட2ரேகா2ங்
கித கஷ்யபஸூத கருணபா4ஸக
ஷத ஸூபோ3த்3த4ர ஸிததரோத3ர ஷப2ரிரூப நமோ || 67

கமட2காலய கில்பி3ஷோ2த3ர
விமல லீலாசேஷ்ட குலகி3ரி
ப்4ரமணகர குத4ரேஷ்வர கேஷ்வரேஷ்டகர |
அமித கைதவாஷ்ட கோமல
விமல ஜட2ரகடி2ண வபு:கௌ
ர்ய மஹத்க்ருதிப்ரிய கண்ட2லம்ப3 கச்சபாத்ம நமோ || 68

கனகப4ய காபுருஷ மத2ன கி
சினஜ கீர்த்தித யக்ஞரு குஷமய
தனுஹ்ரீகுத4வ க்ருபா ஷௌண்ட3கைஷோர குஜவந்த3 |
மனஸமஸ்வன ரோப3க4ர்கு4ர
மனு ஸனக நுத காதுகாடண
கனககி3ரிசர கஞ்சப4ய கஷ்டஹரண நமோ || 69

மத்4வவல்லப4 மத்4வதீர்த்த2க3
மத்4வமதபர மத்4வபதே முனி
மத்4வரமண ஸ்ரீமத்4வ யதினுத மத்4வஸூரபா
மத்4வபோஷ2க மத்4வபா4ஷ2க
மத்4வதோஷ2க மத்4வலிபுஹர
மத்4வகாவத3 மத்4வஹ்ருத்கு3ஹ மத்4வவிப4வ நமோ || 70

ப்ரஸன்ன ப4வன ப்ரஸன்ன பா4ஷ2ண
ப்ரஸன்ன கார்ய ப்ரஸன்ன கு3ணநிதே4
ப்ரஸன்ன நாமத ப்ரஸன்ன தேஜத3 ப்ரஸன்னதர மூர்த்தே |
ப்ரஸன்ன புருஷ ப்ரஸன்ன ஸோங்கித
ப்ரஸன்னகத2ன ப்ரஸன்ன பூ4ஷ2ண
ப்ரஸன்ன சரித ஸ்ரீப்ரஸன்ன வெங்கட ப்ரஸன்ன க்ருஷ்ண
நமோ || 70

**** குருமத்வேஷார்ப்பணமஸ்து ****

# பெயர்களின் விளக்கங்கள்

**ஸ்ரீரமாவர ஸ்ருதிவினுத ஸுக[2]**
**ஸாரக்[3]ரஹக்கெ ஸர்வேஷ ஸுரத்[3]ரும**
**வாரிஜாக்ஷ முகுந்த[3] முரஹர நாரஸிம்ஹ நமோ || பல்லவி**

**1. ஸ்ரீரமாவர :**
ஸ்ரீ - இந்த ஸ்தோத்திரத்திற்கு மங்கள பதமாக பயன்படுத்தியிருக்கிறார். சர்வசம்பன்னள். ரமா - லட்சுமிதேவி. வர - சிறந்த. 1. பிரபுத்வம் 2. சாமர்த்தியம் 3. புகழ் 4. ஸ்வரூப அழகு 5. ஞான 6. அக்ஞான - இந்த அறுகுணங்களின் பரிபூர்ணத்தினைக் கொண்டிருக்கும் ஸ்ரீரமா - லட்சுமிதேவியின் வல்லபனான - ஸ்ரீஹரி.

**2. ஸ்ருதி வினுத :**
ஸ்ருதி - வேத. வி - விசேஷமாக. நுத - புகழப்படும். அனைத்து வேத உபநிஷத்களால் விசேஷமாக புகழப்படுபவனான - ஸ்ரீஹரி.

**3. ஸுகஸாரக்ரஹக்கே ஸர்வேஷ**
ஸுக+ஸார+க்ரஹக்கெ+ஸர்வேஷ. ஸுக - ஸௌக்கியம், நிம்மதி. ஸார - சாரம். ஸுகஸாரக்ரஹ = விசேஷமாக சௌக்கியத்தைக் கொடுக்கும் கிரகம். ஸர்வ = அனைத்து. ஈஷ = தலைவன். விசேஷமாக சௌக்கியத்தைக் கொடுக்கும் அனைத்து கிரகங்களுக்கு தலைவனான - ஸ்ரீஹரி.

**4. ஸுரத்ரும**
ஸுர - தேவ. த்ரும - மரம். வேண்டியதைக் கொடுக்கும் கல்பவ்ருக்ஷத்தைப் போன்றவனான - ஸ்ரீஹரி.

**5. வாரிஜாக்ஷ**
வாரி+ஜ+அக்ஷ. வாரி = தண்ணீர். ஜ = பிறந்த. வாரிஜ - தண்ணீரில் பிறந்த கமலம். அக்ஷ - கண். தாமரையைப் போல விசாலமான கண்களைக் கொண்ட - ஸ்ரீஹரி.

**6. முகுந்த**

முக்திம் ததாதீதி - முகுந்த: சுஜீவிகளுக்கு முக்தியைக் கொடுப்பவனான - ஸ்ரீஹரி.

**7. முரஹர**

முர+ஹர = முர என்னும் அசுரனைக் கொன்றவன். அதிதியின் கர்ண குண்டலங்களை திரும்பப் பெறுவதற்கு சத்யபாமையுடன் கருடனில் மேலேறி நரகாசுரனுடன் போர் புரியச் சென்ற காலத்தில் நரகாசுரனின் கோட்டையில் நுழையும் காலத்தில், தன்னை தடுத்த அவனின் சேனாதிபதியான 'முர' என்னும் அசுரனைக் கொன்ற - ஸ்ரீஹரி. (பாகவத 10-63).

**8. நாரஸிம்ஹ**

மேல்பாகம் சிங்கம், கீழ்பாகம் மனிதனின் ரூபத்தைக் கொண்ட ஸ்ரீஹரி. க்ருதயுகத்தில் அங்கிரஸ சம்வத்ஸர வைசாக சுத்த சதுர்த்தி, ஸ்வாதி நட்சத்திரம், பரிக யோக, சனிக்கிழமை, பகல் 28 நாழிகையில், வெளிப்பட்ட 'நரசிம்ம', ஹிரண்யாக்ஷகனைக் கொன்றான்.

ஸ்ரீஹரியின் தரிசனத்திற்காக வைகுண்டத்திற்கு வந்த ஸனக, ஸனந்தாதிகளை த்வாரபாலகர்களான ஜய விஜயர் தடுத்தனர். ஸ்ரீஹரியின் சான்னித்யம் மற்றும் தரிசனம், நம்மைப் போல உங்களுக்கும் கிடைக்காமல் போகட்டும் என்று ஸனக ஸனந்தனாதிகள் அவர்களை சபித்தனர். அவர்கள் தங்களின் சாப பரிகாரத்திற்காக ஸ்ரீஹரியிடமே முறையிட்டனர். அவர்கள் மூன்று முறை பூமியில் பிறந்து, ஒவ்வொரு பிறவியிலும் ஸ்ரீஹரியினாலேயே கொல்லப்பட்டு, கடைசியில் ஸ்ரீஹரியிடம் சேர்வார்கள் என்று ஸ்ரீஹரி கூறினார்.

ஜய விஜயர் முதன் முறை, ஹிரண்யாக்ஷ, ஹிரண்யகசிபுவாக பிறந்தனர். ஸ்ரீஹரி, ஹிரண்யாக்ஷனை 'வராஹ' அவதாரத்தினால் கொன்றான். ஹிரண்யகசிபு, தன் மகனான பிரகலாதனை, ஸ்ரீஹரியிடம் இருக்கும் பக்தியை விடுவிக்க, சாம, தான, பேத, தண்ட ஆகிய உபாயங்களை பயன்படுத்தினான். கடைசியில் தன் மகனை நிறுத்தி 'உன் ஸ்ரீஹரி எங்கு இருக்கிறான்?' என்று

கேட்டான். 'அவன் தூணிலும் இருக்கிறான், துரும்பிலும் இருக்கிறான்' என்று பதில் வர, 'இந்த கம்பத்தில் இருக்கிறானா?' 'ஆம்' என்ற மகனின் பதிலைக் கேட்டு, தன் கை முஷ்டியினால் அந்த கம்பத்தை பலமாக உதைத்தான்.

அப்போது ஸ்ரீஹரி, தன் சரீரத்தின் மேல்பாகம் சிங்கத்தைப் போலவும், கீழ்பாகம் மானவனாகவும் 'நரசிம்ம' ரூபத்தினால் அந்த கம்பத்திலிருந்து வெளிப்பட்டு, அந்த அசுரனை, பிரம்மனின் வரத்திற்கு பங்கம் வராதவாறு – பகலும் இரவும் இல்லாத மாலை நேரத்தில், வீடும் வெளியேயும் இல்லாத வாயிற்படியில், ஸ்வாமியும் மனிதனும் அல்லாத 'நரசிம்ம' ரூபத்தினால் கொன்றான்.

அசுரர்களுக்கு மானவர்கள் ஆகாரம் ஆகையால் மற்றும் தாம் அவர்களை விட பலம் மிக்கவர்களாகையால், அவர்களால் தனக்கு மரணபயம் இல்லை என்று, பிரம்மனிடமிருந்து, அவர்களால் தாங்கள் கொல்லப்படக்கூடாது என்ற வரம் பெற்றிருக்கவில்லை. இத்தகைய 'நரசிம்ம' ரூபி – ஸ்ரீஹரி. தைத்யனின் வயிற்றைக் கிழித்தபோது நரசிம்மன், அப்போது பார்த்த காரணத்தை, குடலை மாலையாக தரித்தபோது, அதன் காரணத்தை சொல்லியவாறு, தைத்யனின் தேகத்தில் தன் பக்தனான 'ஜய' என்னும் சுஜீவி இருக்கிறான் என்பதை சிந்தனைக்கு கொண்டு வந்தார் – என்று ஸ்ரீபுரந்தரதாசர் கூறுகிறார்.

ராக: தன்யாஸி. தாள: ஆதி

தானவன கொந்தத்தல்ல காணிரோ ||ப

கானவினோதி நம்ம தோரவெய நரஸிம்ஹ
அச்ச ப்ரஹ்லாதனெம்ப ரத்னவித்த ஒடலொளு
பிச்சி பகிது நோடிதரின்னெஷ்டு இத்தாவெந்து ||1

நெண்டதனவ பெளெஸெ கருள கொரளொளு
கண்டு ஹாகிகொண்டனெஷ்டு ஸ்னேஹ ஸம்பந்ததிந்த ||2

தோரவெய நரசிம்ஹ ப்ரஹ்லாத பாலக

உரிமொரெதெய்வ நம்ம புரந்தர விட்டல ||3

**க$^3$ருடக$^3$மன கு$^3$டா$^3$ளகாகி$^2$ள**
**ஷரணஜன ஸுரதே$^4$னு ஸுரமணி**
**கருணஸாக$^3$ர காமிதார்த்த$^2$த$^3$ து$^3$ரிதாக$^3$ஜஸிம்ஹ |**
**ஸரசிஜாஸன ஸேவ்ய முக்தா**
**ப$^4$ரணநமித ஸுரேஷ நிஷாசர**
**ஹரணஷீல ஸதா$^3$க$^3$மக்ஞேயாதி$^3$ புருஷ நமோ || 1**

**9. கருடகமன**

1. கருடவாஹன – கருடனின் மூலம் செல்பவன் (பாவபிரகாசிகா) 2. கருடன் சஞ்சரிக்குமாறு அருள்பவன் 3. வஹன – வாகனமாக உள்ள அல்லது வாகனமாக கொண்டிருக்கும் என்னும் இரு அர்த்தங்களைக் கொண்டிருக்கிறது. தங்கமயமான ஸ்ரீஹரி சுவர்ண கருடனில் இருந்து, தன்னை தானே தாங்கிக் கொண்டிருக்கிறான். வாஹ்ய – வாஹக என இரண்டும் அவனே ஆகியிருக்கிறான். அவனே ஸ்ரீஹரி.

**10. குடாளக**

குடாளக – சுருள் சுருளாக இருக்கும் தலை முடிகள் சுருள் சுருளாக இருக்கும் தலை முடிகளைக் கொண்ட ஸ்ரீகிருஷ்ணாவதார – ஸ்ரீஹரி.

ஹொளெவ கபோல நாஸப்ரூலதா ஷுப எளெனகெ அருணாம்புஜ நேத்ர |
லலித குடாளக யுதவக்த்ர பலுசிலுவ நோடுவவென்னய நேத்ர ||

**11. அகிள ஷரண ஜன ஸுரதேனு**

அகிள – அனைத்து. சுர – தேவ. தேனு – பசு, வேண்டியதைக் கொடுக்கக்கூடிய தேவலோக பசு – காமதேனு. தன்னை சரணடைந்தவரகளுக்கு வேண்டியதை கொடுக்கக்கூடிய காமதேனு. வினந்தெ ஆகியோரின் விருப்பத்தை நிறைவேற்றிய – ஸ்ரீஹரி.

**12. ஸுரமணி**

தேவதைகளில் ஸ்ரேஷ்டனான – ஸ்ரீஹரி

**13. கருணஸாகர**

கடலைப் போல விசாலமான கருணை நிறைந்த இதயம் உள்ள - ஸ்ரீஹரி

**14. காமிதார்த்தத**

காமித - விரும்பிய அர்த்த - புருஷார்த்த 1. தர்ம 2. அர்த்த (செல்வங்கள்) 3. காம - விருப்பம் 4. மோட்ச - என இந்த நான்கு விருப்பங்களில் வேண்டியதை கருணையுடன் கொடுப்பவனான ஸ்ரீஹரி.

**15. துரிதகஜஸிம்ஹ**

துரித - பாவ. கஜ - யானை. யானைக்கு எதிரியான சிங்கத்தைப் போல, பக்தர்களின் பாவங்களை நாசம் செய்யும் ஸ்ரீஹரி.

**16. ஸரஸிஜாஸன ஸேவ்ய**

ஸ்ரஸ்ஸு+ஜ+ஆஸன+ஸேவ்ய. தாமரையே பீடமாகக் கொண்டவன் - பிரம்மன். தன் நாபி கமலத்திலேயே அமர்ந்திருப்பவனான பிரம்மதேவனால் சேவை பெற்றுக் கொள்பவனான - ஸ்ரீஹரி.

**17. முக்தாபரண நமித**

'முக்தி' என்னும் ஆபரணத்தை பெற்றுக் கொள்பவன். அதாவது, முக்திக்கு யோக்யரான சுஜீவிகளால் வணங்கப்படுபவனான - ஸ்ரீஹரி.

**18. ஸுரேஷ**

ஸுர+ஈஷ = ஸுர-தேவதைகள். ஈஷ - தலைவன். தேவதைகளின் தலைவனான, ஸ்ரீஹரி.

**19. நிஷாசரஹரண ஷீல**

நிஷெ - ராத்ரி. சர - சுற்றித் திரியும். நிஷாசர - இரவில் சுற்றித்திரியும் அசுரர்கள். ஹரண - கொல்லும். ஷீல - வெற்றியாளன் / கடமை. அசுரர்களைக் கொல்வதே தன் கடமை என்று அறிந்து அப்படியே செய்பவனான, ஸ்ரீஹரி.

**20. ஸதாகமஞேய.**

ஸத்+ஆகம+ஞேய. ஆகமங்களால் மட்டுமே தன்னை புரிந்து கொள்ளக்கூடியவனான ஸ்ரீஹரி.

ஸதாகமெஇக விக்ஞேயம் ஸமதீ, சேக்ஷராக்ஷரம்
நிர்தோபாகேக்ஷ ஸ்த்குணம் ||
(ஸ்ரீமதானந்ததீர்த்தர் இயற்றிய விஷ்ணுதத்வ நிர்ணயத்திற்கு ஸ்ரீடீகாராயர் இயற்றிய மங்கள ஸ்லோகம்).

**21. ஆதிபுருஷ**

ஆதி = முதல். புருஷ. புருஷ – 1. மஹத்தத்வாதி ஸ்ருஷ்டி செய்த ரூபம். 2. படைத்த பிரம்மாண்டத்தில் எடுத்த ரூபம். 3. பிரம்மாண்டத்தில் அனைவரின் தேகத்தில் இருக்கும் ரூபம்.

உலகத்தின் ஸ்ருஷ்டியைவிட முதலில் இருந்துகொண்டு, பிரம்மாண்டத்தை படைத்து, அதில் நுழைந்து, அதற்குள் இருந்து அனைத்து தேஹிகளின் தேகங்களில் இருந்துகொண்டு, எப்போதும் ஸ்ருதிகளின் சமூகத்தினால் அறியப்படும் ஆதி புருஷனான ஸ்ரீஹரி.

**விஷ்வக$^{3}$ர்ப்ப$^{4}$ விசித்ர சரித்ர ஷு**
**பா$^{4}$ஷ்வவத$^{3}$ன விஷால விக்ரம**
**ஷஷ்வதே$^{3}$ஷ ஸுவ்யாப்த ஞானானந்த$^{3}$ ப$^{3}$லபூர்ண |**
**நஷ்வரேஷ்வர ஸவித$^{1}$ரேஷ்வர**
**ஈஷ்வரேஷ்வர வேத$^{3}$கோ$^{3}$சர**
**ஸுஸ்வபா$^{4}$வ நவாம்பு$^{3}$தா$^{3}$ங்க$^{3}$ க்ருபாளு க்ருஷ்ண நமோ || 2**

**22. விஷ்வகர்ப்ப**

1. ப்ரளய காலத்தில் அனைத்து உலகத்தையும் தன் வயிற்றில் வைத்துக் கொள்பவனான – ஸ்ரீஹரி. (வாதிராஜர் இயற்றிய ஸ்ரீகிருஷ்ண பாலலீலெ – பூர்வார்த்த நுடி 328-382)

2. மண் தின்னவில்லை. வாயைப் பார் என்றான்.
ஸ்ரீகிருஷ்ணன பாயொளகெ ஹதினால்கு லோககண்டு
ப்ராதுர்பூதனாத பரமாத்மனெந்தளு |
தன்னகண்டு யஷோதெ தளகிஸிதளு

முத்து கிருஷ்ணன பாயொளகெ பித்தெனு தானெனுத ||

**23. விசித்ர சரித்ர:**

துஷ்டர்களை தண்டிப்பது. சிஷ்யர்களை காப்பது. தன்னை எப்போதும் நினைக்கக்கூடிய 1. அர்ஜுனனின் ரதத்தின் குதிரைகளை கழுவிவிடுவது. அவற்றிற்கு புல் போட்டு காத்தவனான. மற்றும் 2. பலி சக்ரவர்த்தியின் மஹாத்வாரத்தில் கதாதாரியாக த்வாரபாலகனாக இருந்து சேவை செய்யும் விசித்ர நடத்தை உள்ளவனான - ஸ்ரீஹரி.

**24. ஷுபாஷ்வவதன**

ஷுப+அஷ்வ+வதன. அஷ்வ=ஹய=குதிரை. தன் பக்தர்களுக்கு எப்போதும் சுபத்தையே கொடுப்பவனான ஹயவதனனான, ஸ்ரீஹரி.

**25. விஷாலவிஸ்ரய**

வைகுண்ட, அனந்தாஸன, ஷ்வேதத்வீப இந்த மூன்று உலகங்களிலும் இருந்துகொண்டு விஷாலவிஸ்ரய என்று அழைக்கப்படுபவனான ஸ்ரீஹரி.

**26. ஷஷ்வதேஷ**

ஷஷ்வத் - எப்போதும். ஏக - ஒரே ரூபம். எப்போதும் ஒரே மாதிரியான. என்றால், சிறு வயது, வாலிபம், மூப்பு ஆகியவை இல்லாதவனான ஸ்ரீஹரி.

**27. ஸுவ்யாப்த**

நாராயணன் அனைத்து இடங்களிலும் வியாப்தன். அணுரேணு த்ருணகாஷ்டத்தில் பரிபூர்ணனாக அனைத்து இடங்களிலும் வியாப்தனாக இருக்கிறான். இவ்வாறு வியாப்தனான ஸ்ரீஹரியின் வியாப்தி ரூபங்கள் மூன்று என்று சாஸ்திரங்கள் சொல்கின்றன. 'ப்ரதமம் மஹத: ஸ்ருஷ்டம் த்விதீயம் த்வண்ட ஸம்ஸ்திதம் | த்ருதீயம் தேஹினா தேஹி தானி ஞாத்வா விமுச்யதே' என்னும் ஸ்ருதியினால் பிரம்மதேவனில் இருக்கும் சிறப்பினை படைத்திருக்கிறான் என்னும் ஸ்ரீஹரி ரூபம். பிரம்மாண்டத்தில் இருக்கும் ஸ்ரீஹரிரூபம் ஒன்று. அனைத்து ஜீவர்களின் தேகத்தில் இருக்கும் ஸ்ரீஹரி ரூபம் ஒன்று என மூன்று ரூபங்களால்

அனைத்து இடங்களிலும் வியாப்தனாகி, ஸுவ்யாப்தன் என்று சொல்லிக் கொண்டவனான ஸ்ரீஹரி.

**28. ஞானானந்த**

1. பரமாத்மனின் ஸ்வரூபத்திற்கும் குணங்களுக்கும் எவ்வித பேதங்களும் இல்லை. ஞான, ஆனந்த முதலான குணங்கள் பரஸ்பரம் அபின்னமே ஆகின்றன. ஞானத்தில் ஆனந்தமும், ஆனந்தத்தில் ஞானமும். சர்க்கரையில் கசப்பும், கசப்பு பதார்த்தங்களில் சர்க்கரையும் இருப்பதைப் போல, இருக்கிறது. அப்படியே மற்ற அனைத்து குணங்களும் இருக்கின்றன. ஞானமே ஆனந்தம். ஆனந்தமே ஞானம் என்று அர்த்தம்.

2. சுக்ஞான, ப்ரக்ஞான, விக்ஞானங்கள் என்பது ஞான வகைகள். ஜீவர்கள் தம் தகுதிக்கேற்ப ஸ்ரீஹரியின் ஞானத்தின் அசிந்த்ய மகிமைகளை அறிந்து கொள்வதற்கு ஞானாதிகளின் ப்ரத்யேக செயல்கள் உதவிகரமாகிறது. ஞான சுக்ஞானாதிகளின் பிராப்திக்கும் காரணம் ஆகின்றன.

3. விஷயத்தை கிரகிப்பது ஞானம். இந்த லட்சணம் சு-ஞானாதிகளில்கூட இன்னும் விசேஷ லட்சணங்கள் இருக்கின்றன. சுக்ஞான என்றால் யதார்த்த ஞானம். அர்த்தம் என்றால் பொருள் அல்லது விஷயம். அதனை இருப்பதைப் போல அறிவதே யதார்த்தஞான. சந்தேகம், எதிர்மறைகளால் தேகத்தில் இருக்கும் நாடிகள், பிராணாதிகளின் செயல்கள் ஆகியவற்றுடன் தேகத்தை அறிவது - ப்ரக்ஞான. வஸ்து சம்பந்தமான அனைத்து விசேஷ தர்மங்களையும் அறிவது - விக்ஞான. அறியும் சக்தி. என்னும் ஞானம் சேதனர்களின் சாமான்ய லட்சணம். முக்தியோக்ய சேதனர்கள் ஞான உள்ளவர்கள், சாத்விக ஸ்வபாவத்தின் சேதனர் சுக்ஞான உள்ளவர்கள். தேவதைகள் (அதிலும் தத்வாபிமானிகள்) ப்ரக்ஞான உள்ளவர்கள். ருஜுகணத்தின் பிரம்மாதிகள் விக்ஞானிகள். பிரம்மாதிகளைவிட அதிகமாக அனைத்து வஸ்துகளை விசேஷங்களுடன் அறியும் விலக்ஷண விக்ஞானிகள் - ரமா நாராயணர். இத்தகைய ஸ்ரீஹரி.

பகவந்தனின் தலை கூந்தலிலிருந்து, நகத்தின் முனைவரைக்கும் பூர்ண ஞானத்தினால் ஷக்திகளே நிரம்பியிருக்கின்றன. (ப்ருஹதாரண்யக உபநிஷத் பாஷ்ய 3-5-4).பாதத்தின் நகத்திலிருந்து தேகம் முழுக்க ஆனந்தமே நிரம்பியிருக்கிறது. ஆகையால், அவனின் கூந்தலும் ரூபமும் ஆனந்தரூபமே ஆகியிருக்கிறது என்கிறது மாத்யன்ஹ ஸ்ருதி. (பாகவத தாத்பர்ய நிர்ணய 10-82-46).

**29. பலபூர்ண**

1. பிரபுத்வம் 2. ஸாமர்த்ய 3. புகழ் 4. ஸ்வரூப ஸௌந்தர்ய 5. ஞான மற்றும் 6. விக்ஞான – இந்த ஆறு குணங்கள் 'பக' என்று அழைக்கப்படுகின்றன. அவற்றில் அதிகமாகவும் நிரந்தரமாகவும் இருப்பதால் பகவந்தன் என்று அழைக்கப்படுபவனான ஸ்ரீஹரி.

1. ராமாய ஷாஷ்வத ஸுவிஸ்த்ருத ஷட்குணாய – மகாபாரத தாத்பர்ய நிர்ணய.
2. புஷ்ட ஷாட்குண்ய சத்விக்ரஹோல்லாஸினம் – த்வாதச ஸ்தோத்திரம்
3. அன்யதமோ முகுந்தாத் |கோனாம லோகே பகவத் பதார்த்த: || - ஸ்ரீமத் பாகவதம் 1-18-21

பலம் மற்றும் ஷட்குணங்களே ஸ்வரூபமாக உள்ளவன். மற்றும் ஸ்வதந்த்ர கர்தனாக இருப்பவன்.

**30. நஷ்வரேஷ்வர** -தற்காலிகமான உலகிற்கு தலைவனான ஸ்ரீஹரி

**31. ஸவிதரேஷ்வர**

ஸ்ரீ ஹரிப்ரேரணையினாலே சூரியன் வலம் வருகிறான். சூரியனில் இருக்கும் சுடும், உலர்த்தும், வளர்க்கும், எரிக்கும் – இந்த நான்கு வித சக்திகளும் சூரியனில் நிலைத்திருக்கும் சூர்ய நாராயணனுடையதே. (அவை சூரியனுடையது அல்ல). என்று பத்ம புராணம் சொல்கிறது. ஆகையால், இத்தகைய ஸவிதரேஷ்வரனான – ஸ்ரீஹரி.

யதாதித்யகதம் தேஜோ ஜகத்பாஸயதேऽகிலம் |
யச்சந்த்ரமஸி யஜ்ஜாக்னௌ தத்தேஜோ வித்தி மாமுகம் ||12

சூரியனிடம், சந்திரனிடம் மற்றும் அக்னியில் இருக்கும் எந்த வெளிச்சத்தின் சக்தி

மொத்த உலகத்திற்கும் வெளிச்சத்தைக் கொடுக்கிறதோ, அது என் அதீனம் என்று அறிவாயாக. (கீதை 15-12).

**32. ஈஷ்வரேஷ்வர**

பிரம்மன் சுத்த மனதினால், சனக, சனந்தன, சனத்குமார, சனத்ஸுஜாத என்னும் நான்கு முனிகுமாரர்களை படைத்து, அவர்களுக்கு பிரஜைகளை படைத்து, பிரபஞ்சத்தை வளர்ப்பதற்கு கூறினான். ஆனால் தவம் செய்ய விரும்பிய அவர்கள் அத்தகைய காரியங்களில் ஈடுபடுவதில்லை என்று கூறியதைக் கேட்டு, பிரம்மனுக்கு கோபம் வந்தது. அப்போது அவன் தன் புருவத்தின் நடுவிலிருந்து கருப்பு வெள்ளை வண்ணம் கொண்ட ஒரு குமாரனை தோற்றுவித்தான். அதற்கு பிரம்மன், உனக்கு ருத்ரன் என்று பெயர் வரட்டும். நீ சந்திர, சூர்ய, நெருப்பு, வாயு, தண்ணீர், ஆகாயம், பூமி, பிராண, மனஸ், ஹ்ருதய, இந்திரியங்கள் என்னும் 11 ஸ்தானங்களிலும் மன்யு, மனு, மஹாகால, மஹான், ஷிவ, ருதுத்வஜ, உருரேதஸ், பவ, கால, வாமதேவ, த்ருதவ்ருத என்னும் 11 நாமங்களினாலும், தீ, வ்ருத்தி அஷனெ, உமெ, நியத்து, ஸர்ப்பி, இலெ, அம்பிகெ, இராவதி, ஸுதெ, தக்ஷெ என்னும் 11 பேர் மனைவியருடன் கூடி பிரஜா ஸ்ருஷ்டியை செய். என்று ஆணையிட்டார். இத்தகைய ருத்ர என்றால், ஈஸ்வரனுக்கு ஈஸ்வரன். அதாவது பிரபு ஆன – ஸ்ரீஹரி. (ஸ்ரீமத்பாகவத – 3ம் ஸ்கந்தம், 2ம் அத்தியாயம்).

**33. வேதகோசர**

வேத, உபநிஷத்கள் இவற்றின் மூலம் தன் மற்றும் தன் க்ரியைகளைப் பற்றி சாத்விக ஜீவிகளுக்கு அவரவர்களின் தகுதிக்கேற்ப அறிவை உருவாக்குபவனான – ஸ்ரீஹரி.

**34. ஸுஸ்வபாவ**

அனன்யாஸ்சிந்தயந்தோ மாம் யே ஜனா: பர்யுபாஸதே |
தேஷாம் நித்யாபியுக்தானாம் யோகக்ஷேமம் வஹாம்யஹம் ||
(கீதை 9-22)

யார் அனன்ய பக்தியுடன் என்னையே சிந்தித்தவாறு என் குணங்களை உபாசனை செய்கிறானோ, அனைத்து விதங்களிலும் என்னையே நம்பியிருக்கும் அவரின் யோகக்ஷேமத்தை நான் காக்கிறேன். இப்படியாக தன் பக்தர்களுக்கு நம்பிக்கையைக் கொடுப்பவனான - ஸ்ரீஹரி.

**35. நவாம்புதாங்க**

நவ - புதிய. அம்புத - மேகம். அங்க - சரீரம். நீர் நிரம்பிய புதிய மேகத்தைப் போல. நீல வர்ணத்தின் சரீரம் கொண்ட ஸ்ரீகிருஷ்ணாவதாரத்து - ஸ்ரீஹரி.

**36. க்ருபாளு**

அனைத்து சராசர வஸ்துகளில் அத்யந்த கிருபை உள்ளவனான - ஸ்ரீஹரி.

**37. கிருஷ்ண**

த்வாபர யுகத்தில் விரோதி நாம சம்வத்ஸர சிராவண பகுள அஷ்டமி, ரோகிணி நட்சத்திர, வஜ்ர யோக, புதன்கிழமை அர்த்தராத்திரியில் ஸ்ரீகிருஷ்ணன் அவதரித்தான்.

ரோஹிண்யாதுர்தராத்ரேது யதா க்ருஷ்டாஷ்டமி பவேத் |
ஜயந்தி நாம ஸாப்ரோக்தா ஸர்வபாப ப்ரணாஷனி ||
(ஸ்ரீமதாசார்யர்)

லோக கல்யாணத்திற்காகவும், பூ-பாரத்தைக் குறைப்பதற்காகவும் அவதரித்த ஸ்ரீவிஷ்ணுவின் தசாவதாரங்களில் எட்டாவதான ஸ்ரீகிருஷ்ணாவதாரத்தின் - ஸ்ரீஹரி.

மேகத்தைப் போல நீல வண்ணம் கொண்ட, ஸ்ரீகிருஷ்ணாவதாரத்தின் - ஸ்ரீஹரி தன் நியமன சாமர்த்திய, சௌந்தர்ய, ஆகிய குணங்களால் அகில ஜகத்தையும் தன்னிடம் இழுத்துக் கொண்டவனான ஸ்ரீஹரி.

**ஜனப முனினுத தாடகாந்தக**
**ஜனகஜாவர லக்ஷ்மணாக்³ரஜ**
**ஜனகவாக்³வர இந்த்³ரபூஜித ஸூர்ய ஸுதபாலா |**

**தி³னப குலபதி தீ³னவத்ஸல**
**வனதி⁴ப³ந்த⁴ விஹார த³ஷஷிர**
**ஹனன காரண ப⁴ரதபாலக ராமராஜ நமோ || 3**

**38. ஜனப**

ஜன – மக்கள். ப - அருள்வாயாக. மக்களைக் காப்பதில் முதன்மையானவன். வணங்கத்தக்கவனுமான ஸ்ரீராமாவதார ஸ்ரீஹரி.

**39. முனினுத** – முனிகளால் புகழப்படுபவனான ஸ்ரீஹரி

**40. தாடகாந்தக**

தண்டகாரண்யத்தில் அசுரர்களின் சமூகம், ரிஷி முதலான சஜ்ஜனர்களை இம்சித்து வந்தது. அந்த அசுர குலத்தை அழிக்கவேண்டும் என்னும் நிமித்தத்தால், விஸ்வாமித்திரர் தன் யக்ஞத்தை காப்பதற்கு அரசனான தசரத மகாராஜனிடம் ராமலட்சுமணர்களை அனுப்புமாறு கேட்டார். இதனைக் கேட்ட தசரத மகாராஜன், தன் சிறிய மகன்களை அனுப்பவேண்டுமே என்று நினைத்து மயங்கி விழுந்தான். ஆனால், குலகுருகளான வசிஷ்டரின் ஆலோசனையினால், விஸ்வாமித்திரரின் வேண்டுகோளினை ஒப்புக்கொண்டான். அந்த முனிவருடன், பாலகர்களான ராம லட்சுமணர்களை அனுப்பி வைத்தான்.

தண்டகாரண்யத்தில் இருந்த தாடகா வனத்தில் இருந்து யாகசாலையை பாதுகாக்கும் செயலில் இருந்த ஸ்ரீராமனால் தாடகை கொல்லப்பட்டாள். யக்ஞத்தை அழிக்க வந்த ஸுபாஹு என்னும் அசுரனும் அழிந்தான். மற்றும் அவனைவிட முதலில் மாரீச என்பவனையும் பாணத்தினால் அடித்து, கடலில் எறிந்தான். இவ்வாறு விஸ்வாமித்ர முனியின் யக்ஞகாலத்திற்கு வந்த அனைத்து அசுரர்களையும் கொன்று தண்டகாரண்யத்தை ரிஷிகளுக்கு பயம் இல்லாத இடமாக மாற்றிக் கொடுத்த ராமாவதாரமே – ஸ்ரீஹரி.

**41. ஜனகஜாவர**

ஜனக+ஜா – ஜனக மகாராஜனின் புத்ரி. லட்சுமிதேவியின் அவதாரமான – சீதாதேவி. ஜனகஜாவர – அந்த சீதாதேவியின்

வல்லப - ஸ்ரீராமன். விஸ்வாமித்ர முனியின் யாக ரக்ஷணைக்காக தன் தம்பியான லட்சுமணனுடன் சேர்ந்து தண்டகாரண்யத்தின் தாடகா வனத்திற்குச் சென்ற ஸ்ரீராமனின் யாக சமாப்திக்குப் பிறகு விஸ்வாமித்ரருடன் சேர்ந்து மிதிலா பட்டணத்தில் ஜனக மகாராஜன் ஏற்பாடு செய்த சீதா ஸ்வயம்வரத்திற்கு வந்து, அந்த ஸ்வயம்வரத்திற்கு வந்த ராஜ மகாராஜரின் சபையில் சிவ தனுஸ்ஸினை முறித்து, ஸ்ரீமகாலட்சுமியின் அவதார ரூபளான சீதாதேவியை மணந்த ஸ்ரீராமாவதாரரான - ஸ்ரீஹரி.

**42. லட்சுமணாக்ரஜ**

1. சேஷோஏனந்தோ நரஸ்சைவ 'லக்ஷ்மணோ' பல ஏவச |
சங்கர்ஷணோ நீலவாஸா ஜகத்பக்ஷோ ஜலேஷய: |
(பாகவத தாத்பர்ய). இவ்வாறு லட்சுமணன் சேஷாவதாரி.

2. ஸ்வாத்வதாம் நவமூர்த்தி நமாதி மூர்த்திரஹம் புரேதி |
(பாகவத 11ம் ஸ்கந்தம்)

விஷ்ணோ: ச்ரேயோ பிரம்மணஸ்ச வாயோ: ஸங்கர்ஷணஸ்சேச |
ஸுபர்ணஸ்யச ஸம்ப்ரோக்தா ப்ரத்யேகம் நவமூர்த்தய: ||
போச்யு: ஸாத்வத தத்ரேஷ தத்ராத்யா மூர்த்தய: |

இவ்வாறு சேஷாவதாரியான லட்சுமணனுக்கு அண்ணன் என்றால் மூத்தவனான ஸ்ரீராமாவதாரியான ஸ்ரீஹரி.

**43. ஜனக வாக்வர**

வாக்வணீ பாஷா சரஸ்வதி | அமரகோசம்
வாக்- சரஸ்வதி. வர - வல்லப. வாக்வர - பிரம்ம
ஜனக வாக்வர - பிரம்மதேவரின் ஜனக

ஸ்ரீஹரியின் நாபி கமலத்திலேயே சதுர்முக பிரம்மன் பிறந்திருக்கிறான் ஆகையால் பிரம்மனின் தந்தையான ஸ்ரீஹரி.

**44. இந்திர பூஜித**

ஸுரர அரசனான இந்திரனால் பூஜிக்கப்படுபவனான - ஸ்ரீஹரி

**45. ஸூர்ய ஸுதபாலா**

ராமாவதாரத்தில், வாலியை கொல்வேன் என்று சுக்ரீவனுக்கு வாக்கு கொடுத்ததைப் போல, ஸ்ரீராமன் வாலிக்கு பாணம் விட்டு அடித்த காலத்தில் வாலி 'எனக்கு ஏன் இந்த தண்டனையைக் கொடுத்தாய்?' என்று கேட்டபோது, 'இந்த அவதாரத்தில் சூர்ய மகனான சுக்ரீவனை காப்பாற்றி, இந்திர மகனான உன்னை கொன்றேன். அடுத்த அவதாரத்தில் இந்திரமகனான அர்ஜுனனாக பிறக்கும் உன்னை காத்து, சூரிய புத்திரனான கர்ணனாக பிறக்கும் சுக்ரீவனை கொல்வேன்' என்று பதில் அளித்தவனான ஸ்ரீராமாவதாரியான – ஸ்ரீஹரி.

**46. தினபகுலபதி**

தினப – சூர்ய, தினபகுல – சூர்யவம்சம். தினப குலபதி – சூரிய குல அரசன். சூர்ய வம்சத்தின் அரசனாக அவதரித்த ஸ்ரீராமசந்திர அவதாரியான – ஸ்ரீஹரி.

**47. தீனவத்ஸல**

தீனர்களிடம் வாத்ஸல்யம், அன்பு கொண்டவனான ஸ்ரீஹரி

**48. வனதி பந்த விஹார**

வன – தண்ணீர். வனதி – கடல். பந்த – கட்டு. தன் கபிசேனையுடன் ராவணனின் மேல் போருக்கு புறப்பட்ட ஸ்ரீராமன் கடலுக்கு, நள, நீல முதலான வானரர்களின் உதவியுடன் சேதுவை கட்டி, அனைத்து வானர சேனையுடன் அந்த சேதுவில் ஏறி கடலைத் தாண்டி லங்கா பட்டணத்திற்குச் சென்றவனான ஸ்ரீ ராமாவதாரியான – ஸ்ரீஹரி.

**49. தஷஷிர ஹனனகாரண**

தஷஷிர – பத்து தலையின் – ராவணன். ஹனன – கொன்ற. பத்து தலையின் ராவணாசுரனின் சாவிற்கு காரணனான ஸ்ரீராமாவதாரியான ஸ்ரீஹரி.

**50. பரத பாலக**

தசரத மகாராஜாவின் விருப்பத்திற்கேற்ப குலகுருவும் தேவகுருவும் ஆன வசிஷ்டரின் அனுமதியுடன் ஸ்ரீராமனின் பட்டாபிஷேகம் நிகழ்ச்சி அனைத்து தயார் நிலையுடன் நடப்பதை

அறிந்த கைகேயி, கலிபத்னியும் அலக்ஷ்மி ஸ்வரூபளான மந்தரை என்னும் தாசியின் கெட்ட ஆலோசனைக்கு செவி சாய்த்தாள். முன்னர் தான் தசரதனிடம் பெற்றிருந்த இரண்டு வரங்களை தற்பொழுது கேட்டுப்பெற வேண்டும் என்று நினைத்தாள். முன்பு தேவ தைத்யர்களுக்கு இடையே நடந்த போரில், தேவர்கள் சார்பாக போர் புரிந்த தசரதனின் ரதத்தில் அச்சாணி முறிந்து, தேர் சாயும் நிலைக்கு வந்த பொழுது, கைகேயி தன்னுடைய விரலை அச்சாணியாக வைத்து ரதத்தை விழாதவாறு காப்பாற்றினாள். அப்பொழுது தசரதன் அவளுக்கு இரு வரங்களை அளித்து, அவற்றை தேவைப்படும்போது கேட்டு வாங்கிக் கொள்வதாக கூறியிருந்தாள்.

தற்போது அந்த வரங்களை பயன்படுத்தி, ஒரு வரத்தினால் பரதனுக்கு பட்டாபிஷேகம் மற்றும் இரண்டாம் வரத்தினால் ராமன் 14 ஆண்டுகள் வனவாசம் செய்ய வேண்டும் என்றும் விரும்பினாள். இதனை அறிந்த ஸ்ரீராமன் தந்தையின் வாக்கினை பின்பற்றுவதாக சொல்லி, பட்டாபிஷேகத்தை நிறுத்தி, தன்னுடைய தம்பி லட்சுமணன் மற்றும் மனைவி சீதையுடன் வனவாசத்திற்கு புறப்பட்டுச் சென்றான்.தசரத மகாராஜா ரிஷி குமாரனிடமிருந்து பெற்றிருந்த சாபத்திற்கு ஏற்ப, மக்களை பிரிந்ததால், தன் உயிரை விட்டான்.

தம்முடைய தாய் மாமனின் வீட்டில் இருந்த பரத, சத்ருக்னன் இருவரும் அயோத்திக்கு வந்து, நடந்த விஷயங்கள் அனைத்தையும் அறிந்தனர். தாய் கைகேயியை திட்டி கால்நடையாக அனைத்து ராஜ மரியாதைகளுடன் வனவாசத்தில் சித்திரகூட பர்வதத்தில் இருந்த ஸ்ரீராமனிடம் சென்றனர். திரும்ப அவனை அழைத்துக் கொண்டு வரவேண்டும் என்று நினைத்தனர்.

ஆனால், ஸ்ரீராமன் தன் தந்தையின் வாக்கிற்கேற்ப 14 ஆண்டுகள் முடிந்த உடனேயே அயோத்திக்கு வந்து பட்டாபிஷேகம் செய்து கொள்கிறேன் என்று கூறினான். அதற்கு பரதன், ஒருவேளை ஸ்ரீராமன் வாக்கு தவறினால், அடுத்த நாள் தான் தீயில் குதித்து தன்னுடைய உயிரை தியாகம் செய்து விடுவேன் என்று கூறினான். பின்னர் இராமனின் பாதுகைகளை எடுத்து வந்து,

அயோத்திக்குள் நுழையாமல் வெளியில் நந்தி கிராமத்தில் அதனை முன்வைத்து அரசாட்சி செய்ய துவங்கினான்.

ஸ்ரீராமச்சந்திரன் அசுரர்களைக் கொல்வதற்காக 14 ஆண்டு வனவாசத்தை முடித்துக்கொண்டு, ராவணன், கும்பகர்ணன், ஆகியோர்களை கொன்று, தன்னுடைய பக்தனான அனுமன், விபீஷணன், சுக்ரீவன், அங்கதன், ஜாம்பவான், ஆகியோருடன் சேர்ந்து சீதா, லட்சுமணனுடன் புஷ்பக விமானத்தில் ஏறி, இலங்கையிலிருந்து திரும்பி வந்து அக்னி பிரவேசத்திற்கு தயாராக நின்ற தம்பி பரதனை காப்பாற்றி அருளினார், ஸ்ரீராம அவதாரமான ஸ்ரீஹரி.

**51. ராமராஜ**

சூரிய வம்சத்து இக்ஷ்வாகு குல, தசரதனின் மூத்த மனைவியாகிய கௌஸல்யா தேவியிடம் திரேதாயுகத்தில் தாரண நாம சம்வத்ஸ்ர, நவமி புனர்வசு நட்சத்திரம் ஷூல யோகம், திங்கட்கிழமை பகல் ஆறு நாழிகைக்கு ஸ்ரீராம அவதாரம் ஆயிற்று. மக்களை காப்பவனும் மக்களுக்கு அருள் புரிபவனுமான ஸ்ரீராம அவதாரமான ஸ்ரீஹரி.

**பூதனாந்தக ஷகஜமாரக**
**வாதசக்ரா நிஷ்பஹர நவ**
**நீதப்ரிய த$^{3}$தி$^{4}$சார போ$^{4}$ஜக கோ$^{3}$பவது$^{4}$லோல |**
**ஸீதகர குலதிலக ஷ்ருதி வி**
**க்$^{2}$யாத கரிசாணூர ப$^{3}$கஹர**
**மாதுளாந்தக பார்த்த$^{2}$ஸ்தா$^{2}$பக கௌ$^{1}$ரவாந்த நமோ || 4**

**52 பூதனாந்தக**

ஸ்ரீவிஷ்ணு தன்னுடைய உண்மையான ரூபத்தை வசுதேவர் தேவகியிடம் காட்டி, தன்னை நந்தகோபனின் வீட்டில் வைத்து, அங்கு குழந்தை வடிவில் இருக்கும் துர்க்கையினை, இங்கு அழைத்துக் கொண்டு வருமாறு கூறினார். சுவாமியின் குறிப்பின்படி, வசுதேவன் அந்த குழந்தைகளை மாற்றி வைத்தான். பிறகு எழுந்த கம்சனின் சேவகர்கள், 'தேவகிக்கு எட்டாம் குழந்தை பிறந்து விட்டது' என்பதை அறிந்து அதனை கம்சனுக்கு

தெரிவித்தனர். அவனும் வந்து அந்தக் குழந்தையை தூக்கி ஒரு கல்லில் அடிக்க முயன்றபோது, அந்த குழந்தை வடிவிலான துர்க்கை அவனுடைய கையிலிருந்து தப்பி, ஆகாயத்தில் தாவி அங்கு அசரீரியின் குரலில் 'உன்னுடைய எதிரி வேறு இடத்தில் பிறந்து வளர்ந்து கொண்டு இருக்கிறான்' என்று கூறியது.

கம்சன் தன்னுடைய மந்திரிகளுடன் ஆலோசனை செய்து, தன்னுடைய அரசில் இருந்த அனைத்து குழந்தைகளையும் கொல்லும் முடிவுக்கு வந்தான்.அதன்படி அவனுடைய ஆணைப்படி பூதனை என்னும் அரக்கி ஒரு நல்ல பெண்மணியை போல வேடம் தரித்து, ஸ்ரீகிருஷ்ணனை எடுத்து கொஞ்சியவாறு, அவனுடைய அழகினைக் கொண்டாடியவாறு, தன்னுடைய விஷம் தடவிய முலையை அவனுடைய வாயில் வைத்தாள். பால் குடிப்பதற்கு பதிலாக, கிருஷ்ணன் அவளுடைய பிராணனை உறிஞ்சி எடுத்தான். இப்படியான குழந்தை வடிவிலான ஸ்ரீகிருஷ்ண அவதாரமான ஸ்ரீஹரி.

யாதுத்யானபி ஸாஸ்வர்க்கம் அவாப ஜனனி கதிம் |
கிருஷ்ணபுக்த ஸ்தனக்ஷீரா: கிமுகாவோனு மாதர: ||
(பாகவத 10ம் ஸ்கந்தம் 7ம் அத்தியாயம்).

ஸ்ரீகிருஷ்ணன் பூதனியிடம் முலைப்பால் குடித்தான். அத்தகைய அரக்கி அதாவது, பூதனி, ஜனனிகதி, என்றால் தூர்ஜனர்கள் செல்லும் நித்யநரகம் என்னும் துர்கதியை அடைந்தாள். அவளில் ஆவேசம் கொண்டிருந்த ஊர்வசியின் ஜனனிகதி என்றால், தாய்களான தேவகி மற்றும் யசோதை ஆகியோர் செல்லும் சுவர்க்கத்தை அடைந்தாள்.

கோபாலகர்கள் மற்றும் பசுக்களின் ரூபத்தில் இருக்கும் தேவதைகளும் நற்கதியை அடைகின்றனர் என்று சொல்வதில் சந்தேகம்? என்ன கண்டிப்பாக அடைகின்றனர் என்று அர்த்தம்.

**53 ஷகடாசுர.**

ஸ்ரீகிருஷ்ணன் அவதரித்து, நான்கு மாதங்கள் ஆகியிருந்தன. குழந்தையின் தாய் மாமனின் வீட்டிற்கு அழைத்துச் செல்லும் விழாவினை நடத்த வேண்டும் என்று அனைவரும் நினைத்தனர்.

யமுனைக் கரைக்கு வந்த அவர்கள், ஒரு வண்டியின் கீழ் குழந்தையை படுக்க வைத்தனர். சகட என்னும் அசுரன் அந்த வண்டியில் சேர்ந்துகொண்டு குழந்தையைக் கொல்வதற்கு தயார் ஆனான். அதற்குள்ளாக ஸ்ரீகிருஷ்ணன் தன்னுடைய பாதத்தை மேலே தூக்கி அந்த வண்டியை எட்டி உதைத்தான். அந்த வண்டியில் இருந்த சகடாசுரன் இறந்து விழுந்தான். இதனைக் கண்டு யசோதை ஆகியோர் மிகவும் வியப்படைந்தனர்.

**54 வாதசக்ரானிஷ்டஹர**

ஒரு நாள் ஸ்ரீகிருஷ்ணனை தூக்கிக் கொண்டிருந்த யசோதை, அவனுடைய எடையை தாங்க முடியாமல் வியப்படைந்து அவனை கீழே இறக்கினாள். அதற்குள் ஒரு பெரிய சூறாவளி சுற்றி அடித்தது. கோகுலத்தையே காற்று மூடிக்கொண்டது. கண்களில் தூசி பறந்து மக்கள் திக்கு திசை தெரியாதவர்கள் ஆனார்கள். காற்று சிறிது குறைந்த பிறகு, ஸ்ரீகிருஷ்ணனைக் காணாமல் யசோதை பயந்தாள். சுற்றிலும் தேடிய பொழுது ஒரு பெரிய பாறாங்கல் மேலிருந்து விழுந்து கிடந்த பயங்கரமான அசுரனின் மார்பின் மேல் அமர்ந்து இருந்த ஸ்ரீகிருஷ்ணனை மக்களும் யசோதையும் கண்டனர். ஸ்ரீகிருஷ்ணனின் அந்த அற்புத மகிமையை அனைவரும் கொண்டாடினர். த்ரிணாவக்ரன், ஸ்ரீகிருஷ்ணனை தூக்கி சிறிது மேலே சென்ற பிறகு அவனுடைய எடை தாங்க முடியாமல் மேலிருந்து கீழே விழுந்தான். ஸ்ரீகிருஷ்ணன் அந்த அசுரனின் கழுத்தினை இழுத்துப் பிடித்து அவருடைய உயிரைப் பறித்தான்.

**55. நவநீத ப்ரிய**

வெண்ணெய் ப்ரியன் என்று சொல்லிக்கொண்டு, வெண்ணெய் திருடியவன் என்று அழைத்துக் கொள்ளும் ஸ்ரீகிருஷ்ணாவதாரியான ஸ்ரீஹரி. 1. நாம 56 ததிஸாரபோஜக 2. நாம 164 தாமோதர பார்க்கவும்.

**56. ததிஸாரபோஜக**

ததி - தயிர். ததிஸார - வெண்ணை அல்லது ஆடை. ததிஸார போஜக. வெண்ணெய் தயிர்களை தின்பவன். நந்தகோபனின்

வீட்டில் இருந்தபோது, தன் நண்பர்களான கோபாலகர்களுடன் கூடி, கோபிகா ஸ்த்ரீயர் வீட்டில் இருந்த வெண்ணெய் / தயிர்களை திருடித் தின்று அவர்களை கஷ்டப்படுத்தி வந்த ஸ்ரீகிருஷ்ணாவதாரியான ஸ்ரீஹரி.

**57. கோபவது லோல**

ராதா என்னும் கோபிகா பெண்ணை, அவளின் தீவிர பக்திக்கு மெச்சி, அருளியவனான ஸ்ரீகிருஷ்ணாவதாரியான ஸ்ரீஹரி.

**58. ஶீதகர குலதிலக**

ஶீத= குளிர்ச்சி. கர= கிரணங்களைக் கொண்ட. சந்திரனின் கிரணங்கள் குளிர்ச்சி. ஶீதகர = சந்திர வம்சத்தின் யாதவ குலத்திற்கு திலகமாக இருப்பவன். அதாவது, சந்திர குலத்தின் சிறந்தவன் - ஸ்ரீகிருஷ்ணாவதாரியான ஸ்ரீஹரி.

**59. ஸ்ருதி விக்யாத**

வேத உபநிஷத்களால் தேவதேவோத்தமன் என்று விசேஷமாக புகழப்படுபவனான ஸ்ரீஹரி.

**60. பக ஹர**

ஸ்கந்தனின் வரத்தினால் வெல்லப்பட முடியாதவனாக இருந்த பக, பூதனியின் சகோதரன். ஒரு நாள் மதியம், கோபாலகர்களுடன் சுற்றித் திரிந்த கிருஷ்ண பலராமர்கள், தாகத்துடன் நீர் குடிக்க யமுனா நதிக்கரைக்கு வந்தனர். கோபாலகர்கள் நீர் குடிக்கையில், மிகப்பெரிய உருவமான, பார்ப்பவர்களுக்கு பயமுறுத்தும் வகையில் ஒரு பக பறவை அந்த ஆற்றில் நடுவில் பாறை மேல் அமர்ந்து கிருஷ்ணனையே பார்த்துக் கொண்டிருந்தது.

கம்சனின் சேவகனான பகாசுரனே அந்த உருவில், கிருஷ்ணனைக் கொல்வதற்காக வந்திருந்தது. அனைவரும் பார்த்திருக்கையில், அது நேராக ஸ்ரீகிருஷ்ணனிடம் ஓடி வந்து, தன் வாயை அகலமாகத் திறந்து, அவனை விழுங்கிவிட்டது. ஆனால், ஸ்ரீகிருஷ்ணன், நெருப்பினைப் போல அதன் வயிற்றில் சுடத் தொடங்க, அந்தப்பறவை வெப்பம் தாங்காமல் கிருஷ்ணனை துப்பிவிட்டது. கிருஷ்ணன் அதன் நோக்கத்தை அறிந்து, அதன் வாயினை கிழித்து பகாசுரனைக் கொன்று போட்டான்.

உடன் பறவை இருந்த அந்த இடத்தில், கோர அசுரனின் உடலால் அது விழுந்தது. அனைவரும் பயந்தனர். கோபாலகர்கள் ஸ்ரீகிருஷ்ணனை புகழ்ந்தனர். இப்படியாக பகாசுரனைக் கொன்ற ஸ்ரீகிருஷ்ணாவதாரியான ஸ்ரீஹரி. (ஸ்ரீமத் பாகவதம் பூர்வார்த்த 12ம் அத்தியாயம்).

**61 கரிஹர**

வில் விழா என்று கூறி, கம்சன், விருந்தாவனத்தில் இருந்த கிருஷ்ண பலராமர்களை மதுரா பட்டணத்திற்கு வரவழைத்தான். ஸ்ரீகிருஷ்ண பலராமர் மதுரையில் துணி துவைப்பவனைக் கொன்று, அவனிடமிருந்த உயர்ந்த வகை ஆடைகளை உடுத்திக்கொண்டு, குப்ஜை கொடுத்த சந்தனத்தை பூசிக்கொண்டு, வில் இருக்கும் இடத்திற்கு வந்து, அங்கு இருந்த வில்லிற்கு நாண் ஏற்றுவதாக அதனை முறித்து, தம்முடன் போர் புரிந்தவர்களை வென்றனர்.

வில் விழாவின் மண்டபத்தின் மகா த்வாரத்திற்கு குறுக்காக நின்றிருந்த ‘குவலயாபீட’ என்னும் மதயானை, ஸ்ரீகிருஷ்ணனின் மேல் பாய்வதற்கு வந்தது. தன் தும்பிக்கையால் கிருஷ்ணனை தூக்கியது. கிருஷ்ணன் தன் கை முஷ்டியினால் அதனை பலமாக தாக்கி, அதன் கால்களுக்குள் புகுந்து வாலினைப் பிடித்து இழுத்தவாறு, திரும்ப முன்னர் வந்து அதன் முகத்தில் குத்தினான்.

இதனால் மதம் ஏறிய அந்த யானை, தன் தந்தத்தினால் அவனைக் குத்த வந்து, ஸ்ரீகிருஷ்ணன் நகர்ந்ததால் குறி தவறி, நிலத்தில் குத்தி, தந்தங்கள் உடைந்து, கீழே விழுந்தது. ஸ்ரீகிருஷ்ணன் கயிற்றினை சுற்றுவதைப் போல, யானையின் தும்பிக்கையைப் பிடித்து சுற்றி, யானையை தூக்கிப் போட்டு கீழே அடித்தான். யானையும் இறந்தது. உடன் ஸ்ரீகிருஷ்ணன் பலராமர்கள் தலா ஒரு யானைத் தந்தத்தை எடுத்துக்கொண்டு, அந்த யானைப்பாகனையும் கொன்று, முக்கிய மண்டபத்தில் நுழைந்தனர். இப்படியாக குவலயாபீட என்னும் கரியை (யானையை) ஸ்ரீகிருஷ்ணாவதாரியாக கொன்றவனான ஸ்ரீஹரி. (ஸ்ரீமத் பாகவதம் பூர்வார்த்த 40ம் அத்தியாயம்).

**62. சாணூரஹர**

கம்சன் ஏற்பாடு செய்த விழாவின் வாயிலில் நின்றிருந்த குவலயாபீட என்னும் மத யானையையும் அதனுடைய பாகனையும் ஸ்ரீகிருஷ்ணன் கொன்று, அதனுடைய தந்தங்களை பறித்துக்கொண்டு, தன் முதுகில் வைத்துக்கொண்டு, அண்ணன் பலராமனுடன் அட்டகாசமாக, ரங்க மண்டபத்தில் நுழைந்து மல்யுத்தம் நடக்கும் இடத்திற்கு அருகில் வந்து நின்றான். இதனை பார்த்த சாணூர என்னும் கம்சனின் சிறந்த மல்லன் அங்கு வந்து ஸ்ரீகிருஷ்ணனை மல்யுத்தத்திற்கு அழைத்தான்.

ஸ்ரீகிருஷ்ணன் – 'என்னுடைய சம வலிமை கொண்டவர்களுடன் போர் புரிவதற்கு நான் தயார். ஆனால் நீயோ மிகச்சிறந்த வீரன். நான் இன்னும் சிறியவன்' என்று கூறினான். அதற்கு அந்த சாணூரனோ 'இப்பொழுதே வெளியே ஆயிரம் யானைகளின் பலம் கொண்ட குவலயாபீடம் என்னும் யானையை நீ கொன்றிருக்கிறாய். மற்றும் இதுவரை பற்பல வலிமையாளர்களை எந்தவித சோர்வும் இல்லாமல் கொன்றிருக்கிறாய். ஆகையால் நீ சிறுவன் அல்ல' என்று கூறி அவர்கள் இருவரையும் மல்யுத்தத்திற்கு அழைத்தான்.

கிருஷ்ணன் சாணூரன் உடனும், பலராமன் முஷ்டிகன் உடனும் போர் புரிவதாக தீர்மானித்து, அந்த இடத்தில் தயாராக நின்றனர். போர் துவங்கியது. இங்கு ஒருவரை ஒருவர் வெல்ல வேண்டும் என்று அல்ல கொல்ல வேண்டும் என்பதே முக்கிய நோக்கமாக இருந்ததால் இருவரும் மிகவும் வலிமையுடன் போராடத் துவங்கினர். வாலிப தேகத்தைக் கொண்ட பலராமன், கிருஷ்ணன் இருவரும், கோகுலத்தில் ஓடிஆடி விளையாடியதை நினைத்துக்கொண்டு, கம்சன் மதயானையை போல இருக்கும் இந்த மல்யுத்த வீரர்களுடன் போர் புரிவதற்கு ஏற்பாடு செய்தது மிகவும் பாவமான காரியம். கம்சனின் இந்த அரங்கம் நாசமாகட்டும் என்று யுத்தத்தை பார்க்க வந்த மக்கள் சபித்தனர்.

கிருஷ்ணன் தன் முஷ்டியினால் குத்தியதால் சாணூரனின் தேகம் பலமாக அடிபட்டு, அவனுடைய உயிர் பிரிந்தது. அங்கு

பலராமனும் தன்னுடன் போர் புரிந்த முஷ்டிகனை, தன்னுடைய முஷ்டியினால் அடித்து கொன்று போட்டான்.

தங்களுடைய சிறந்த வீரர்கள் தோற்றனர் என்பதை கண்டு, உடனே கூட, ஷல மற்றும் தோஸல என்னும் மூவரும் பலராமன், கிருஷ்ணர் மேல் போர்புரிய வந்தனர். அந்த மூவரையும் இவர்கள் கொன்று போட்டனர். அங்கு நிறைந்த மக்கள் சபையில் கம்சன் ஒருவனைத் தவிர மற்ற அனைவரும் ராமகிருஷ்ணரின் வெற்றிக்காக ஜெய கோஷம் போட்டனர்.

இவ்வாறு கம்சனின் வீரர்கள் சானூரர்களை கொன்றவனான, வல்லவனான கிருஷ்ண அவதாரியான ஸ்ரீஹரி. (ஸ்ரீமத் பாகவதம் 10-42).

**63. மாதுளாந்தக**

வில் விழாவிற்காக அக்ரூரனை கோகுலத்திற்கு அனுப்பி, அவனுடன் ஸ்ரீகிருஷ்ண, பலராமர்களை வரவழைத்து, அவர் மேல் குவலயாபீட மத யானையை அனுப்பி, சாணூரன், முஷ்டிகன், கூட, சல, மற்றும் தோஸல என்னும் மல்லர்களையும் மல்யுத்தத்திற்கு அனுப்பி, அவர்கள் அனைவரின் தோல்வியினைக் கண்ட கம்சன் தன்னுடைய சேவகர்களுக்கு இவ்வாறு ஆணையிட்டான். ‘இந்த இரு கோபால புத்திரர்களையும் பட்டணத்தை விட்டு வெளியே அனுப்புங்கள். நீசமான வாசுதேவனை சிறையில் அடையுங்கள். என்னுடைய தந்தையான உக்கிரசேனனை கொல்லுங்கள்’. என்றான்.

அதற்குள்ளாக ஸ்ரீகிருஷ்ணன், கம்சன் அமர்ந்த சிம்மாசனத்தின் மேல் தாவினான். இதனைக் கண்ட கம்சன், தன்னுடைய கத்தி, கேடயங்களைப் பிடித்து, கிருஷ்ணனுடன் போர் புரிய வந்தான். கிருஷ்ணன் கம்சனின் மேல் பாய்ந்து, அவனுடைய கிரீடத்தை தள்ளி, அவனுடைய கூந்தலைப் பிடித்துக்கொண்டு சபை நடுவில் தள்ளி அவன் மேல் தான் விழுந்தான்.

கிருஷ்ணன் கம்சனை மிகவும் வலிமையுடன் தள்ளியதால் அவனுடைய கத்தி கேடயங்கள் கீழே விழுந்தன. இந்த சமயத்தில் கம்சனுக்கு உதவியாக யாராவது வந்தால், அவர்களைத்

தாக்குவதற்காக பலராமன், யானையின் தந்தத்தை பிடித்துக் கொண்டு நின்றான்.

கம்சனின் இதயத்தின் மேல் அமர்ந்த ஸ்ரீகிருஷ்ணன், தன்னுடைய முஷ்டியினால், அவனை மார்பில் அடித்தான். கம்சனின் மரணத்திற்குப் பிறகு, தம்முடன் போர் புரிய வந்த கம்சனின் எட்டுபேர் தம்பிகளான கங்க, ந்யக்ரோதக ஆகியோரையும் கிருஷ்ணன் கொன்றான். இவ்வாறு துஷ்ட கம்சனைக் கொன்று மாதுளாந்தக ஆன ஸ்ரீகிருஷ்ண அவதாரியான ஸ்ரீஹரி.

**64. பார்த்த ஸ்தாபக**

குருக்ஷேத்திரப் போர்க்களத்தில் போர்புரியும் சமயம் வந்தது. ஆனால் அர்ஜுனன், ஸ்ரீகிருஷ்ணனிடம், 'தன்னுடைய ரதத்தை இரு சேனைகளுக்கும் நடுவே கொண்டு நிறுத்தவும். தான் போர்புரியும் சேனையினரை பார்க்க வேண்டும்' என்றும் கேட்டுக்கொண்டான். (கீதை 1-20 - 23).

அப்படியே சேனைக்கு நடுவில் நின்று போருக்குத் தயாராக நின்ற, குரு, தந்தைக்கு சமமானவர்கள், மக்கள், தாத்தா, தாய்மாமன்கள், பெண் கொடுத்த மாமனார், பேரன்கள், மைத்துனர்கள் மற்றும் இன்னும் பல சம்பந்திகள் ஆகியோரைப் பார்த்த அர்ஜுனன், 'ஹே கிருஷ்ணா, நான் போர் புரியாமல் நின்று, இவர்கள் என்னைக் கொல்ல வந்தால்கூட சரி, நான் மட்டும் இவர்களை கொல்ல மாட்டேன். மூன்று உலகங்களின் அரசாட்சியும் கிடைப்பதாக இருந்தாலும், அதற்காக இவர்களை நான் கொல்ல மாட்டேன். வெறும் ஆட்சிக்காக இவர்களைக் கொல்ல மாட்டேன்' என்று கூறினான். (கீதை 1-34&35).

தர்மத்திற்கு எதிரான இந்த கருணைக்கு அபிமானி ஒரு அசுரன் என்றும், அவன் அர்ஜுனனிடம் தற்காலிகமாக ஆவேசம் கொண்டிருக்கிறான் என்றும் தெரிவிக்கிறார், த்ரிவிதார்த்த விவ்ருத்தி என்னும் கிரந்தம் இயற்றியவர். (கீதை 1-27).

இப்படியாக உறவினர்களின் பாசத்தினால் கட்டுப்பட்ட அர்ஜுனனுக்கு, அனைத்து தத்வ ரகசியத்தின் கீதோபதேசம், கிருஷ்ணன் கொடுத்த பிறகு, அவன் பிரமைகளை விட்டு, தான்

தன்னுடைய கடமையைச் செய்வதை பற்றியதான உண்மையான ஞானத்தைப் பெற்று, ‘கிருஷ்ணா, என்னுடைய மோகம் விலகியது. உன்னுடைய அருளால் கடமை சிந்தனை வந்தது. சந்தேகம் இல்லாமல் நான் போர் புரிகிறேன். உன்னுடைய சொல்படி நடக்கிறேன்’ என்று அர்ஜுனன் கூறினான். (கீதை 1-23).

இப்படியாக தர்ம யுத்தத்திற்கு தன்னுடைய கடமையை செய்வதற்குத் தயாரான அர்ஜுனனுக்கு, தத்துவ உபதேசம் கொடுத்து, தர்மத்திற்கு முன் நிறுத்திய ஸ்ரீகிருஷ்ண அவதாரமான ஸ்ரீ ஹரி.

**65. கௌரவாந்தக**

‘மம ப்ராணாஹி பாண்டவா:’ ஸ்ரீகிருஷ்ணன் இவ்வாறு கூறி, அதைப்போலவே அவர்களுக்கு வந்த ஒவ்வொரு பிரச்னைகளிலும் அவர்களுக்கு உதவியாக நின்று, அவர்களை அந்தந்த ஆபத்துகளிலிருந்து காப்பாற்றி ‘பரித்ராணாய ஸாதூனாம் வினாஷாய ச துஷ்க்ருதாம்’என்னும் தன் வாக்கினைப் போல, துஷ்டரான கௌரவர்களை அவர்களின் நலன்விரும்பிகளான சகுனி, கர்ண, ஜயத்ரத ஆகியோர்களையும், தர்ம ஸ்தாபனை செய்வதற்காக பாண்டவர்களால் கொல்ல வைத்தவனான ஸ்ரீகிருஷ்ணாவதாரியான ஸ்ரீஹரி.

**சக்ர ஷங்க$^{2}$ க$^{3}$தா$^{3}$ப்$^{3}$ஜத$^{4}$ர த்ரி**
**விக்ரமாச்யுத வரஹ வாமன**
**நக்ரஷிக்ஷக நாக$^{3}$ரக்ஷக நித்யத்ருப்த ஹரே |**
**ஷக்ர கி$^{3}$ரிஜார்ஜித பதா$^{3}$ப்$^{3}$ஜ த்ரி**
**வக்ர வது$^{4}$ ஸௌந்த$^{3}$ர்யதா$^{3}$யக**
**அக்ரூராபி$^{4}$ஷ்டத$^{3}$ விது$^{3}$ர உத்$^{3}$த$^{4}$வ வரேண்ய நமோ || 5**

**66. சக்ரதர. 67. ஷங்கதர 68. கதாதர. 69. அப்ஜதர.**

சதுர்புஜனான பரமாத்மன் தன் ஒவ்வொரு கையிலும் 1. சுதர்ஷன சக்கரம் 2. பாஞ்சஜன்ய சங்கு 3. ஷார்ங்க தனுஸ் மற்றும் 4. கௌமோதகி கதையை தரித்தவனான ஸ்ரீஹரி.

**70. திரிவிக்ரம**

1. ஸ்ரீவிஷ்ணு வாமன ரூபத்தினால் பலி சக்கரவர்த்தியிடம் தானமாக பெற்ற 3 அடி நிலத்தை அளக்கும் காலத்தில் ஏற்ற ரூபமே திரிவிக்கிரம ரூபம். இந்த ரூபத்தில் செய்து காட்டிய மூன்று செயல்கள்.

1. பலிச்சக்கரவர்த்தியிடமிருந்து தானம் பெற்ற 3 பாதம் பூமியை அளக்கும் காலத்தில், திரிவிக்கிரம ரூபத்தை எடுத்து, ஒரு அடியால் பூமண்டலத்தை அளந்து நின்றான். இரண்டாம் அடியால், அந்தரிக்ஷத்தை அளந்து, அதிலிருந்து பெற்ற ஏழு உலகங்களையும் தேவதைகளுக்கு திருப்பிக் கொடுத்தான்.

2. இரண்டாம் அடியால், அந்தரிக்ஷ லோகத்தை வியாபித்து, அதுத்யுலோக, மஹர்லோகம், ஜனோலோகம், தபோலோகங்களைத் தாண்டி, அந்த பாதம் சத்யலோகத்தைத் தொட்டது. அங்கு அந்த பாதத்தின் நகம் தட்டி, பிரம்மாண்டத்தின் ஓடு உடைந்து, வெளியில் பாய்ந்து கொண்டு இருந்த தண்ணீர் உள்ளே நுழைந்தது. பிரம்மன் அந்த தண்ணீரை தன்னுடைய கமண்டலத்தில் நிரப்பிக்கொண்டு, அனைத்து ரிஷி முனிவர்களுடன், அந்த பவித்ரமான தண்ணீரினால் திரிவிக்கிரம மூர்த்தியின் பாதங்களைக் கழுவினான். பிறகு அந்த திவ்ய பாதோதகத்தை அனைவரும் எடுத்துக் கொண்டனர். பிரம்மதேவன் திரிவிக்கிரமனின் பாதங்களைக் கழுவிய நீரே, கங்கா நதியாகப் பாய்ந்தது. பகீரதனின் நீண்ட முயற்சியால், கங்கை துருவ மண்டலத்தின் மேல் விழுந்து, கீழ் உலகங்களில் பாய்ந்தவாறு, பூலோகம், பாதாள லோகங்களில் பாகீரதியாக பாய்கிறது. இவ்வாறு பவித்ரளான கங்கை, த்ரிபதகாமினி ஆனாள்..

3. சிறிய பிரம்மச்சாரியாக வந்த வாமனன், தான் வேண்டி பெற்ற ரூபமான பூமிதானத்தில், இரண்டாம் பாதத்தில் பூ, வியோம ஆகிய உலகங்களை அளந்து சக்கரவர்த்தியின் அனைத்தையும் அபகரித்துக்கொண்ட பிறகு, தன்னுடைய மூன்றாம் பாதத்திற்கு இடம் எங்கே என்று அந்த பலியிடம் கேட்டான். அதற்கு பலி, திரிவிக்கிரமன் தன்னுடைய மூன்றாம் பாதத்தை வைப்பதற்கு தன்னுடைய தலையைக் காட்டி, தலைகுனிந்து அமர்ந்தான். அப்பொழுது பலியின் தாத்தா ஆன பிரகலாதன், மற்றும் பலியின்

மனைவியான விந்தியாவளி மற்றும் பிரம்மதேவனும், பலியை அருளுமாறு திரிவிக்கிரமனிடம் வேண்டிக் கொண்டனர்.

அந்த வேண்டுதலுக்கு செவிசாய்த்த திரிவிக்கிரம ரூபி பகவான், ‘இவன் அடுத்து சாவர்ணி மன்வந்திரத்தில் இந்திரனாக இன்னொரு முறை மூன்று உலக அதிபதி ஆகிறான். இப்பொழுது பாதாள உலகுக்கு தன்னுடைய அனைத்து பரிவாரங்களுடன் பிரயாணம் செய்து, அங்கு சர்வ அதிபதி ஆகட்டும். அங்கு அவனுக்கு எந்த பிரச்சனையும் இருக்காது. நான் அங்கு எப்பொழுதும் இவனுடைய வீட்டு வாயிலில் கதையை ஏந்திக் கொண்டு நின்று அருள்கிறேன்’ என்று கூறி மீண்டும் ‘அங்கு வசித்தவாறு என்னுடைய தரிசனத்தை பெறுவாயாக’ என்று பிரகலாதனுக்கு அருளினான்.

இந்திரன் – தேவதைகளுக்கு மூன்று உலக ஆளுமையை திரும்ப பெற்றுக் கொடுத்த வாமன மூர்த்தியை அனைத்து மரியாதைகளுடன் அமராவதிக்கு அழைத்து சென்று பூஜித்தான். இப்படியாக வாமன அவதாரத்தில் திரிவிக்கிரம ரூபத்தினால் மூன்று விக்ரமங்களை எடுத்தவனான – ஸ்ரீஹரி.

1. கருடன் இல்லாமல் மூன்று உலகங்களில் பாதங்களை வைப்பவனான – ஸ்ரீஹரி.
2. ரிக் யஜு ஸாம இந்த மூன்று வேதங்களிலும், இறந்த, எதிர் மற்றும் நிகழ் இந்த மூன்று காலங்களிலும், சத்வ, ரஜஸ், தமோ இந்த மூன்று குணங்களிலும்; ஸ்வர்க்க, பூ, பாதாள இந்த மூன்று உலகங்களிலும், தேவ, வாமன, தானவ இந்த மூவர்களிடமும்; சேதன, அசேதன, மற்றும் இவை இரண்டின் மிஸ்ர தேகத்திலும் பாதத்தை வைக்க வல்ல – ஸ்ரீஹரி. 3. அத்ரி ரிஷிக்கு தானே சிசுவாக ஒப்புக்கொண்டவனான ‘தத்த’ ரூபியான – ஸ்ரீஹரி.

**71. அச்யுத**
அச்யுதோயோ குணைர் நித்யமேவாகிலை |
ப்ரச்யுதோ சேஷ தோஷைஸ்ஸதா பூரித: ||
(துவாதச ஸ்தோத்திரம்)

அனைத்து குணங்களாலும் பூரணமாக இருந்து, எந்தவொரு கவலைகளும், தோஷங்களும் இல்லாதவனான – ஸ்ரீஹரி.

சிந்தாஸந்தாப லேபோத்பவ ம்ருதிம்த்தகஸ |
அசேஷ தோஷாதி தூரம் || தத்வபிரகாஷிகா (ஸ்ரீஜயதீர்த்தர்)

ஸ்வரூபத்தினால், குணத்தினால் மற்றும் க்ரியைகளால் ச்யுதி இல்லாதவன். ‘தனக்கு எந்தவொரு விதமாக ச்யுதி இல்லாததால் தான் அச்யுத என்று அழைக்கப்படுகிறேன் என்று பகவந்தன் கூறிக்கொண்டான். (மகாபாரத ஷாந்திபர்வ 342-71).

**72. வரஹ**

ஸ்வாயம்புவ மனு ஸ்ருஷ்டி காரியத்தை துவக்கியபோது, தின பிரளயத்தின் தண்ணீரில் மூழ்கிய பூ மண்டலத்தை மேலே தூக்கி நிலையாக நிறுத்தி வைப்பதற்கு பிரம்மதேவர் ஸ்ரீஹரியை வேண்டிக் கொண்டார். அதற்காக ஸ்ரீஹரி பிரம்மதேவரின் மூக்கிலிருந்து கட்டை விரல் உயரத்தில் சிறிய வராக ரூபத்தில் அவதரித்து நொடிப் பொழுதில் மிகப்பெரிய உருவத்தை கொண்டார். பிரளய ஜலத்தில் புகுந்து, பிரம்மனிடம் இருந்து பிறந்த ஆதி ஹிரண்யாக்ஷன் என்னும் அசுரனை தன்னுடைய கோரைப் பற்களால் குத்திக் கொன்றார். பூ மண்டலத்தை தன்னுடைய பற்களால் தாங்கி, மேலே எடுத்து வந்து நிறுவினார். (பாகவத 3-14 & 20 அத்தியாயங்கள்).

மறுபடி காஷ்யபரின் மனைவியான திதியின் சிறிய மகனாக ஹிரண்யாக்ஷன், விஷ்ணு வாயில் காப்பாளனான விஜயனின் அவதாரமாக பிறந்து, பூமியை அபகரித்தான். ஸ்ரீஹரி கிருதயுகத்தில் சுக்ல சம்வத்ஸர மாக சுத்த சப்தமி அஸ்வினி நட்சத்திரம் சாதனை யோகம் ஞாயிற்றுக்கிழமை பகல் 8 நாழிகையில் வராக அவதாரம் எடுத்து தன்னுடைய உள்ளங்கையால் அவனுடைய காதின் கீழ் அடித்து அவனை கொன்று தாராதேவியை அருளினார். இவ்வாறு மத்ஸ்ய அவதாரத்தைப் போல, வராக அவதாரமும் இரண்டு முறை ஆகியிருக்கிறது. அத்தகைய ஸ்ரீ ஹரி. (ஸ்ரீமத் மகாபாரத தாத்பர்ய நிர்ணயம் 3-39,40,41).

ஹிரண்யாக்ஷன் இரண்டு பேர். வராக அவதாரம் இரண்டு முறை. முதலாவது ஆதியில் பிரம்ம தேவனிடமிருந்து பிறந்தான். இவன்

பூமியை அபகரிக்கவில்லை. பூமி தானாக மூழ்கியது. ஸ்வேத வராக ரூபத்தில் ஹரி அவனை அடித்துக் கொன்றான். இரண்டாம் இரண்யாட்சன் முதலாம் இரண்யாசுரனின் ஆவேசத்தைக் கொண்டு, ஏழாம் மன்வந்திரத்தில் கஷ்யப திதியிடம் பிறந்து, பூமியை திருடி தண்ணீருக்குள் மூழ்கடித்தான். அப்பொழுது ஸ்ரீஹரி நீல வராகனாக, அவனுடைய காதின் கீழ் தன்னுடைய உள்ளங்கையால் அடித்து கொன்றார்.

**73. வாமன**

நாம 70 த்ரிவிக்ரம பார்க்கவும். ஸ்ரீமன் நாராயணன் அதிதி தேவியிடம், த்ரேதாயுகத்தில் தாது நாம சம்வத்ஸரம், பாத்ரபத சுத்த த்வாதசி, சிரவண நட்சத்திர த்ருதி நாம யோக, வெள்ளிக்கிழமை, பகல் 15ம் நாழிகையில், 'வாமன' என்னும் நாமத்தினால் அவதரித்தான். ஸௌந்தர்யத்தையே முக்கியமாகக் கொண்டிருக்கும் ஸ்த்ரீயை நியாமகனாக இருப்பவனான – ஸ்ரீஹரி.

பகவந்தன் ஸௌந்தர்ய ப்ரதானராக இருந்து, 'வாம' எனப்படும் ஸ்த்ரியரை நியமிப்பதால், 'வாமனி' எனப்படுகிறான் என்று சாந்தோக்ய உபநிஷத் சொல்கிறது. நாம 70. 'த்ரிவிக்ரம', 'கஷ்யபஸுத', 'உபேந்திர' பார்க்கவும்.

**74. நக்ரசிக்ஷக**

'ஹூஹூ' என்னும் கந்தர்வன் ஒரு முறை முதலையாக தோன்றி, தண்ணீரில் நின்றிருந்த 'தேவல' என்னும் ரிஷியின் பாதங்களைப் பிடித்து, அவரை தண்ணீரில் இழுத்தான். அப்பொழுது அந்த மகரிஷி, 'ஹே துஷ்டனே, உனக்கு இந்த முதலை பிறவியே நிரந்தரமாக இருக்கட்டும்' என்று சபித்தார். அந்த சாபத்தைக் கேட்டு வருந்திய கந்தர்வன், அதற்கான விமோசனத்தை வேண்டினான்.

'அடுத்து ஒரு யானை வந்து தண்ணீர் குடிப்பதற்கு இந்த ஏரியில் இறங்கும்போது, நீ இப்படியே அதனுடைய பாதங்களைப் பிடித்து இழுக்கும் சந்தர்ப்பம் வருகிறது. அப்பொழுது பகவானின் சக்கரத்தினால் உன்னுடைய இந்த முதலை பிறவி நீங்கி கந்தர்வ

பிறவி திரும்ப உனக்கு கிடைக்கும்' என்று அந்த தேவரிஷி கூறினார்.

ஒருமுறை இந்திரத்யும்ன என்னும் பாண்டிய தேசத்தின் அரசன், மௌன விரதத்தில் விஷ்ணு பூஜையை செய்து கொண்டு இருந்தபோது, அகஸ்திய முனிவர் அவனுடைய ஆசிரமத்திற்கு வந்தார். அப்பொழுது அந்த அரசன் முனிவருக்கு மரியாதையை, சேவை செய்யாத காரணத்தால் அந்த முனிவர் 'நீ கர்வம் கொண்டு இருப்பதால் யானையாக பிறப்பாய்' என்று சாபம் கொடுத்தார். சிறிது காலம் கழித்து அகஸ்திய முனிவரின் சாபத்திற்கு ஏற்ப விஷ்ணு பக்தனான அந்த இந்திரத்யும்ன என்னும் அரசன் யானையாக, தன்னுடைய சொந்தங்களுடன் தண்ணீரில் விளையாடிக் கொண்டு இருக்கையில், தேவரிஷியின் சாபத்திற்கு உள்ளான அந்த முதலை, அந்த யானையான கஜேந்திரனின் கால்களை பிடித்து தண்ணீரில் இழுத்தான். அப்பொழுது அது தன்னுடைய அனைத்து சக்திகளையும் பயன்படுத்தி முதலையை கரைக்கு இழுத்தது. இப்படியாக முதலையும் யானையும் ஒன்றுக்கொன்று போர் புரியத் துவங்கின. பல ஆண்டுகள் கழித்து யானைக்கு தன்னுடைய பூர்வஜென்ம சிந்தனை வந்து பகவானை ஸ்தோத்திரம் செய்ய துவங்கியது.

ஓம் நமோ பகவதே தஸ்ம்யைத ஏதச்சிதாத்மகம் |
புருஷாயாதி பீஜாய பரேஷாய ச தீமஹி ||

நான்காம் மன்வந்திரத்தில் ப்ரியவ்ரத ராஜனுக்கு ஹரிணி என்னும் மனைவியிடம் ஹரி நாமகனாக அவதரித்த பகவான், கஜேந்திரன் இருந்த இடத்துக்கு ஓடி வந்தான். வானத்தில் கருடன் மேல் அமர்ந்து, சக்கரபாணி ஆக தன்னை காப்பாற்றுவதற்கு தயாராக வந்த ஸ்ரீஹரியை, கஜேந்திரன் பார்த்து உடனே தன்னுடைய தும்பிக்கையால் அதே ஏரியில் இருந்த ஒரு தாமரையைப் தூக்கிப் பிடித்து வணங்கினான்.

சர்வ சமர்ப்பண பாவத்தினால் 'நாராயணா அகில குரோ, பகவன் நமஸ்தே' என்று பக்தி பாவத்துடன் வேண்டிக் கொண்டான். இதனால் மகிழ்ந்த ஸ்ரீஹரி தன்னுடைய சுதர்சன சக்கரத்தால்

அந்த முதலையின் அதாவது கந்தர்வனின் வாயினை துண்டித்தான். சுதர்சன சக்கரத்தின் ஸ்பரிசத்தால் அந்த கந்தர்வன் சாப விமோசனம் பெற்று, ஸ்ரீஹரிக்கும் அங்கு இருந்த அனைத்து தேவதைகளுக்கம் வணங்கி, தன்னுடைய உலகிற்கு திரும்பினான். கஜேந்திரனின் ரூபத்தில் இருந்த இந்த்ரத்யும்ன ராஜன், ஸ்ரீஹரியின் கர ஸ்பரிசத்தை அடைந்தான். (ஸ்ரீமத் பாகவத 8ம் ஸ்கந்தம். 1,2,3,4ம் அத்தியாயங்கள்).

**75. நாகரக்ஷக**

ரமணக தீவில் இருந்த காளிங்க என்னும் பாம்பு, ஒருமுறை கருடனின் ஆகாரத்தை தின்றதால், கோபம் கொண்ட கருடனால் துரத்தப்பட்டு, யமுனையின் ஒரு ஏரியில் வந்து விழுந்தது. முன்னர் ஒரு முறை, இந்த மடுவில் இருந்த மீனைத் தின்ற கருடனுக்கு ஸௌபரி ரிஷிகள், திரும்ப இந்த மடுவிற்கு வந்தால் உனக்கு மரணம் ஆகும் என்று சாபம் கொடுத்திருந்தார். ஆகையால் அங்கு இருந்த மடுவில் கருடனின் பயம் இருப்பதில்லை. ஆகையால் அது பயம் இல்லாமல் தைரியமாக சுற்றித் திரிந்தது.

ஸ்ரீகிருஷ்ணன் தன்னுடைய நண்பர்களுடன் பந்து விளையாடும்போது அந்த பந்து இந்த மடுவில் வந்து விழுந்தது. மடுவின் கரையில் இருந்த மரத்தை ஏறி ஸ்ரீகிருஷ்ணன் அந்த மடுவில் குதித்து, அந்த காளிங்கனுடன் போரிட்டு அதனுடைய தலைமேல் தாண்டவ நடனம் ஆடி, அதன் விஷம் அனைத்தையும் வெளியில் கக்க வைத்தான்.

நாகர பத்னிகள், தமக்கு மாங்கல்ய பாக்கியம் வழங்கவேண்டி ஸ்ரீகிருஷ்ணனிடம் பிரார்த்தனை செய்து கொண்டனர். அவர்களுடைய விருப்பத்தைக் கேட்டு, அந்த காளிங்கனுக்கு உயிர்ப் பிச்சை அளித்து, அதன் தலை மேல் தன்னுடைய பாதங்களின் ஸ்ரீசின்னங்களை பதித்ததால், அதற்கு கருடனிடமிருந்து இனிமேல் எவ்வித பயமும் இல்லை என்று அபயம் அளித்து, தன்னுடைய இருப்பிடமான ரமணக தீவிற்கு செல்லுமாறு ஆணையிட்டான். இவ்வாறு காளிங்கன் அங்கிருந்து

நீங்கியதால், யமுனையின் தண்ணீர் தூய்மை ஆனது. இவ்வாறு செய்த ஸ்ரீகிருஷ்ண அவதாரமான ஸ்ரீஹரி.

**76. நித்யத்ருப்த** - எப்போதும் திருப்தனாக இருப்பவனான – ஸ்ரீஹரி.

**77. ஹரி**
அனைத்து யாகங்களிலும் அவிர்பாகத்தை ஏற்றுக்கொள்பவன். அல்லது அப்ராக்ருதமாக இருந்து, சிறந்த நீல வண்ணம் கொண்டவன். (ஸ்ரீமத் மகாபாரதம் ஷாந்தி பர்வம் 347-68). அனைத்து ஜீவர்களின் இதயத்தில் இருந்து, அந்தந்த ஜீவர்களை வழி நடத்துவதாகவும் இருக்கும் மகாவிஷ்ணுவிற்கு அந்தராத்மா என்னும் பெயர் இருக்கிறது. இத்தகைய அந்தராத்மா பகவான் எப்பொழுதும் விருப்பங்களை நிறைவேற்றுகிறான். இவனே அனைத்து ஜீவர்களின் ரூபி ஆகிறான். (மானஸ ஸ்ம்ருதி).

சிறிதும் சுகம் இல்லாத சம்சாரத்தில் மூழ்கி இருக்கும் முமுக்ஷுகளுக்கு மிகவும் சிறந்ததாக மோட்சத்தைக் கொடுக்கும் அனைத்து உலகங்களுக்கும் தலைவனான ஸ்ரீஹரியின் ஆராதனையே இத்தகைய சிறந்த பலன்களை கொடுக்கிறது. (கிருஷ்ணாம்ருத மஹார்ணவ #74).

பல சங்கடங்களை பரிகரிப்பவனான ஸ்ரீஹரி. (ஸ்ரீமத் பாகவதம் 2ம் ஸ்கந்தம் 7ம் அத்தியாயம்).

**78. ஷக்த அர்ச்சிதபாதாப்ஜ**
நந்தகோபன் இந்திரபர்வ செய்து இந்திரனை ஆராதனை செய்ய விரும்பியபோது, ஸ்ரீகிருஷ்ணன் அதற்கு ஒப்புக்கொள்ளாமல் தடை செய்வதாக இந்திரன் கோபம் கொண்டு அசுர வேகத்தினால் பயங்கரமான மழை ஏழு நாட்கள் வரைக்கும் பெய்வித்தான். அப்பொழுது கோபாலகர்கள் அனைவரும் ஸ்ரீகிருஷ்ணனிடம் முறையிட, தன்னுடைய சிறு விரலினால் கோவர்தன மலையைத் தூக்கி கோபாலகர்கள் மற்றும் பசுக்களுக்கு ஆதரவு அளித்து அவர்களைக் காப்பாற்றினான். இந்திரனின் அசுர ஆவேசம் நீங்கிய பிறகு, ஸ்ரீகிருஷ்ணனிடம் தன்னுடைய தவறினை ஒப்புக் கொண்டு கங்கை நீரினால் அவனுடைய பாதங்களுக்கு அபிஷேகம் செய்து, அனைத்து தேவதைகளுடன் பூஜை செய்து சொர்க்கத்திற்கு திரும்பிச் சென்றான். (ஸ்ரீமத் பாகவத 10ம் ஸ்கந்தம் அத்தியாயம் 22, 23, 24, 25).

நரகாசுரன் அதிதியின் குண்டலங்களை அபகரித்துக் கொண்டு சென்றான் என்று இந்திரன் ஸ்ரீகிருஷ்ணனிடம் முறையிட, ஸ்ரீகிருஷ்ணன் சத்யபாமா உடன் கருடன் மேல் ஏறி, நரகாசுரனின் ப்ராக்ஜோதிஷ பட்டணத்திற்கு சென்று அந்த நகரத்தினை காப்பதற்காக வந்த ஐந்து தலைகளை கொண்ட முரன் என்னும் நரகாசுரனின் சேனாதிபதியை கொன்று 'முரஹர' என்று அழைக்கப்பட்டான். போருக்கு வந்த நரகாசுரனை சுதர்சன சக்கரத்தால் கொன்றான். ஸ்ரீகிருஷ்ணன் நரகாசுரனின் பட்டணத்திற்குள் வந்து, நரகாசுரன் திருடிச் சென்ற மணி பர்வதத்தை இந்திரனுக்கும், வெள்ளை குடையினை வருணனுக்கும் அனுப்பி, அந்தப்புரத்திற்கு திரும்பினான். அங்கு இருந்த பூதேவி, அதிதியின் கர்ண குண்டலங்களை ஸ்ரீகிருஷ்ணனுக்கு அர்ப்பணம் செய்து

நம: பங்கஜனாபாய நம: பங்கஜ மாலினே |
நம: பங்கஜ நேத்ராய நமஸ்தே பங்கஜாங்கயே ||

என்று வணங்கினாள். பூ தேவியின் வேண்டுகோளின்படி நரகாசுரனின் மகனான பகதத்தனுக்கு அபயம் அளித்து அந்த ராஜ்ஜியத்தின் சிம்மாசனத்தில் அமர்த்தினான். பிறகு ஸ்ரீகிருஷ்ணன் தேவலோகத்திற்கு திரும்பி இந்திரனால் பூஜிக்கப்பட்டு அதிதி தேவிக்கு கர்ண குண்டலங்களை அளித்தான்.

அதிதியின் குண்டலங்களை அவளுக்கு திரும்பக் கொடுத்து வரும் காலத்தில், ஸ்ரீகிருஷ்ணன் சத்யபாமா உடன், நந்தன வனத்திற்கு வந்தான். அங்கு தேவ மலரான பாரிஜாத புஷ்பத்தின் வாசனையை அவர்கள் நுகர்ந்தனர். சத்தியபாமை அந்த தேவமலர் தனக்கு வேண்டும் என்று கேட்டதால், ஸ்ரீகிருஷ்ணன் அது பௌலோமி ப்ருகுபதியான பலோமியில் பலோமாஸுரனால் பிறந்தவள். இந்திர பத்னியான சசி கோபம் கொண்டாள். மற்றும் போர் செய்ய வேண்டும் என்றாள் என்று கூறினாலும் சத்தியபாமை திரும்ப அடம் பிடித்ததால், ஸ்ரீகிருஷ்ணன் பாரிஜாத மரத்தினை பறித்து கருடன் மேல் அமர்த்திக்கொண்டு வந்தான். சசி வருத்தமடைந்தாள். இந்திரன் தேவர்களுடன் சேர்ந்து போருக்கு வந்தான். அந்த போரில் தோல்வி அடைந்த இந்திரன்,

ஶ்ரீகிருஷ்ணன் சத்தியபாமை இருவரையும் வணங்கி, அவர்களிடம் சரணாகதி அடைந்து, திரும்ப ஸ்வர்க்கத்திற்கு சென்றான். ஶ்ரீகிருஷ்ணன் தேவேந்திரனிடம் – நான் தேவலோகத்திற்கு வரும்போது இந்த மரம் நந்தவனத்திற்கு வந்து சேரும். இதனால், தேவலோகத்தின் மகிமைக்கு எவ்வித குறையும் வருவதில்லை என்று கூறினார்.

மற்றும் அந்த மரத்தினை சத்தியபாமைக்கு வாக்கு கொடுத்ததைப் போல அவளுடைய வீட்டில் நிறுவினான். (ஶ்ரீமத் பாகவத 10ம் ஸ்கந்தம் உத்தரார்த்த 66, 67ம் அத்தியாயம்).இப்படியாக ஷக்ர – இந்திரனால் பூஜை செய்துகொண்டு ஷக்ர அர்ச்சித பதாப்ஜனானவனான ஶ்ரீஹரி.

**79 கிரிஜார்ச்சித பாதாப்ஜ**

கிரிஜெ ராம மந்திரதிந்த பரமமங்களெயாதளு | என தாசர் கூறியதைப் போல, கிரிஜை ராம மந்திர தியானத்தினால் சர்வ மங்களமானதால், கிரிஜார்ச்சித பதாப்ஜனான ஶ்ரீஹரி.

ந ஜாபரம் தஸ்மாதவரம் சிந்தயதி பரந்து விண்ணநாதிகம் சிந்த்யாதி
ச ஷப்தாது ருத்ரஞ்ச பலி நாமச விஷ்ணுஞ்சைவ ஶ்ரீயம் கிரிம்
உமா சிந்தாயதி தேஹம் தத்யாஞானம் ந சாஸ்மராதி தி தத்வ நிர்ணயே ||14
(பாகவத தாத்பர்ய நிர்ணய 4ம் ஸ்கந்தம் 5ம் அத்தியாயம்)

அவர்களைப் பற்றி (கீழானவர்களை) சிந்திக்காமல், விஷ்ண்வாதிகளை சிந்தித்தவாறு சதி தேவி, தேகத்தை தியாகம் செய்தாள். இவ்வாறு கிரிஜார்ச்சித பதாப்ஜனான ஶ்ரீஹரி.

**80. த்ரிவக்ரவது ஸௌந்தர்யதாயக**

கந்தவித்தபலெயள குந்தனெணிஸதெ பரம
ஸுந்தரிய மாடி வஷனாத / வஷனாத கோ...
விந்த கோவிந்த நீனெந்த கருணாளோ ...
(ஶ்ரீஜகன்னாததாசரின் தத்வசுவ்வாலி #149)

குப்ஜை கம்சனுக்கு சந்தனத்தை அரைத்துக் கொடுக்கும் பணிப்பெண். கிருஷ்ணன் தனுர் யாகத்திற்காக மதுரா பட்டணத்திற்கு வந்து, ராஜ வீதியில் நடந்து வந்திருக்கும்போது கம்சனுக்காக சந்தனத்தை அரைத்துக் கொண்டு, அதனை ஸ்ரீகிருஷ்ணனுக்கு பக்தியுடன் சமர்ப்பணம் செய்தாள். மூன்று வகையாக வளைந்த அவள் தேகத்தையும், சந்தனத்தையும் தூக்கிப்பிடித்து, ஸ்ரீகிருஷ்ணன் உடனடியாக அவளை சரிப்படுத்தி அழகானவள் ஆக்கினான். அவள் அவனின் அங்க சங்கத்தை விரும்பி, தன்னுடைய வீட்டிற்கு வருமாறு அழைத்தாள்.

சிறிது காலத்தில் ஸ்ரீகிருஷ்ணன் அவளுடைய விருப்பத்தை நிறைவேற்றி, அவளுக்கு விஷோகா என்னும் புத்திரனை அருளினான். விஷோகா நாரதரிடம் உபதேசம் பெற்று, ஞானியாகி பீமசேனனின் சாரதி ஆனான்.

இந்த த்ரிவக்ரை முந்தைய பிறவியில் பிங்களை என்னும் வைஷ்யளாக இருந்து, மிகவும் விரக்தளாக, தன்னுடைய அந்தர்யாமியான ஸ்ரீஹரியே தனக்கு கணவனாக வர வேண்டும் என்று தியானம் செய்தவாறே உயிர் தியாகம் செய்தாள். இந்த பிங்களா , பிறகு ரமா ஆவேசத்தில், ஸ்ரீஹரியின் அங்க சங்கத்தை பெறுபவளான ஒரு அப்சரா ஆனாள்.

குப்ஜை முதலில் பூதேவி. துஷ்ட அரசரின் தர்ம, அர்த்த, காம என்னும் த்ரிவர்க்க பாலன ரூபத்தினால் மூன்று இடத்தில் வளைந்து, ‘த்ரிவக்ரெ’ எனப்பட்டாள். கிருஷ்ணன் அவளை திருத்தி, வேகமாக பூபாரத்தைக் குறைத்தான். (ரங்காசார்ய ஜோஷி இயற்றிய பாகவத).

கர்க ஸம்ஹிதை : சூர்ப்பணகையே குப்ஜையாக தன் மன விருப்பத்தை நிறைவேற்றிக் கொண்டாள். முன்னர் பிங்களா என்னும் அப்சரை – சூர்ப்பணகையாகி, ஸ்ரீராமனை மோகித்தாள். (ஸ்ரீமத் பாகவத. பூர்வார்த்த. 40ம் அத்தியாயம்).

**81. அக்ரூராபிஷ்டத**

துஷ்டனான கம்சன் அக்ரூரனை விருந்தாவனத்திற்கு அனுப்பி, தான் ஏற்பாடு செய்திருக்கும் வில் விழாவிற்கு ராமகிருஷ்ணர்

இருவரையும் அழைத்து வருமாறு கூறினான். அக்ரூரரிடமிருந்து இந்த பயணத்தின் கெட்ட நோக்கத்தை அறிந்து கொண்டு, அவர்கள் இருவரும் அடுத்த நாள் மதுரைக்கு புறப்படுவதாக தந்தை நந்தனிடம் கூறினர். நந்தன் அரசனுக்கு கொடுக்கவேண்டிய வரிகளுடன், சில கோப பாலகர்களையும் தயார் செய்து, ஸ்ரீகிருஷ்ண பலராமர்களுடன் அனுப்பினான்.

நந்தகோபனிடம் இருந்து விடைபெற்று ஸ்ரீகிருஷ்ண பலராமர், அவர்களை ரதத்தில் அமர்த்திக்கொண்டு, மதுராவிற்கான வழியில் சென்றான். மதிய வேளையில் யமுனா நதியின் கரையில், ஸ்ரீகிருஷ்ண பலராமன், ஸ்னானத்திற்காகவும், தாங்கள் கொண்டு வந்திருந்த பழங்களையும் எடுத்துக் கொள்வதற்காக, அந்த ரதத்தை நிறுத்தினார்கள். அக்ரூரர் அவர்களுடைய அனுமதியைப் பெற்று தானும் அந்த யமுனா நதியில் ஸ்னானம் செய்வதற்காக தண்ணீரில் மூழ்க, அங்கு ஸ்ரீகிருஷ்ண பலராமனைக் கண்டு வியப்படைந்தார்.

மறுபடி மேலே எழுந்து பார்க்கையில், ரதத்தில் அவர்கள் இருவரும் அமர்ந்திருப்பதை கண்டு திரும்ப தண்ணீரில் மூழ்கினார். மறுபடி அந்த தண்ணீரின் நடுவில், ஆயிரம் தலைகளைக் கொண்ட ஆதிசேஷனையும், அந்த சேஷனின் மேல் சங்கு, சக்கரம், கதை, பத்மங்களை தரித்தவாறு, கிரீட குண்டலங்களால் அலங்கரிக்கப்பட்டு, பீதாம்பர தாரியாக, லக்ஷ்மி உடனான சுவாமியைக் கண்டு வியப்படைந்தான்.

அந்தப் புதிய ரூபத்தைக் கண்டு அக்ரூரர் பக்தி பரவசம் அடைந்து, அவர்களை சுற்றி வந்து, அனந்த நமஸ்காரங்கள் செய்து, தண்ணீரிலிருந்து மேலே வந்து, ரதத்தில் புன்னகையுடன் அமர்ந்திருந்த ஸ்ரீகிருஷ்ணனைக் கண்டு திரும்ப விழுந்து வணங்கினான். இவ்வாறு அக்ரூரனுக்கு அபிஷ்ட பிரதனான ஸ்ரீகிருஷ்ண அவதாரியான ஸ்ரீஹரி. (ஸ்ரீமத் பாகவத 10ம் ஸ்கந்தம் 36,37,38 அத்தியாயங்கள்).

**82. விதுரவரேண்ய :**

விதுரன் திருதராஷ்டிரனுக்கு உபதேசம் கூறியதால், சகுனி, துரியோதனனுக்கு அது பிடிக்கவில்லை. துரியோதனன் விதுரனுக்கு சொல்லக்கூடாத கடும் சொற்களை கூறுகிறான். அதனால் மனம் நொந்த விதுரன், தன்னுடைய பெரிய வில்லினை ராஜ மகாதுவாரத்தில் முறித்து வைத்துவிட்டு, தீர்த்த யாத்திரைக்கு புறப்பட்டுச் சென்றான். தீர்த்த யாத்திரையில் விதுரன் உத்தவனைக் கண்டு, அவன் மூலமாக ஸ்ரீகிருஷ்ணன் பரந்தாமம் சென்ற கதையைக் கேட்டு, தன்னுடைய குரு, உறவினர்களின் மற்றும் யாதவர்களின் மரணத்தின் கதையையும் கேட்டு மிகவும் துக்கம் அடைந்தான்.

உத்தவன் கூறியதைப் போல, ஸ்ரீகிருஷ்ணன் உபதேசித்த சமயத்தில், அங்கு இருந்த மைத்ரேயர் அவர்களை சந்தித்து, அவர்கள் மூலமாக உத்தவன் ஸ்ரீகிருஷ்ணரிடம் இருந்து பெற்ற அனைத்து தத்துவ உபதேசங்களையும் அடைந்தான். (ஸ்ரீமத் பாகவதம் 3ம் ஸ்கந்தம்). இவ்வாறு தனக்கு பிரியமான உத்தவனுக்கு, தான் பரந்தாமத்திற்கு சென்ற பிறகும், மைத்ரேயர் மூலமாக உபதேசம் பெறுவதற்கு அருளிய ஸ்ரீகிருஷ்ண அவதாரமான ஸ்ரீஹரி. (ஸ்ரீமத் பாகவதம் 3ம் ஸ்கந்தம்).

**83 உத்தவ வரேண்ய:**

அனைத்து தேவதைகளும், பிரம்ம. ருத்ராதிகளை முன் வைத்துக் கொண்டு, ஸ்ரீ கிருஷ்ணன் இருந்த இடத்திற்கு வந்து, 'ஸ்வாமியே, நீ இல்லாமல் சொர்க்கம் களை இழந்து இருக்கிறது. சீக்கிரமாக இந்த அவதார காரியத்தை முடித்துக்கொண்டு வைகுண்டத்திற்கு வரவேண்டும்' என்று பிரார்த்தனை செய்தனர். அதற்கு ஸ்ரீ கிருஷ்ணன் – '18 நாட்களில் பாண்டவர்களை முன்வைத்து, 18 அக்ஷோஹிணி சைன்யத்துடன் இந்த செயலை முடிக்கிறேன். இன்னும் என்னுடைய அவதார காரியங்களில் பாக்கி இருப்பது யது வம்சத்தை குறித்தது மட்டுமே. அதனை அப்படியே விட்டு விட்டு வைகுண்டத்திற்கு வர இயலாது' என்று கூறி அவர்களை திருப்பி அனுப்பினான்.

பிராமணனின் சாபத்தை உண்மை ஆக்குவதற்காக அனைத்து யாதவர்களும் பிரபாச ஷேத்திர தரிசனம் செய்வதற்காக செல்ல, ஸ்ரீகிருஷ்ணனிடம் இருந்து அனுமதி பெற்றனர். அந்த ஸ்னானம் செய்வதாலேயே தக்ஷ சாபத்திலிருந்து சந்திரன் தனக்கு உண்டான க்ஷய ரோகத்தை போக்கிக் கொண்டதைப் போல, தாமும் தம்முடைய சாபத்தைப் போக்கிக் கொள்வதற்கு அங்கு செல்வதற்கு தயார் ஆகினர்.

ஸ்ரீகிருஷ்ணன் தன்னுடைய ஏகாந்த பக்தனான உத்தவனக்கு அவனுடைய வேண்டுகோளின்படி உபதேசம் அளித்து, அவதூத மற்றும் யது இவர்களுடன் பேச்சுவார்த்தை நடத்தி, அதற்குப் பிறகு பரம ஞான சாதனைகளை, ஜீவ பிரம்மனின் விஷயங்களை, புருஷார்த்த, தான யோக சித்தி விஷயங்களை, பகவத் விபூதிகளை, வர்ணங்கள் மற்றும் ஆசிரமங்கள் ஆகிய நியமங்களை, பகவத் பக்தியின் மேன்மைகளை, தத்துவ விஷயங்களை, சிருஷ்டி ஆகிய கிரமங்களை மற்றும் பகவத் ஆராதன கிரமத்தை தெரிவித்தார்.

பக்தர்களில் சிறந்தவனான உத்தவனே, அடுத்து, நீ என்னுடைய ஆணைப்படி, நாராயண ஆசிரமம் என்று அழைக்கப்படும் பதரிக்குச் செல் என்று ஸ்ரீகிருஷ்ணனால் ஆணையிடப்பட்டு தன்னுடைய பாக்கி வாழ்க்கையை பதரிகாசிரமத்தில் கழித்து, முக்தி அடைந்தான். (ஸ்ரீமத் பாகவதம் 11 ஸ்கந்தம்).

இவ்வாறு உத்தவனுக்கு தத்வோபதேசம் செய்து அருளிய ஸ்ரீகிருஷ்ணாவதாரியான ஸ்ரீஹரி.

**மதும4த2ன கைடப4 விதா3ரண**
**குத4ரவர அனந்தவர்ணா**
**பி4த ஜனார்த்த3ன ஸாமகா3யனவேத்3ய அனவேத்3ய |**
**விதி4 நிஷேதா3லிப்த ஸததவி**
**புத4 நியாமக நிர்ப4யாத்ம த்ரி**
**வித4 ஜனாஸ்ரய குஷஷயன ஸாரங்க3பாணி நமோ || 6**

**84. மதுமதன & 85. கைவப விதாரண**

கல்பாதியில் விஷ்ணு வடபத்ர ஷாயியாக படுத்திருக்கையில், அவனின் காதின் அழுக்கிலிருந்து மது கைடபர்கள் பிறந்து, நாபி

கமலத்தில் இருந்த பிரம்மனை துன்பப்படுத்தியபோது, பிரம்ம விஷ்ணுவிடம் முறையிட்டார். விஷ்ணு உபாயத்தினால் அவர்களை தன் துடையின் மேல் வைத்து கொல்கிறான். இவ்வாறு அவர்கள் இருவரையும், கொன்றதால் அவனுக்கு 'மதுஹர', 'கைடபாரி' ஆகிய பெயர்களைப் பெற்றவனான ஸ்ரீஹரி.

**86. குதரவர**

கு – பூதேவி. குதர – பூபாலகன், அரசன். 1. அரசர்களில் சிறந்தவனான – ராமாவதாரியான ஸ்ரீஹரி. 2. நான்கு தோள்கள் உள்ள – ராஜராஜேஷ்வர – என்னும் பரமாத்மன் 14 மன்வந்தரங்களில் இருக்கும் சக்ரவர்த்திகளில் இருந்து துஷ்ட அரசர்களை அழித்தவாறு, இந்த உலகத்தை காப்பாற்றிய ஸ்ரீஹரி.

**87. அனந்த வர்ணாபத**

ஓம் ஏதேன ஸர்வே வாக்யாதா வ்யாக்யாதா: ஓம் ||29 - பிரம்மசூத்திர அத்தியாயம் 1, பாதம் 4, அதிகரணம் 7, ஸூத்ரம் 29. இந்த சூத்திரத்தினால் 'யததீனம் யஸ்ய ஸத்தா தத்தத் ஷப்தேன பண்யதே' என்னும் நியமத்திற்கேற்ப ஜகத் அவனின் அதீனமே ஆகியிருப்பதால் ஜகத் அனைத்தும் அவனின் ஷப்தத்தினாலேயே செயல்களை செய்கின்றன. மற்றும் 'நா மானிஸர்வாணி யாமா விஷந்தி' என்னும் ஸ்ருதி, மிகவும் தெளிவாக சொல்வதாலும், ஜகத் அனைத்தும் அவனாலேயே ஸ்திரமாக இருப்பதால் ஸத் என்றும், அவனாலேயே நாசமும் ஆவதால் அஸத் என்றும், லயகாலத்தில் ஜகத்தையே ஸூக்ஷ்மமாக சுருக்குவதால், ஷூன்யன் என்றும், அயோக்யருக்கு துக்கங்களைக் கொடுப்பதால் தானே துச்சன் என்றும், யாரின் பாவனைக்கும் சிக்காதவன் ஆகையால், அபாவன் என்றும், இவ்வாறெல்லாம் தக்க காரணங்களால், சர்வ ஷப்த வாச்யனாக இருப்பவனான ஸ்ரீஹரி.

**88. ஜனார்த்தன**

1. நித்யர் என்று புகழ்பெற்ற ரமாதேவி, ப்ரக்ருதி, கால மற்றும் ஜீவத்மர் பகவத் அதீனராகி, ஏதாவது ஒரு விசேஷத்தை பெற்றிருப்பதால், பிறவிகளை கொண்டிருக்கிறார்கள். பகவான்

மட்டும் பிறவி இல்லாதவன் ஆகையால் 'ஜனார்த்தன' என்று அழைக்கப்படுபவனான ஸ்ரீஹரி.

ந ஜாயதெ அர்தயதி ச ஸம்ஸாரமிதி – ஜனார்த்தன: |
ந ஜாயதெ இதி ஜன: | அர்த்தயதி – ஹினஸ்தி ஸம்ஸாரமிதி – அர்த்தன: |
(பாப்யவ்யஷாகா – கீதா பாஷ்ய 10-18).

2. ஜீவாத்மரை ஸ்வகுணாச்சாதிகா மற்றும் பரமாச்சாதிகாவினால் தன் ஞானத்தை மூடி சம்சாரத்திலேயே சுற்றுமாறு செய்யும் பகவந்தன் தன் அன்பிற்கு பாத்திரர் ஆனவர்களை மட்டும் இந்த ஆச்சாதனைகளால் விடுதலை செய்து, அவரின் சம்சாரபந்தனத்தை நாசம் செய்கிறான். மற்றும் அவர்கள் ஜன்மாதிகளைக் கொண்டு, சம்சாரத்தில் விழாதவாறு அருளி 'ஜனார்த்தன' என்று அழைக்கப்படுபவனான ஸ்ரீஹரி.

3. ஸமுத்ரத்தில் இருக்கும், ஜன எனப்படும் தைத்யனைக் கொன்று, லோக ரக்ஷணைக்காக துஷ்ட நிக்ரஹ செய்தவனான ஸ்ரீஹரி. (சமுத்திரம் தாண்டும் காலத்தில் வருணனின் பிரார்த்தனையின்படி)

4. மூன்று வித ஜீவாத்மருக்கு, அவரவர்களுக்கு யோக்யமான கதியைக் கொடுத்து, முக்தியோக்ய ஜீவாத்மரின் லிங்கதேகத்தை பங்கம் செய்பவன் – ஜனார்த்தன நாமக ஸ்ரீஹரி.

**89. ஸாமகாயன வேத்ய**

வேத்ய – அறியப்படுபவன். சாமகானத்தினால் அறியப்பட்டு, தன் ஞானத்தை வெளிப்படுத்தியவனான ஸ்ரீஹரி.

**90. அனவேத்ய**

அனந்தகுண பரிபூர்ணனான காரணத்தால், முழுமையாக அறிவதற்கு முடியாத காரணத்தால், அனவேத்ய என்று அழைத்துக் கொண்டவனான ஸ்ரீஹரி.

**91. விதிநிஷேதாலிப்த**

விதி - நியமம், நிபந்தனைகள். நிஷேத - செய்யக்கூடாத செயல்கள். அலிப்த - உள்ளாகாதவன். எந்தவொரு விதி, விதிவிலக்குகளுக்கும் சம்பந்தப்படாத - ஸ்ரீஹரி.

**92. ஸததவிபுத நியாமக**

விபுத - விசேஷ புத்திசாலிகள். ஆத்மவிக்ஞானிகள். எப்போதும் முக்தி யோக்யரான ஆத்மஞானிகளை அவர்களுக்கு யுக்தியை அருள்பவனான ஸ்ரீஹரி.

**93. நிர்பயாத்ம**

ஜகத்கர்த்ரு தானே ஆகியிருப்பதால், எந்த காலத்திற்கும் எதனாலும் பயம் இல்லாதவனான - ஸ்ரீஹரி.

**94 த்ரிவித ஜனாஸ்ரய :**

தமோ குணத்தை அடையும் அசுரர்கள், தாமச கர்மங்களாலும், ஞானத்தாலும், நிச்சயமாக தமஸ்ஸினை அடைகிறார்கள். சத்வ குணத்தை அடையும் தேவதைகள், நல்ல கர்மங்களாலும், உத்தமமான ஞானத்தாலும், சிறந்த விஷ்ணு லோகத்தை அடைகின்றனர். இந்த விதிக்கப்பட்ட நியமனத்திற்கு என்றும் எங்கேயும் விலக்கு உண்டாவதில்லை. இரண்டும் கலந்த ஞானம் உள்ள மனிதர்கள், சுகதுக்கம் கலந்த கதியை அடைகின்றனர். இவ்வாறு மூன்று வித மக்களில் இருந்து கொண்டு, அவர் அவர்களுக்கு தக்க கதியை கொடுப்பவனான ஸ்ரீஹரி (ஸ்கந்த புராணம்).

**95 குஷஷயன**

தர்ப்பையின் படுக்கையில் படுத்திருக்கும் ராமன் போருக்காக புறப்பட்டு, கடற்கரைக்கு வந்தார். சமுத்திர ராஜன் தன்னுடைய வானர சேனைக்கு வழிவிட்டால் அந்த கரைக்கு அதாவது இலங்கைக்கு போவதற்கு சுலபம் ஆகிறது என்பதை அறிந்து, முதலில் சாம உபாயத்தை காட்டுவதற்காக, முதலில் மூன்று நாட்கள் தர்ப்பை படுக்கையில் படுத்திருந்தார். ஆனால் சமுத்திரத்தில் வழி ஏற்படாததால், சமுத்திர ராஜனின் மேல் கோபம் கொண்டு, ஸ்ரீராமன் தன்னுடைய வில்லில் அம்பு தொடுக்க,

சமுத்திர அபிமான வருணன், தன்னுடைய தலைமேல் பூஜைப் பொருட்களை தூக்கிக் கொண்டு வந்து, ஸ்ரீராமனை வணங்கி, ஸ்வாமியே, நீ என்னை வறண்டு போகச் செய்து தாண்டி செல்லும் சக்தியைக் கொண்டிருந்தாலும், சேதுவைக் கட்டி, கபி சேனைகளுடன் தாண்டிச் செல்வாயாக. அந்த சேதுவின் தரிசனத்தால், அனைவருக்கும் பிரம்மஹத்தி முதலான பாவங்கள் பரிகாரமாகி, உன்னுடைய புகழ் வளரட்டும் என்று பிரார்த்தனை செய்தான்.

வருண ராஜன் மேல் கருணைகொண்டு ஸ்ரீராமன், அவன்மேல் விடுவதற்காக தயார் செய்த அம்பினை, சமுத்திரத்தில் வசித்து வந்த ஜன என்னும் அசுரன் மேல் விட்டு அவனைக் கொன்றான். குஷஷயனனான ஸ்ரீ ராமாவதாரியான ஸ்ரீஹரி.

**96 சாரங்கபாணி**
தேவதைகள், ரிஷிகள் மற்றும் சதத்புருஷர்களே கோபியர்கள், கோபாலகர்கள் மற்றும் கோகுடும்பமாக பிறந்தனர். ஸ்ரீகிருஷ்ணன் தன்னுடைய பிரியமான பக்தர்களை கையில் பிடித்து, சாரங்கத்தினை பிடித்து, அதன் நாதத்தினால், அவர்கள் அனைவரையும் மகிழ்ச்சி பரவசப்படுத்திய ஸ்ரீகிருஷ்ண அவதாரம் ஸ்ரீஹரி.

**வாஸுதே$^{3}$வ குபா$^{4}$ஷ வாஹக**
**வாஸுவீய கபில ருஷப$^{4}$ மஹி**
**தா$^{3}$ஸ யக்ஞ த$^{3}$த்தாத்ரேய நாராயண நிராமய போ$^{4}$ |**
**ஸ்ரீ ஸனாதன ஸகலபு$^{4}$வவனி**
**வாஸ ஸங்கருஷண ஸதாஸ்மித**
**ஹாஸ ஸோம தி$^{3}$வாகரேக்ஷண ஸ்வப்ரகாஷ நமோ || 7**

**97 வாசுதேவ**
உத்தானபாதனின் மூத்த மனைவி ஸுநீதி. அவளின் மகன் துருவன். இளைய மனைவி ஸுருசி. அவளின் மகன் உத்தமன். தந்தையின் மடியில் உத்தமன் அமர்ந்திருந்தத்தைக் கண்ட துருவன், தானும் அங்கு அமரப் போக, அதனை விரும்பாத ஸுருசி, துருவனை கீழே தள்ளிவிட்டாள்.

அந்த அவமானத்தை தாங்க முடியாமல் தவம் செய்து ஸ்ரீஹரியை வேண்டியவாறு தன்னுடைய ஸ்தானத்தை பெற வேண்டும் என்று காட்டிற்கு சென்றான் துருவன். அந்த சிறிய வயதிலேயே திடமான மனதினால் கடும் தவம் புரிந்தான். பகவான் அந்த பாலகனின் கடும் தவத்திற்கு மெச்சி பிரத்யக்ஷம் ஆகி, சப்த ரிஷி மண்டலத்திற்கு மேலே இருக்கும் தேஜோ மயமான நட்சத்திர மண்டல அதிபத்யத்தை, அவனுக்கு அருளினான். அது துருவ மண்டலம் என்று அழைக்கப்பட்டது.

இவ்விதமாக துருவனுக்கு வரத்தை அளித்த வாசுதேவ ரூபியான ஸ்ரீஹரி (ஸ்ரீமத் பாகவத 2ம் ஸ்கந்தம் 7ம் அத்தியாயம்). வசுதேவ சுதனான வாசுதேவ நாம அபிமான ஸ்ரீகிருஷ்ண அவதாரம் ஸ்ரீஹரி. பகவான் அனைத்தையும் அறிந்தவன். அனைத்தையும் படைத்தவன் மற்றும் எப்பொழுதும் லீலைகளை புரிபவன். அதனாலேயே வாசுதேவா என்று அழைத்துக் கொள்கிறான் என்று சங்கராயண சுருதி சொல்கிறது (ஸௌங்கராயணஸ்ருதி – கர்ம நிர்ணய).

வசுதேவ எனப்படும் சுத்தமான அந்தக்கரணத்தில் பகவான் வெளிப்படுகிறான் என்பதாலேயே வாசுதேவன் என்று அழைத்துக் கொள்கிறான் என்று ருத்ர தேவர் கூறுகிறார். (பாகவத 4-3-23).

பகவான் அனைத்து பூதங்களையும் கட்டுப்படுத்துவதால் அல்லது அனைத்து பூதங்களின் இருப்பிற்கு ஆதரவு அளிப்பவன் ஆகையால் மற்றும் ஸ்வபாவத: தான் தேவனாக இருப்பதால் வாசுதேவ என்று அழைக்கப்படுகிறான் என்று மகாபாரதம் சொல்கிறது (மகாபாரத உத்யோக பர்வ 70-3).

**98 குபாஷவாஹக**

கு+பாஷ+வாஹக = பூதேவியின் பிரார்த்தனையை கேட்டவன். கு சொல்லின் அர்த்தத்திற்கு நாமம் 89 - குதரவர பார்க்கவும்.

1. அரசர்களின் ரூபத்தில் தைத்யர்களின் எண்ணிக்கை அதிகமாகி, அவர்களுடைய நடவடிக்கைகளை தாங்க முடியாமல், பூதேவி பசு ரூபத்தில் வந்து, தன்னுடைய கஷ்டங்களை பிரம்ம தேவனிடம் சொல்லிக் கொண்டு அழுதாள். அப்பொழுது பிரம்மதேவர்

அனைத்து தேவதைகளுடன் மற்றும் பசு ரூபத்தில் இருந்த பூதேவியுடன் பாற்கடலுக்குச் சென்று, ஸ்ரீஹரியை பிரார்த்தனை செய்தார். அவர்களின் பிரார்த்தனையை கேட்ட விஷ்ணு, 'நான் பூமியின் பாரத்தை குறைப்பதற்காக ஸ்ரீலக்ஷ்மி உடன் சேஷதேவனுடன் யதுகுலத்தில் வசுதேவர் தேவகியிடம் அவதாரம் செய்கிறேன், கவலைப்படாதீர்கள்' என்று அபயம் அளித்தான்.

அதன்படியே ஸ்ரீ கிருஷ்ண பலராமனாக அவதரித்து பூமியின் பாரத்தை குறைத்தவனான இத்தகைய ஸ்ரீஹரி. (ஸ்ரீமத் பாகவத 10ம் ஸ்கந்தம் பூர்வார்த்த 1ம் அத்தியாயம்).

தேவேந்திரனின் வேண்டுகோள் கேட்டு, பூமிபுத்திரனான நரகாசுரனை அவன் பெற்ற வரங்களுக்கு பிரச்னை வராதவாறு, சத்யபாமையால் கொல்லப்பட்டு, தானும் சத்யபாமையும் சேர்ந்து ஸ்வர்க்கத்திற்கு சென்று, அங்கு தேவேந்திரனால் மரியாதைகளை ஏற்று, திரும்பி வரும்போது, நந்தனின் வனத்தில் இருக்கும் பாரிஜாத மரத்தை, பாமையின் விருப்பத்திற்கேற்ப பறித்துக்கொண்டு கருடனின் மேல் ஏற்றிக்கொண்டு, ஸ்ரீகிருஷ்ணனின் புறப்பட்டான். சசிதேவியின் கோபத்திற்கு இந்திரன் செவிசாய்த்து, தேவர்களுடன் போருக்கு வந்து, ஸ்ரீகிருஷ்ணனால் வெல்லப்பட்டு, அவனுக்கு பூஜையை செய்து திரும்பிச் சென்றான். இவ்வாறு சத்யபாமையின் விருப்பத்திற்கேற்ப அந்த மரத்தினைக் கொண்டு வந்து அவளின் வீட்டில் ஸ்ரீகிருஷ்ணன் நிறுத்தினான். இவ்வாறு தன் மனைவியான பூதேவியின் விருப்பத்தினை நடத்திக் கொடுத்த ஸ்ரீகிருஷ்ணாவதாரியான ஸ்ரீஹரி. (ஸ்ரீமத் பாகவதம் 10ம் ஸ்கந்தம் 65ம் அத்தியாயம்).

நரகாசுரனைக் கொன்று ஸ்ரீகிருஷ்ணன் அந்தப்புரத்திற்கு வர, அங்கு இருந்த பூதேவி அதிதியின் கர்ணகுண்டலங்களை ஸ்ரீகிருஷ்ணனுக்கு அர்ப்பித்து,

நம: பங்கஜநாபாய நம:பங்கஜ மாலினே |
நம: பங்கஜநேத்ராய நமஸ்தே பங்கஜாங்க்ரயே ||

என்று வணங்கி தன் பேரனான பகதத்தனை காக்கவும் என்று வேண்டிக் கொண்டாள். அவளின் வேண்டுகோளின்படி, பகதத்தனுக்கு அபயம் அளித்து, அவனை அந்த ராஜ்யத்தின் சிம்மாசனத்தில் அமர வைத்த ஸ்ரீகிருஷ்ணாவதாரியான ஸ்ரீஹரி. (ஸ்ரீமத் பாகவதம் 10ம் ஸ்கந்தம் உத்தரார்த்த 64ம் அத்தியாயம்).

**99. வாஸவீய**

வாஸவி – வசுராஜனின் மகள். சத்யவதி. வாஸவீய – ஸத்யவதியின் மகன், வேதவியாசர். பிரம்மனின் மகன் வசிஷ்டர். வசிஷ்டரின் மகன் ஷக்தி. ஷக்தியின் மகன் பராஷரர். இவர், ஹரியே எனக்கு மகனாகட்டும் என்று தவம் செய்து வரம் பெற்றார். (ஸ்ரீமன் மகாபாரத தாத்பர்ய நிர்ணய ஸ்லோகம் 42-46).

ஸ்ரீஹரியின் பக்தனான வசுராஜன் காட்டில் மிருகங்களை கொல்வதற்காக சஞ்சரித்துக் கொண்டிருந்தபோது, மனைவியை மனதில் நினைத்தான். அப்போது அவனுடைய வீர்யம் கீழே விழுந்தது. அந்த வீர்யத்தினை ஒரு தொன்னையில் பிடித்து ஒரு பருந்திடம் கொடுத்து அதனை அவன் மனைவியிடம் கொடுக்குமாறு கூறினான். இதனைக் கண்ட இன்னொரு பருந்து, இதனுடன் போர் புரிய, அந்த தொன்னை கீழே ஓடிக்கொண்டிருந்த யமுனா நதியில் விழுந்தது. அதனை ஒரு பெண் மீன் விழுங்கியது. அந்த மீனை மீனவர்கள் பிடிக்க, அந்த மீனின் வயிற்றில் ஒரு பெண் குழந்தை மற்றும் ஒரு ஆண் குழந்தை இருப்பதைக் கண்டனர். அந்தக் குழந்தைகளில் பெண் குழந்தையே சத்யவதி. இவளே வேதவியாசரின் தாய்.

பராசர ரிஷி, வசிஷ்ட யக்ஞவல்க்ய முதலான முனிகளின் சபையில் விவாக ஹோமம் செய்த பிறகு, தந்தையான சக்ரவர்த்தி, சத்யவதியை தானம் செய்த பிறகு, யமுனா நதியில் தோணியால் நதியை தாண்டும் சத்யவதியை சங்கமித்தான். அந்த சத்யவதிதேவியில் சுக்ஞானத்தினால் பூர்ணனான ஸ்ரீஹரி அவதரித்தான். (மகாபாரத தாத்பர்ய நிர்ணய 10-47). இவ்வாறு அவதரித்த வேதவியாசர் உலக தர்மங்களை இயற்ற வேண்டும் என்னும் விருப்பத்தினால், அவதரித்த ஏழு நாட்களிலேயே பிராமணத்வத்தைப் பெற்று, மாதா பித்ருகளுக்கு ‘எப்போது என்னை

நினைக்கிறீர்களோ, அப்போது நான் உங்கள் எதிரில் வருவேன்' என்று வரத்தைக் கொடுத்தார். (ம.பா.தா.நி. 10-56). இவ்வாறு சத்யவதி வாசவி தேவியின் புத்திரனாக அவதரித்தவன் ஆகையால், வாசவீய ஆன ஸ்ரீஹரி.

**100. கபில**

பகவந்தன் அனந்த சுகஸ்வரூபன். உலகத்தின் ரக்ஷகன் மற்றும் சம்ஹாரகன். ஆகையாலேயே ஞானிகள் அவனை 'கபில' என்று அழைத்தனர். (கீதா பாஷ்ய 10-26). கர்தம மஹரிஷியின் தவத்திற்கு மெச்சி, பகவந்தன் அவனுக்கு திருமணம் செய்து கொள் என்று கூறினான். ஸ்வாயம்புவின் மனு தன் மகளான தேவஹூதியை அவனுக்குக் கொடுத்து திருமணம் செய்தான். கர்தம மஹரிஷி தன் யோகபலத்தினால் விமானத்தைப் பெற்று, மனைவியுடன் ஆகாயத்தில் பறந்தான். அவர்களிடம் 'கபில' ரூபி பகவந்தன் அவதரித்தான். இந்த கபில ரூபி பகவந்தன், தன் தாய்க்கு சம்சார துக்க நாசகமான சாங்க்ய யோக, பக்தியோக, வைராக்ய விஷயங்கள், புண்ய பாப கர்ம விஷயங்கள் ஆகியவற்றை போதித்தார். இந்த விஷயங்களை அறிந்து தேவஹூதி முக்தள் ஆனாள். ஸ்ரீஹரி அவதரித்த 23 அவதாரங்களில் இது மூன்றாவது. (பாகவத 3ம் ஸ்கந்தம் அத்தியாயம் 26-34). இத்தகைய கபிலரூபியான ஸ்ரீஹரி.

**101. ருஷப**

நாபிராஜனின் மனைவியான மேருதேவியில், பிராமணரின் வாக்கினை வீண் ஆக்காமல், ஞான மற்றும் காந்தியுள்ளவனாக ருஷப நாமத்தினால் மகனாக அவதரித்தான். ஜிதேந்திரியனும், வைராக்கியசாலியும், பிரம்மஞானியும் ஆன இவன், சன்யாச ஆசிரமத்தின் சத்சம்பிரதாயங்களை முக்தியோக்ய ஜீவர்களுக்கு உபதேசித்தான். இது ஸ்ரீவிஷ்ணுவின் 23 அவதாரங்களில் ஒன்பதாவது. ருஷப நாமக அவதாரியான ஸ்ரீஹரி. (ஸ்ரீமத் பாகவத 2ம் ஸ்கந்த 7ம் அத்தியாயம், 5ம் ஸ்கந்தம் 3ம் அத்தியாயம்).

புகழினை விரும்பி தினமும் பாராயணம் செய்யவேண்டும் என்பவரின் பயனுக்காக ஸ்ரீருஷப தேவரின் மகிமா பத்யத்தை இங்கு கொடுத்திருக்கிறோம்.

ஸ்லோக:
நித்யானுபூத நிஜலாப நிவ்ருத்தத்ருஷ்ண:
ஸ்ரேயஸ்யத ப்ரசனயா சிரஸுப்த புத்தே: |
லோகஸ்யய: கருணயாsபய மாத்மலோக
மாக்யான்னமோ பகவதே ருஷபாய த ஸ்மை ||30

ஸ்ரீஹரியின் அவதாரமான ருஷபதேவர், எப்போதும் ஸ்வரூப பூத ஆனந்தத்தின் அனுபவம் உள்ளவர்கள். ஆகையாலேயே அவனுக்கு வேறு எதுவும் ஆசையில்லை.

அனாதியிலிருந்து அஞ்ஞானிகளாக, கெட்ட செயல்களை செய்தவாறு மோட்ச சாதனையை அறியாத யோக்ய ஜீவர்களின் மேல் உள்ள கருணையால், ஆத்மதத்வ ஞான உபதேசத்தை செய்தவனும், சம்சாரபய பரிகாரம் செய்தவனும், அபரோக்ஷ ஞானத்தை அருள்பவனுமான ருஷப பகவந்தனுக்கு நமஸ்காரம். (ஸ்ரீமத் பாகவதம் 5-6).

**102. மஹிதாஸ**
பிரம்மதேவனின் மகனான விஷால என்பவனின் மனைவியான இதராதேவியில் அவதரித்த மஹிதாஸ ரூபி பரமாத்மனின் அவதாரம் என்றும், இந்த மஹிதாஸ ரூபி பரமாத்மனே ஐதரேய உப நிஷத்திற்கு ரிஷி என்றும் சொல்லப்படுகிறது. இதே அவதாரத்தில், நாரதருகு பஞ்சராத்ர சாஸ்திரத்தை உபதேசித்தான். முக்திக்கு காரணம் எனப்படும், கர்மயோக மற்றும் ஞான யோகங்களை, பாகவதத்தை உபதேசித்தான். இதனை அறியத்தக்கதவர்கள் வைஷ்ணவரே தவிர, அவைஷ்ணவர்கள் இல்லை. இத்தகைய மகிமையைக் கொண்டவனான ஸ்ரீஹரி. (ஸ்ரீமத் பாகவத 2-7).

**103. யக்ஞ**
ருசி ப்ரஜேஷ்வர மற்றும் அவனின் மனைவியான ஆகூதிதேவியில் ஹரி யக்ஞ நாமகனாக அவதரித்தான். அனாதி பத்னியான லட்சுமிதேவியும் தக்ஷிணா நாமகளாக அவதரித்தாள். யக்ஞன் ப்ரதம மன்வந்தரத்தில் இந்திர பதவியை ஆண்டான். அந்த மன்வந்தர தேவதைகளுக்கு துஷிதர் என்று பெயர். தன்

மனைவியான தக்ஷிணா தேவியில் யம – அதாவது, இந்திரிய நிக்ரஹ உள்ளவனான யம என்னும் 12 பேர் தேவதைகள் பெற்றான். உலகத்தின் துக்க நிவாரண காரியங்களை செய்த இவனை மாதாமஹனான ஸ்வாயம்புவ மனு பரிகரித்தான். சம்சார துக்கத்தை பரிகரிப்பவனாகையால் யக்ஞனுக்கு ஹரி என்னும் பெயர் பொருத்தமாக இருக்கிறது. இத்தகைய யக்ஞ நாமகனான ஸ்ரீஹரி. (பாகவத 2-7).

**104. தத்தாத்ரேய**

அத்ரி மஹரிஷி பகவந்தனையே புத்திரனாக அடைய வேண்டும் என்று செய்த தவத்திற்கு மெச்சி, பகவந்தன் தரிசனம் அளித்து 'முனிவர்யரே, நானே என்னை உங்களிடம் மகனாக ஒப்பிக்கிறேன்' என்று ரிஷி பத்னியான அனுசூயாதேவிக்கு கைக்குழந்தையாக ஒப்பித்துக் கொண்டான். இவ்வாறு அவருக்கு தானே தத்த நாமத்தினால் தத்தாத்ரேய என்று, தன் பாதசேவை செய்து, பரிசுத்தத்தைப் பெற்ற, ஹைஹயர் என்பவருக்கு அணிமாதி அஷ்ட ஐஸ்வர்ய சித்தியை, பார லௌகிகமான மோட்சத்தை அருளிய தத்தாத்ரேய ரூபி ஸ்ரீஹரி.

**105. நாராயண**

தர்ம என்னும் முனிவரின் பத்னியான மூர்த்தி, தக்ஷனின் 13ம் மகள், என்பவளின் வயிற்றில் 'நாராயண' ரூபத்தினால் அவதரித்தான். இந்த அவதாரத்தில் பகவந்தன் வெளிப்படுத்திய தவ சக்தி வர்ணிக்கமுடியாததாகும். தபோ மார்க்கத்தின் சிறப்புகளை உலகிற்கு காட்டுவதற்காகவே கடும் தவம் செய்த இவனைக் கண்டு, தேவேந்திரன் பயப்பட்டு, அந்த தவத்தினை கலைப்பதற்காக ரம்பை, மேனகை முதலான அப்ஸர ஸ்த்ரீயர்களை அனுப்பினான்.

அவர்களும் எவ்வளவோ முயற்சி செய்து, அவனை மயக்க முயற்சித்தனர். கடைசியில் நாராயண ஸ்வாமி, அவர்கள் பார்த்துக் கொண்டிருக்கையிலேயே தன் துடையிலிருந்து அவர்கள் அனைவரின் அழகை மீறுவதான ஊர்வசி என்னும் அழகான பெண்ணை படைத்தார். இதனைக் கண்டு ரம்பாதி அனைத்து அப்ஸர பெண்களும் வெட்கம் அடைந்தனர்.

நாராயண சொல்லின் சில அர்த்தங்கள்:

1. குணங்களைக் கொண்டவனாக – ‘சகலகுண பரிபூர்ண’ ஆகியிருக்கிறான்.

2. தோஷதூரனாகி – நித்ய நிர்முக்த தோஷன்’ ஆகியிருக்கிறான்.

3. வேதப்ரதிபாத்யனாகி – வேதங்களுக்கு ஆதரவளிப்பவன் ஆகியிருக்கிறான்.

4. மனிதர்களுக்கு – உற்பத்தி மற்றும் ஆதரவுக்கு காரணன் ஆகியிருக்கிறான்.

5. நர சமூகத்திற்கு – வணங்கப்படுபவன் மற்றும் ஆதரவுக்கு காரணன் ஆகியிருக்கிறான்.

6. மனிதர்களுக்கு அதிபதியான – முக்யவாயுதேவருக்கு – பிடித்தவனும், ஆதரவுக்கு காரணன் ஆகியிருக்கிறான்.

இத்தகைய நாராயணரூபியே ஸ்ரீஹரி.

நாராயண ஷப்தம் அனேக அர்த்தங்களைக் கொண்டது. ஸ்ரீஹரியின் பற்பல மகிமைகளை நிரூபிக்கிறது. அவற்றில், குணபூர்ணத்வம், நிர்தோஷத்வம், ஞேயத்வம் (யோக சாதனைகளால், தகுதிக்கேற்ப அறியப்படத்தக்கவன்), கம்யத்வ (முக்தர்களால் வணங்கப்படுபவன்) என்னும் அர்த்தங்கள் முக்கியமானவை. இவ்வாறு நாராயண என்னும் சொல்லிற்கு ஸ்ரீபிதருஹள்ளி ஸ்ரீனிவாசாச்சார்யர் 72 அர்த்தங்களை தம் கிரந்தத்தில் சொல்லியிருக்கிறார். இத்தகைய நாராயணரூபி ஸ்ரீஹரி.

**106. நிராமய**

அனைவரின் சர்வரோக பரிகாரகனாக தான் ஸ்வத: நிரோகியாக இருப்பவனான ஸ்ரீஹரி.

**107. ஸ்ரீ ஸனாதன**

ஸ்ரீரமாதேவியரைவிட மூத்தவன். அதாவது, ஸ்ரீஹரி, ஸ்ருஷ்டியை செய்யும் காலத்திற்கு முதலில் ஸ்ரீரமாதேவியை படைத்து, பிறகு அனைத்து ஸ்ருஷ்டியையும் செய்தான். ஆகையால், ஸ்ரீலட்சுமிதேவியைவிட ஸனாதனன் – முதல் அல்லது முன்பே இருந்தவனான ஸ்ரீஹரி.

**108. ஸகலபுவன நிவாஸ**

விராடபுருஷனின் நாபி கமலத்திலிருந்து தலை வரை, ஏழு உலகங்கள் உள்ளன. நாபியிலிருந்து கீழே ஏழு உலகங்கள். பூலோகத்தின் மேல் ஏழு, கீழே ஏழு என மொத்தம் 14 உலகங்கள் உள்ளன. 1. ஸத்யலோக – பிரம்ம, விரிஞ்சிரூபி ஸ்ரீஹரி. 2. தபோலோக 3. ஜனோலோக 4. மஹர்லோக, உபேந்திரரூபி ஸ்ரீஹரி. 5. ஸ்வர்க்க 6. அந்தரிக்ஷ – ஸவித்ராந்தர்கத சிம்ஷுமார ரூபி ஸ்ரீஹரி. 7. பூலோக.

ஆத்யம் ஸ்வயம் வ்யக்தமிதம் விமானம் ரங்கசஞ்ஞிதம் |
ஸ்ரீமுஷ்ணம் வெங்கடாத்ரிஸ்ச ஸாளக்ராமஸ்ச நைமிஷம் |
தோத்தாத்ரி: புஷ்கரன்சைவ நர நாராயணாஷ்ரமம் |
அஷ்டே மே மூர்த்தய: ஸந்தி ஸ்வயம் வ்யக்தா:மஹீததே ||

இவ்வாறு எட்டு மூர்த்திகளைக் கொண்ட – ஸ்ரீஹரி.

8. அதல

9. விதல – ஹாடகேஷ்வர நாமக சிவன் பார்வதி சகிதமாக இருக்கிறான். அவனின் அந்தர்யாமியாக இருப்பவனான ஸ்ரீஹரி.

10. ஸுதல – வாமனரூபி பகவந்தன் கதாதாரியாக பலிசக்ரவர்த்தியின் வாயிலில் காத்திருப்பவனான ஸ்ரீஹரி.

11. தலாதல – ருத்ரரால் அருளப்பட்ட, யமதூதர்கள் பயம் இல்லாமல் இங்கு இருக்கிறார்கள்.

12. மஹாதல – கத்ரு புத்ரனான, அனேக தலைகளைக் கொண்ட க்ரோதவஷ என்னும் பாம்பு இங்கு இருக்கிறது.

13. ரஸாதல – திதி புத்ரனும், தனு புத்ரனும், நிவாதாகவசரும், காலகன்யா புத்ரரும் ஆகிய பல தேவ-எதிரிகள் இங்கு இருக்கின்றனர்.

14. பாதாள – வாசுகி முதலான நாகபதிகளும், சங்கு, குலிக, மஹாஷங்க, ஷ்வேத, தனஞ்சய ஆகியோர் இங்கு வசிக்கின்றனர். அவர்களின் தலைகளில் இருக்கும் மணிகள் இருட்டினை ஓட்டவல்லதாக இருக்கிறது. பாதாள உலகத்தின் கீழ் 30,000 யோஜனை தூரத்தில் சங்கர்ஷண சேஷ தேவர் இருக்கிறார். முக்தி யோக்ய உபாசகரான மனதில் நிலைத்திருந்து, அவரில் இருக்கும் அஞ்ஞான, அன்யதா ஞானங்களை வேகமாக விலக்குபவனான சேஷதேவாந்தர்கத சங்கர்ஷணரூபி – ஸ்ரீஹரி.

ஸித்தாதிவினுத ஸந்தத பாதாளவாஸி - கபிலரூபி பகவந்தன்.இவ்வாறு 14 உலகங்களில் வெவ்வேறு ரூபங்களில் வசிப்பவனான ஶ்ரீஹரி. (ஶ்ரீமத் பாகவதம் - 5ம் ஸ்கந்தம் - 23ம் அத்தியாயம்).

**109. சங்கர்ஷண**

ஶ்ரீமன் நாராயணன் லோகோபகாரத்திற்காக நிர்விகாரமான, சுத்த ஸ்ருஷ்டியின் நிமித்தத்தால், முதலில் வாசுதேவ ரூபத்தை எடுத்து, பிறகு சங்கர்ஷண ரூபத்தை எடுத்தான். இந்த ரூபம் அனைத்து சம்ஹார காரணமாகி லயகாரகம் ஆனது. இந்த அவதாரத்தில் லட்சுமி 'ஜயா' என்ற ரூபத்தைக் கொண்டாள்.

ஸோயம்விஹார இஹமே தனுப்ருத்ஸ்வபாவ |
ஸம்பூதயே பவதி பூதி க்ருதேவ பூத்யா: ||5
சங்கர்ஷணஸ்சஸ பபூவ புன: ஸுநித்ய: |
ஸம்ஹாரகாரண வபுஸ்ததனுக்ஞயைவ ||6
தேவிஜயேத்யனு பபூவ ஸ ஸ்ருஷ்டி ஹேதோ: |
ப்ரத்யும்ன தாமுபகத: க்ருதிதாம் ச தேவி ||7
- மஹாபாரத தாத்பர்ய நிர்ணய 1ம் அத்தியாயம்.

**110. ஸதாஸ்மிதஹாஸ**

எப்போதும் அமைதியான சித்தத்தில் ஆனந்த அதிஷயத்திலேயே இருந்து புன்னகை புரிந்தவாறு தன் பக்தர்களை மகிழ்ச்சிப்படுத்துபவனான - ஶ்ரீஹரி.

**ஸோம திவாகரேக்ஷண: - ஈ க்ஷணனோடு**
**111. ஸோமகரேக்ஷண: & 112. திவாகரேக்ஷண**

சந்திரசூரியர்களைப் படைத்து, அவர்களுக்கு தக்க செயல், பலம் மற்றும் ஓடாடுவதற்கு ஆகாயத்தில் வழி ஆகியவற்றை ஏற்பாடு செய்து கொடுத்த, வருண நாமக பகவந்தன், தன் ஆணைக்கேற்ப எப்போதும் சஞ்சரிப்பதற்கு சூரியனுக்கு ஆகாயத்தில் உத்தமமான வழியை செய்து கொடுத்தான் என்று ரிக்வேதம் (24-8 மற்றும் பாஷ்யம்) சொல்கிறது. இத்தகைய ஶ்ரீஹரி.

**113. ஸ்வப்ரகாஷ**

பிறரின் உதவியும், ஆணையும் இல்லாமல் தானே ஸ்வத: மிகவும் ஒளிபொருந்தியவனாக இருப்பவனான ஸ்ரீஹரி.

**114. சேஷஷயன**

பாற்கடலில் ஸ்ரீலட்சுமிதேவி மற்றும் தன் ஏகாந்த பக்தரான வாயு, கருடர்களால் சேவை பெற்றுக்கொள்ளப்பட்டு, சேஷதேவரை படுக்கையாக ஆக்கிக்கொண்டு படுத்திருப்பவனான ஸ்ரீஹரி (நாம 197 விளக்கத்தை பார்க்கவும்).

**சேஷஷயன ஜக[3]ச்சராசர**
**போஷகாதா[4]ரக ஸ்வஜனஹ்ருத்[3]**
**பூ[4]ஷணாபரிச்சின்ன அப்ரேயாதி[3] ஸ்ருதிவக்த |**
**கோ[4]ஷ[2]வர்ண ஸம்பூர்ணவாச்யா**
**சேஷ தோ[3]ஷவிதூ[3]ர க[2]ளஜன**
**பீ[4]ஷணாப்ராக்ருத அனுபம பரமபுருஷ நமோ || 8**

**ஜகச்சராசர போஷகாதாரக**
**115. ஜகத் சர போஷக**
**116. ஜகத் அசர போஷக**
**117. ஜகத் சர ஆதாரக**
**118. ஜகத் அசர ஆதாரக**

பகவந்தனின் ஸத்தத்வ லட்சணத்தின் விவரணைக்காக ஆகாஷாதி பஞ்சபூதங்களும் பகவந்தனிடமிருந்து உண்டாயிற்று. என்று தைத்திரிய உபநிஷத் கூறுகிறது. அவற்றுடன், அந்தந்த பூத பதார்த்தங்களின் அபிமானி தேவதைகளுக்கு அந்தந்த பூத பதார்த்தங்களில் அபிமானம் உண்டாகுமாறும், தேவதைகளின் சரீரம் உண்டாகுமாறும், பகவந்தன் செய்தான். அப்படியே இந்த மூவரின் நியாமகனாக தானும் இருந்து ரூபங்களால் ஆகாஷாதி பஞ்சபூதங்களுடன் வெளிப்படுகிறான். (அனுவியாக்யான 1-1-201).

**119. ஸ்வஜன ஹ்ருத் பூஷண**

தனக்கு அத்யந்த ப்ரியளான ஶ்ரீரமாதேவி மற்றும் தன் ஏகாந்த பக்தர்களான பிரம்ம, வாயு, சேஷ, கருட ஆகியோரின் இதயத்தில் பூஷணனாக இருப்பவனான ஶ்ரீஹரி.

**120. அபரிச்சின்ன**

1. பரமாத்மன் இறந்த, நிகழ் மற்றும் எதிர்காலம் என்னும் முக்காலங்களிலும் எல்லையற்றவன். ஆகையால் அவன் – அபரிச்சின்னன்.

2. ஶ்ரீஹரி அபரிச்சின்னன். அதாவது அளக்க முடியாதவன். (ஶ்ரீமத் பாகவத 2ம் ஸ்கந்தம் 3ம் அத்தியாயம்).

**121. அப்ரமேய**

பிரமாணாதிகளால் முழுமையாக அறியப்பட முடியாதவனான – ஶ்ரீஹரி.

**122. ஆதிஸ்ருதிவக்த**

ஆதிபூதரான பிரம்மதேவருக்கு வேத உபதேசம் செய்தவனான ஶ்ரீஹரி. (பாகவத ஆதிஸ்லோகம் – 'தேனே பிரம்மஹ்ருதாயா ஆதிப்ரவியே'.

**123. கோஷவர்ண**

ஆகோஷவர்ணங்களால் முக்கிய வாச்யனான – ஶ்ரீஹரி. கடல் ஓசை, கண்டாமணி ஓசை மற்றும் நதி ஓடும்போது வரும் சத்தத்திற்கு 'கோஷ' என்று பெயர். அந்த கோஷ என்னும் சொல் – த்வன்யாத்மக மற்றும் வர்ணாத்மக என்று இரு விதம். த்வனியே 'கோஷ' மூலமாக அழைக்கப்படுபவனான ஶ்ரீஹரி.

**124. ஸம்பூர்ணவாச்ய**

பகவந்தன் அனைத்து விஷயங்களில் பரிபூர்ணனாக இருப்பதால், சம்பூர்ண வாச்யன் என்று அழைக்கப்படுபவனான ஶ்ரீஹரி.

**125. அசேஷ தோஷவிதூர**

நமோ நமோऽசேஷதோஷதூர பூர்ணகுணாத்மனே |
விரஞ்சி ஷர்வபூர்வேத்ய வந்த்யாய ஶ்ரீவராயதே ||1
ஶ்ரீமதாசார்யர் இயற்றிய ஶ்ரீமத் அணுபாஷ்யம். கடைசி ஸ்லோகம்.

பிரம்ம ருத்ராதி தேவதைகளால் வணங்கப்படுபவனும், குணபூர்ணனும், எவ்வித தோஷங்கள் அற்றவனுமான ஸ்ரீலட்சுமிபதியே, உனக்கு அனந்த நமஸ்காரங்கள். அஸ்வாதந்த்ர்ய, அபூர்ணத்வ, எப்படியாவது ஒரு வகையில் பிறப்பு மற்றும் இறப்பு முதலான தோஷங்கள், லட்சுமிதேவியிடமிருந்து துவங்கி அனைவரிலும் இருக்கிறது.

ஸ்வதந்த்ர்னாக இருக்கும் மற்றும் பரிபூர்ணனாக இருப்பவன் பகவந்தன் ஒருவனே. ஞானரூபியான அவனில் அவித்யையோ, ப்ரக்ருதிக்கும் நியாமகனாக இருக்கும்

அவனில் காம க்ரோதாதி தோஷங்கள் வராது. ஸ்வரூப பூதமான ஞானானந்தாத்மக சரீரத்தைப் பெற்றிருக்கும் அவன், ஜராமரணாதிகளைவிட உயர்ந்தவன். (பாகவத 11-3-38). ஆகையாலேயே ஸ்ரீவிஷ்ணுவை விளக்க முற்பட்ட உபநிஷத், அவனின் சர்வதோஷ விரூபத்வத்தையே முதலில் சொல்லியிருக்கிறது.

வேதாதி நற்சாஸ்திரங்களில் எங்காவது ஒரு இடத்தில், பகவந்தனிடம் தோஷங்களை சொல்வதாக இருந்தாலும், அவன் குணபோதகனாக நினைக்க வேண்டும் என்று பிரமாணங்கள் சொல்கின்றன. (பிரம்மஸூத்ர பாஷ்ய 2-1-38). தோஷங்களின் நிலையே பகவத் அதீன என்ற பிறகு, அத்தகைய குணவந்தனில் எந்த தோஷமோ எப்படி வருவதற்கு சாத்தியம்? என்று ஸ்ரீமதாசார்யர் நிர்ணயம் செய்திருக்கிறார். (அனுவியாக்யானம் 2-1-111). இவ்வாறு தோஷம் அற்றவனான ஸ்ரீஹரி.

**126. களஜனபீஷண**

களஜன – துஷ்டஜனர்கள் – அசுரர்கள். ஹிரண்யாக்ஷ ஹிரண்யகசிபு, ராவண கும்பகர்ண, தந்தவக்ர பக, சக்ரவந்த, சாணூர, மாரீச முதலான துஷ்ட ஸ்வபாவத்தின் அசுரர்களுக்கு பயங்கரமானவன் என்று சொல்லப்பட்டு, அவர்கள் அனைவரையும் கொன்றவரான ஸ்ரீஹரி.

**127. அப்ராக்ருத**

ஸ்ரீகிருஷ்ண பரமாத்மன் உத்தவனுக்கு இவ்வாறு உபதேசித்தான். ‘பகவந்தன் உலகத்தை படைத்து, காத்து, அழிப்பதைப் போல தானே தன்னையும் படைத்துக் கொள்கிறான்’ என்று கூறுகிறான். பகவந்தனின் ஸ்ருஷ்ட்யாதிகள் உலகத்தின் ஸ்ருஷ்ட்யாதிகளைவிட வேறுபட்டவை. ஒரு தீபத்தினால் மற்றொரு தீபம் பிறப்பதைப் போல, ஒரு ரூபத்தினால் மற்றொரு ரூபத்தின் தோற்றமே பகவந்தனின் ஸ்ருஷ்டி. இந்த வகை செயல்களால் அவன் அப்ராக்ருதன் ஆகிறான். அவனே ஸ்ரீஹரி.

**128. அனுபம**

ஸ்ரீரமாபிரம்மாதிகளுக்கும் புரியாத அனந்த மகிமை உள்ள துஷ்ட சிக்ஷக / சிஷ்ய பரிபாலகனான ஸ்ரீஹரி 1. பிரபுத்வம் 2. சாமர்த்தியம் 3. புகழ் 4. ஸ்வரூப ஸௌந்தர்ய 5. ஞான மற்றும் 6. விக்ஞான இந்த ஆறு குணங்களையும் அனந்தமாகவும், நிரந்தரமாகவும் பெற்று, ‘பக’ என்று அழைத்துக் கொள்கிறான். (விஷ்ணு புராண 6-5-74). ஸ்ரீஹரிக்கு சமமானவர்கள் இல்லாதபோது, அவனைவிட அதிகமானவர்கள் இல்லவேயில்லை. இவனுக்கு ஒப்புமை காட்டுவதற்கு இல்லாததால், அனுபமனானவனான ஸ்ரீஹரி.

**129. பரமபுருஷ**

ஸ்ரீமத் பகவத்கீதையில் ஸ்ரீகிருஷ்ணன், தானே புருஷோத்தமன் என்றும், வேத இதிகாசங்களில் புகழ்பெற்றிருப்பவன் என்றும் சொல்லிக் கொண்டிருக்கிறான். புருஷ என்று அழைக்கப்படுபவர்கள் இருவர். அழியும் தேகம் உள்ள ஜீவர்கள் மற்றும் நித்யமும் அப்ராக்ருத தேகம் கொண்ட ஸ்ரீலட்சுமிதேவி. ஜீவர் – க்ஷர புருஷர்கள். லட்சுமிதேவி – அக்ஷர புருஷர். இந்த இருவரிலிருந்து பின்னனும், உத்தமனும், ஆன புருஷனே புருஷோத்தமன் என்று ஸ்ருதிகளிலும், புராணாதி பௌருஷேய கிரந்தங்களிலும் புகழப்பட்டிருக்கிறான். (கீதை 15-16,17,18).

பகவந்தனுக்கு புருஷ என்னும் மூன்று ஸ்வரூபங்கள் இருக்கின்றன. (பாகவத தாத்பர்ய நிர்ணய 11-4-3). 1. மஹத்தத்வாதிகளை ஸ்ருஷ்டித்த ரூபம்; 2. படைத்த

பிரம்மாண்டத்திற்குள் இருக்கும் ரூபம்; 3. பிரம்மாண்டத்தின் அனைத்து தேகிகளின் தேகத்தில் இருக்கும் ரூபம்

**இஹத்ப$^{4}$ய க்ஷயகர கு$^{3}$ணத்ரய**
**ரஹித வ்ருத்$^{3}$தி$^{4}$ஹ்ராஸ வர்ஜித**
**விஹக$^{3}$ விஷ்வ தைஜஸ ப்ராக்ஞ அவஸ்தா$^{2}$த்ரயதா$^{3}$தா |**
**அஹிதனாஷ பரேஷ க$^{3}$ஹனாத்**
**க$^{3}$ஹன அவ்யய அதிஷயாத்$^{3}$பு$^{4}$த**
**ப$^{3}$ஹுள ஜீவாந்தரீய அந்தர்ப$^{3}$ஹி: ஸ்வதந்த்ர நமோ || 9**

**130. மஹத்பயக்ஷயகர.**

மஹத் + பய + க்ஷயகர. மஹதாம் என்றால், பெரியவர்களான ருத்ராதிகளுக்கு வந்த சங்கடங்களை பரிகரித்தவனான ஸ்ரீஹரி.

1. த்ரிபுராசுரரின் சம்ஹார காலத்தில் ருத்ரதேவர் கொன்ற அசுரனை மய நிர்மாணம் செய்த அம்ருத குண்டத்தில் இறைத்தனர். அதனால் அவர்கள் திரும்ப உயிர் பிழைத்து வந்தனர். இப்படி ஆனதால், ருத்ர தேவருக்கு உண்டான வெற்றியின் பயத்தை போக்குவதற்கு ஸ்ரீஹரியை பிரார்த்திக்க அவர், தான் கோரூபமாகவும், பிரம்மனுக்கு கருவின் ரூபத்தையும் கொடுத்து, அந்த அம்ருத குண்டத்தில் இருக்கும் அனைத்து அமிர்தத்தையும் குடித்து, ருத்ரதேவரின் பயத்தை போக்கினார். மற்றும் ருத்ரதேவர் விட்ட பாணத்திலும் தான் நிலைத்திருந்து த்ரிபுரர்களை கொல்வதற்காக ருத்ரதேவருக்கு உதவிய ஸ்ரீஹரி.

2. சகுனியின் மகனான வ்ருக என்னும் அசுரன், நாரதரால் சிவன் வேகமாக வரத்தினை கொடுக்கிறான் என்று அறிந்து, கேதாருக்கு சென்று தேகத்தின் மாமிசத்தையே ஆறு நாட்கள் அக்னியில் ஹோமம் செய்தான். சிவன் வரவில்லை.

அந்த தைத்யன் தன் கழுத்தை கத்தரிக்க தயாரானபோது, சிவன் பிரத்யட்சம் ஆகி, வரத்தைக் கேள் என்றார். வ்ருகாசுரன், 'யார் தலை மேல் நான் கை வைக்கிறேனோ, அவன் அந்த நொடியே இறக்கவேண்டும்' என்று வரம் கேட்டான். அப்படியே ஆகட்டும் என்றார் சிவன். அந்த வரத்தை சோதிப்பதற்காக, அசுரன் சிவனின் தலை மேல் தன்கை வைக்க வந்தான். ருத்ரர் பயந்து, அனைத்து

உலகங்களுக்கும் ஓடி கடைசியில் வைகுண்டத்திற்கு வந்தார். இதனைக் கண்ட நாராயணர், வடு ரூபத்தில் வந்து, 'வ்ருகாசுரனே, சற்று ஓய்வு எடு. ஏன் இங்கு வந்தாய்?' என்று கேட்டான். நடந்த விஷயம் அனைத்தையும் வ்ருகாசுரன் கூறினான். வடுரூபி ஸ்ரீஹரி, 'சிவனின் பேச்சினை நான் சிறிதளவும் நம்பமாட்டேன். அவன் பொய் சொல்கிறான். அவன் பேச்சை நம்ப வேண்டுமெனில், உன் தலைமேல் கை வைத்து பார்க்கவும். அவனின் பேச்சு உண்மையோ, பொய்யோ என்று தெரிந்துவிடும்' என்றான்.

பகவந்தனின் பேச்சில் மயங்கிய அந்த வ்ருகாசுரன், தன் தலை மேல் கை வைத்தான். உடனே அவனுடைய வரத்தைப் போலவே, இறந்து விழுந்தான். சிவன் ஸ்ரீஹரிக்கு வணங்கி, கைலாயத்திற்கு விரைந்தான். இவ்வாறு, மஹத்பயங்களை பரிகரிப்பவன் ஆன, ஸ்ரீஹரி. (பாகவத 10-92).

**131. குணத்ரய ரஹித**

சத்வ, ரஜ, மற்றும் தமோ குணங்களுக்கு தலைவனான, ப்ரக்ருதி நியாமகனான பகவந்தனிடம் ப்ராக்ருதிக சத்வ, ரஜ, தமோ குணங்களால் லோப, க்ரோதாதி விகாரங்களுக்கு சந்தர்ப்பம் கொடுத்தவனான ஸ்ரீஹரி. (ஸ்ரீமத் பாகவதம் 10-25-5). நாமம் 125 விசேஷதோஷவிதூர பார்க்கவும்.

**வ்ருத்திஹ்ராஸ வர்ஜித**

**132 வ்ருத்தி வர்ஜித & 133 ஹ்ராஸ வர்ஜித**

க்ஷராக்ஷர புருஷர்களைவிட உத்தமனான பகவானுக்கு ஜனனம் மற்றும் மரணங்கள் இருப்பதில்லை. 'கர்மங்களின் தலைவனான பகவானின் மேல், கர்மங்கள் எவ்வகையான பிரபாவத்தையும் காட்டுவதில்லை. புண்ய கர்மத்தினால் வ்ருத்தியோ, பாவ கர்மத்தினால் குறைபாடுகளோ, அவன் பெறுவதில்லை. இவ்வாறு எப்போதும் ஒரே மாதிரியான விதமாக இருப்பவனான ஸ்ரீஹரி (ப்ருஹதாரண்யக உபநிஷத் 6-4-22).

**134. விஹக** நாம 9-கருடகமன பார்க்கவும்.

**விஷ்வ தைஜஸ ப்ராக்ஞ அவஸ்தாத்ரயதாதா**

**135. விஷ்வ (அவஸ்தாத்ரயதாதா) ; 136. தைஜஸ (அவஸ்தாத்ரயதாதா) ; 137. ப்ராக்ஞ (அவஸ்தாத்ரயதாதா)**

பூர்ணானந்த ஞானஷக்தி ஸ்வரூபம் நித்யமவ்யயம் |
சதுர்த்தா ஸர்வபோக்தான் வந்தே விஷ்ணும் பரம் பதம் ||
(மாண்டூக உபநிஷத் பாஷ்யம் – மங்கள ஸ்லோகம்)

ஓம்கார ஷப்த வாச்யனும், அக்ஷர நாமகனும், ரமாபிரம்மாதி நியாமகனுமான ஸ்ரீஹரி, தன் ஸ்வரூபபூதங்களான நான்கு அம்சங்கள் உள்ளவன். அனைத்து ஜீவர்களுக்கு நியாமகனாகி அந்தந்த ஜீவர்களில் வைஷ்வானரகாக வலது கண்ணில் நின்று, புற பதார்த்தங்களின் ஞானத்தை உருவாக்குவான். ஜீவர்களின் வலது கண்ணில் நின்று, கொடுத்து – பெற்றுக் கொள்ளும் செயல்களை செய்கிறான். இவனே விஷ்வ நாமகனாக ஜீவர்களின் ஜாக்ரத நிலையை வழிநடத்துபவன்.

தைஜஸ – என்னும் பகவத்ரூபம் புற பதார்த்த ஞானத்தினால் உண்டாகும் மற்றும் அந்த வாசனையினால் மாற்றம் உண்டாகும், அந்த பதார்த்தங்களின் அனுபவத்தை கொடுத்து, ஸ்வப்ன நிலைக்கு காரணனாக, கழுத்து பிரதேசத்தில் இருக்கிறான். விஷ்வ நாமகன் புற ப்ரக்ஞன் ஆனால், தைஜஸன், அந்த: ப்ரக்ஞன்.

ப்ராக்ஞ – நாமக பகவத்ரூபம் சுஷுப்த (தூக்கம்) நிலைக்கு காரணனாக இருக்கிறான். இந்த நிலையில் ஜீவர்கள் சுகரூபியான பரமாத்மனை அடைந்து, வேறு எதையும் விரும்புவதில்லை. வேண்டுவதில்லை. இந்த காலத்தில் விஷ்வ, தைஜஸ, பகவத் ரூபங்கள் ப்ராக்ஞனில் சேர்ந்திருக்கிறார்கள். ப்ராக்ஞனுக்கு ப்ரக்ஞானக என்று பெயர். இவன் பூர்ணானந்த ஸ்வரூபியாக இருக்கிறான்.

மேலே நிரூபித்த பகவத் ரூபங்களைக் கொண்ட ஸ்ரீஹரி, அனைத்து உலகத்தையும் நிர்வகிக்கிறவனாக இருக்கிறான். சர்வஸ்வாமி. சர்வக்ஞ சிகாமணியாக அனைத்தையும் அறிந்தவனாக இருக்கிறான். அனைத்து ஜீவராசிகளின் பிறப்பு, இறப்புகளுக்கு காரணன். இவை அல்லாமல் ‘துரிய’ என்னும் பகவத் ரூபமும்

உண்டு. அவன் அந்த:ப்ரக்ஞுனும் அல்ல. புற ப்ராக்ஞுனும் அல்ல. ப்ரக்ஞானகனும் அல்ல. ஆனால், அவன் முக்தர்களுக்கு ஸ்வயோக்யமான ஞானத்தை கொடுக்கிறான். நான் என்னுடையது என்னும் கர்வத்தை அழிக்கிறான் (அஹம் மமதாதி மித்யாத்யவஸாயி நிவர்த்தகம்) இத்தகைய மகிமோபேதனே துரியன்.

ஏகோபி நிர்திஷேஷ்டோபி சதுர்த்தாவ்யவஹாரபாக் |
யஸ்தம் வந்தே சிதாத்மானம் விஷ்ணும் விஷ்வாதிரூபிணம் ||
-- மாண்டுக்ய உபநிஷத் பாஷ்யம் – கடைசி மங்கள ஸ்லோகம்.

ஸ்ரீஹரி, தன் அவதார, மூலரூபங்களில், குண க்ரியைகளுக்கு பேதம் இல்லாமல், ஸ்வகத பேத விவர்ஜிதனாக இருந்து, ப்ராக்ருத விஷய ரஹிதனாக இருந்தாலும், விஷ்வ, தைஜஸ, ப்ராக்ஞ துரிய என்னும் நான்கு ரூபங்களால் உலகைப் படைப்பதான செயல்களை செய்கிறான். இத்தகைய மகிமோபேத விஷ்வாதி ரூபங்களைக் கொண்ட ஞானானந்தாதி சத்குணபரிதனும் சர்வத்ர வியாப்தனுமான ஸ்ரீஹரி.

**138 அஹிதனாஷ**

தன் ஞானத்தைப் பற்றி அறிய முற்படும் சுஜீவிகளுக்கு அவரவர்களின் பிராரப்த கர்மங்களால் வரக்கூடிய கஷ்டங்களை போக்கக்கூடியவனான ஸ்ரீஹரி.

**139. பரேஷ**

பரா: என்றால் ரமாபிரம்மாதிகளுக்கும் ஈஷ அதாவது தலைவனான ஸ்ரீஹரி.

**140. கஹனாத் கஹன**

ஆத்மாச்சாதிகா மற்றும் பரமாச்சாதிகைகளால் தன் குண, ரூப, க்ரியைகளையும் அறியப்பட முடியாதவன் ஆகையாலும், தன் ஞானத்தை அறிவதற்கு மிகவும் கஷ்டமானவன் ஆகையால், கஹனாத் கஹன என்று அழைக்கப்படுபவனான ஸ்ரீஹரி.

**141 அவ்யய**

சேதனர்களில் பிறப்பு, இறப்பு முதலிய மாற்றங்களை செய்வது, பாவ புண்ணியங்களைக் கொடுக்கும் செயல்கள். கர்மங்களின் தலைவனான பகவானுக்கு இந்த கர்மங்கள் எவ்விதமான மாற்றங்களையும் கொடுப்பதில்லை. புண்ணியத்தினால் அவன் வளர்வது இல்லை; (ப்ருஹதாரண்யக உபநிஷத் 6-4-22). பாவத்தினால் அவன் குறைவதும் இல்லை. ஆகையால் அவன் சகஜமாக நிர்விகாரன் என்று அழைக்கப்படுகிறான். இந்த அபிப்பிராயத்தினாலேயே பிருஹதாரண்யக உபநிஷத், கர்மத்தினால் அவன் வளர்ச்சி, குறைவு அடைவதில்லை என்று ரிக் மந்திரத்தின் ஆதாரத்துடன் நிறுவுகிறது. (கீதா பாஷ்யம் 11-32).

மற்ற சேதனர்கள் தத்தம் கர்மங்களுக்கு ஏற்ப, பாஞ்சபௌதிக சரீரத்தைப் பெற்று, அதன் மூலம் பிறப்பு, வளர்ச்சி, குறைவு, மரணம், பசி, தாகம், மயக்கம், சோகம், மோகம் ஆகிய மாற்றங்களைப் பெறுகின்றன. ஆனால், பகவானோ எப்பொழுதும் ஸ்வரூபாத்மக தேகத்தையே பெற்றிருப்பதால், தேக சம்பந்தப்பட்ட எந்த ஒரு மாற்றத்தையும் அவன் பெறுவதில்லை.

ஜீவாத்மாக்கள், தேகத்தில் இருந்துகொண்டு, ஜென்மாதி மாற்றங்களுக்கு உண்டாகும்போது, பகவான் அந்த சரீரத்திலேயே இருக்கிறான் என்றாலும் அவன் அந்த சரீரத்தின் மாற்றங்களால், ஜென்மாதி மாற்றங்களை பெறுவதில்லை. ப்ரக்ருதி நியாமகனான அவனில், ப்ராக்ருதிக சத்வ, ரஜஸ், தமோ குணங்கள் மற்றும் லோப, க்ரோத ஆகிய மாற்றங்களுக்கு இடம் இல்லை.

அவனுடைய ஒவ்வொரு குணமும், ஒவ்வொரு செயலும், அவனுடைய ஸ்வரூபமாகவே, நித்யமாக இருக்கிறது. ஆகையால் அவற்றின் தோற்றம், அழிவு, ஆகியவையும் அவனில் மாற்றத்தைக் கொடுப்பதில்லை. பகவான் ஒருவனே எந்த ஒரு விஷயத்திற்கும் ஈடுபடாதவன் ஆகிறான். மூன்று உலகங்களிலும் நுழைந்து அதனுடைய தாரணம், பாதுகாத்தல் ஆகியவற்றை செய்யும் பகவானுக்கு, அதன்மூலம் எந்த ஒரு மாற்றங்களும் உருவாவதில்லை என்று அவ்யய என்னும் குறிப்பினை கீதாசார்யன் கொடுக்கிறான்.

பகவான் ஸ்வரூபத்மகமான தேகத்தைக் கொண்டிருப்பதால், ஸ்வரூபத: நித்தியமாக இருக்கிறான். மரண நாமக பகவான், தன்னுடைய ஆணைக்கேற்ப, எப்பொழுதும் சஞ்சரிப்பதற்காக சூரியனுக்கு ஆகாயத்தில் சிறந்ததான வழியை செய்து கொடுத்தான் என்று ரிக் வேதம் சொல்கிறது.

**142 அதிஷயாத்புத**

ஶ்ரீஹரியின் குண, ரூப, செயல்கள் தியான விஷயங்கள் ஆகும். வெறும் ரூப சிந்தனையினால் தியானம் வருவதில்லை. சிரவண, மனன, தியான என்னும் சாதனைகளில் தியானம், குண கிரியைகளின் சகிதமாக, பகவத் சிந்தனையை கொண்டதாகும். குணங்கள் சத் சித் ஆனந்தம் ஆகியவை, சிருஷ்டி, ஸ்திதி, லயம் முதலான உலக சம்பந்தமுள்ள அஷ்டவித பகவத் வியாபாரங்கள் மற்றும் பற்பல அவதாரங்களில் வெளிப்படும் அற்புத மகிமைகளை கொண்ட செயல்களால் அதிசய அற்புத மகிமைகளை கொண்டவரான ஶ்ரீஹரி.

**143 பஹுளஜீவாந்தரீய**

அனைத்தையும் படைத்த பகவான், சிருஷ்டியின் அடுத்த நொடியிலேயே அனைத்து பதார்த்தங்களிலும், பிரேரகனாக அவற்றில் நுழைந்தான் என்று தைத்திரீய உபநிஷத் சொல்கிறது. பகவான் தானியங்களையும், மனிதர்களையும், பசுக்களையும் மற்ற சராசர பொருட்களையும் நுழைந்தான் என்று மஹா நாராயண உபநிஷத் சொல்கிறது. இவ்வாறு அனைத்திலும் நுழைந்து அனைத்து ஜீவஅந்தர்யாமியான ஶ்ரீஹரி.

**அந்தர்பஹி:ஸ்வதந்த்ர**

**144 அந்தர் ஸ்வதந்த்ர & 145 பஹி: ஸ்வதந்த்ர**

பகவான் க்ஷேத்ரக்ஞ என்னும் பெயரால் ஜீவாத்மரின் ஸ்வரூபத்திலேயே இருக்கிறான். அதுமட்டுமல்லாமல் புருஷ நாமகனாக இவர்களுடன் சரீரத்திலும் இருக்கிறான்.

அனைத்து பிராணிகளின் உள்ளேயும் இருந்து, ஞானத்தை கொடுக்கும் பகவத் ரூபம் புருஷ எனப்படுகிறது அந்த வியாதிகளுக்கு பலன்களைக் கொடுக்கும் வெளியே இருக்கும்

பகவத்ரூபம் ஈஸ்வர எனப்படுகிறது. ஸ்வாதந்த்ர்யம் பகவானின் அசாதாரண குணமாக இருக்கிறது – தத்வ சங்க்யான.

அந்தர்பஹிஸ்ச தத்ஸர்வம் வ்யாப்த நாராயண ஸ்தித꞉ । புருஷ சூக்தம். இவ்வாறு அந்தர்பஹி꞉ ஸ்வதந்த்ரனான ஸ்ரீஹரி.

**பூர்ணகாமாம்போ[3]தி[4] ஸ்ரீவட**
**பர்ணதல்ப பராத்பரா ப்ரதி**
**வர்ண நிக[3]மாக[3]ம அதர்க்யானந்த ஸத்கு[3]ணநிதே[4] ।**
**நிர்ணயாதீ[1]தா[1]னிருத்[3]த[4] ஸு**
**கா[2]ர்ணவாச்யுத ஸௌக்[2]யாகர நவ**
**தீர்ணவிக்[3]ரஹ பத்மனாப[4] உதா[3]ரலீல நமோ ।।10**

**146. பூர்ணகாமாம்போதி**

பூர்ண + காம + அம்போதி = அனைத்து + இச்சை + கடல். தன் அனைத்து விருப்பங்களையும் நிறைவேற்றுக் கொள்வதில் கடலைப் போல விஷாலமானவனான ஸ்ரீஹரி.

**147 ஸ்ரீவடபர்ணதல்ப**

பிரளய காலத்தில் ஸ்ரீஹரி ஆல இலையில் படுத்திருந்தான் என்று சொல்லும் ஸ்ருதி புகழ்பெற்றதாகும். அந்த ஆல இலை என்றால் ஸ்ரீதுர்கா ரூபி லட்சுமிதேவியே ஸ்ரீஹரிக்கு படுக்கையாக ஒரு ரூபத்தை தாங்கினாள். இவ்வாறு நித்ய முக்தளும், அப்ராக்ருத ஸ்வரூபளும், நற்குண பரிபூர்ணளுமான சர்வக்ஞளும் ஆன, ஸ்ரீதேவியின் ஒரு ரூபமான ஆலிலையின் மேல் பிரளய காலத்தில் படுத்திருந்தவன் ஆன ஸ்ரீஹரி.

**148 பராத்பரா**

பாண்டவர்கள் வனவாசத்தில் இருந்த பொழுது, தர்மராஜனுக்கும், பீமனுக்கும் வாதம் வந்த சமயத்தில், ஜீவ ஸ்ரூப பாவம் என்பதே யோக்கியதை. அது ஹட என்றும் அழைக்கப்படுகிறது. இந்த யோக்கியதை அல்லது ஹடம் அனைத்து ஜீவர்களின் அனாதி ஸித்தியாக இருக்கிறது. அது நித்தியமும் ஆகியிருக்கிறது. ஜீவர்களின் பற்பல கர்ம செயல்களுக்கு இது முதலாம் காரணம். அனாதி கர்மம் இரண்டாம் காரணம். பௌருஷ என்று அழைக்கப்படும் ஜீவ முயற்சி மூன்றாம் காரணம். இந்த மூன்றும்

எப்பொழுதும் ஸ்ரீவிஷ்ணுவின் வசத்தில் இருக்கின்றன. விஷ்ணு மட்டுமே யாருடைய வசத்திலும் இல்லை. அவன் பராத்பரனும், சர்வோத்தமனும், ஸ்வதந்த்ரமும் ஆகி இருக்கிறான். இத்தகைய பராத்பரனான ஸ்ரீஹரி.

**ப்ரதிவர்ண நிகமாகம அதர்க்ய**

**149 ப்ரதிவர்ண நிகம; 150 ஆகம ; 151 அதர்க்ய**

அனைத்து வர்ணங்களும் மற்றும் நிகம மற்றும் ஆகமங்களால் ஊகிக்க முடியாதவனான ஸ்ரீஹரி

**152. அனந்த சத்குணநிதி**

அனந்த என்றால் எண்ண முடியாத அளவிற்கு சத்குண – நல்ல குணங்களை கொண்டவனான ஸ்ரீஹரி.

**153. நிர்ணயாதீத**

தன் ரூப, க்ரியை மற்றும் குணங்களைப் பற்றி யாரிடமிருந்தும், எந்த காலத்திலும் எந்த வகையிலும் நிர்ணயம் செய்யமுடியாதவனான ஸ்ரீஹரி.

**154. அனிருத்த**

1. ஜகத் ஸ்ருஷ்டியே முதலான தன் நடவடிக்கைகளை நிர்வகிப்பதில் யாராலும் தடை செய்யப்பட முடியாதவன்.

2. எந்தவொரு தோஷத்தினாலும் கட்டுப்படுத்த முடியாதவன்.

3. தினமும் அனைத்து குணங்களால் பரிபூர்ணனாக இருக்கும் பகவந்தன் அசேஷ தோஷங்களாலும் தூரமாக இருப்பவன். (த்வாதச ஸ்தோத்திரம்).

4. பகவந்தனின் அனிருத்த நாமக ரூபம் ஜீவ என்று சொல்லப்பட்டு, ஜீவாத்மரின் பிராண தாரணையை நடத்துகிறது. (சாந்தோக்ய உபநிஷத் 6-2-2)

5. ஜீவாத்மரின் பாலனையை பகவந்தன் தன் அனிருத்த ரூபத்தினாலேயே நடத்துகிறான். (மகாபாரத தாத்பர்ய நிர்ணய 1-8).

6. ஸ்ரீவிஷ்ணு மூன்று வேதங்களையும், மூன்று காலங்களையும், சத்வ முதலான மூன்று குணங்களையும், மூன்று உலகங்களையும், மூன்று வித ஜீவர்களும் மற்றும் சேதன அசேதன மற்றும் சேதனாசேதனர்களின் பாதுகாவலனாக, படைத்தவனாக,

அழிப்பவனாக, மோட்சத்தைக் கொடுப்பவனாக இருக்கிறான் என்று சொல்ல வந்ததே விஷ்ணு ஸூக்தம். ஸ்ரீவிஷ்ணு யாராலும் தடுக்கப்பட முடியாதவன் என்று துவக்கத்திலேயே சொல்லி இருக்கிறது.

**155. ஸுகார்ணவாச்யுதி**

ஸுக + அர்ணவ = காடு + அச்யுத. தன் பக்தர்களின் சுகம் என்னும் காடு வளர்வதற்கு ச்யுதியைப் போல இருப்பவன். அதாவது தன் பக்தர்களின் சுகத்திற்கு எந்த தொந்தரவும் வராதவாறு பார்த்துக் கொள்பவனான ஸ்ரீஹரி.

**156. ஸௌக்யகர**

தன்னை நம்பியவர்களுக்கு எப்போதும் சுகத்தைக் கொடுப்பவனான ஸ்ரீஹரி.

**157. நவதீர்ண விக்ரஹ**

ஒவ்வொரு நொடியும் புத்தம்புதியதான ப்ரக்ருதியை மீறிய அப்ராக்ருத தேகம் கொண்ட - ஸ்ரீஹரி.

**158. பத்மனாப**

1. பகவந்தனின் நாபியில் உள்ள கமலத்தில் அனைத்து புவனங்களும் இருக்கின்றன. என்று ரிக்வேத சொல்கிறது (ரிக்வேத 10-82-6). ஸ்காந்தம் இந்த ஸ்ருதியின் அபிப்பிராயத்தையே தெளிவாக்குகிறது (ஸ்கந்த பிரம்மஸூத்ர பாஷ்ய 1-1-1).

2. சதுர்முகனுக்கு ஆதரவு அளித்துக் கொண்டிருக்கும்படியான வயிறு உள்ளவன். (பாகவத தாத்பர்ய நிர்ணய 3-1-26).

3. தன் பாதங்களில் லட்சுமிதேவியை கொண்டிருப்பவன். மற்றும் வ்ருஷப அவதாரத்தில் நாபி ராஜனின் மகனாக அவதரித்தவனான ஸ்ரீஹரி.

**159. உதாரலீல**

ஜீவாத்மர் திரும்பத்திரும்ப செய்யும் தவறுகளை மன்னித்து, தன்னைப் பற்றிய ஞானத்தைக் கொடுத்து அவரவர்களின் யோக்யதைக்கேற்ப உத்தம கதியை கொடுப்பவனான உதார சரித்திரத்தைக் கொண்ட - ஸ்ரீஹரி.

மோக்ஷவல்லப பவ மலக்ன மு
முக்ஷுவரத முனீந்திர ஸுமனோ ||

**மோக்ஷவல்லப4 ப4வ மலக்4ன மு**
**முக்ஷுவரத3 முனீந்த்3ர ஸுமனோ**
**த்4யக்ஷ தா3மோத3ர த்3யாபர ஜிததி3தஜ ஸமர |**
**பி4க்ஷுகான்வயப்ரிய ஸமாதி4கா**
**பக்ஷ ஸ்ருஷ்ட்யாத்3யஷ்ட காரண**
**த3க்ஷாத்4வர பரபி3ரம்ம நிவஹாத்3 பி4ன்னரூப நமோ || 11**

**160. மோட்சவல்லப**

சத்வ குணம் கொண்ட சுஜீவி முமுக்ஷுகளுக்கு அவரவர்களின் யோக்யதைக்கேற்ப 1. சுயோக்ய 2. ஸாரூப்ய 3. ஸாமீப்ய 4. ஸாயுஜ்ய மோட்சத்தை அளிப்பவனான ஸ்ரீஹரி.

**161. பவமலக்ன**

பவ என்றால் சம்சாரத்தில் இருக்கும் ஜீவிகளுக்கு; மல என்றால் கர்மங்கள் மூன்று விதம் – சஞ்சித, ப்ராரப்த மற்றும் ஆகாமி. இதுவரை செய்யப்பட்ட (முந்தைய பிறவிகளிலும்கூட) கர்மங்கள் – சஞ்சித. இவற்றின் மொத்த எண்ணிக்கையே அனைவரின் முதுகிலும் இருக்கிறது. அதில் எந்த கர்மத்தின் பலன்களை தற்போது அனுபவிக்கத் துவங்கியிருக்கிறோமோ அது – பிராரப்த. அடுத்து நடக்கவிருக்கும் கர்மங்கள் – ஆகாமி.

ஞானாக்னி: ஸர்வகர்மாணி பஸ்மஸாத்குருதேதாரா || (கீதை 5-7). ஞானம் என்னும் அக்னியினால் செய்யப்படும் கர்மங்கள் சுட்டுப் பொசுங்கிவிடுகின்றன என்று சொல்லப்பட்டிருக்கிறது. இவ்வாறு தன் ஞானத்தை அருளி ஜீவாத்மரின் பவத்தில் உள்ள கர்மங்களால் ஆன பாவ என்னும் மலத்தை நாசம் செய்பவனான ஸ்ரீஹரி.

**162 முமுக்ஷுவரத**

அனன்யசேதா: ஸததம் யோ மாம் ஸ்மரதி நித்யஷ: |
தஸ்யாஹம் ஸுலப: பார்த்த நித்யமுக்தஸ்ய யோகின: ||
(கீதை 8-14)

எப்போதும் ஒருமனதுடன் யார் என்னை நினைக்கிறாரோ, அத்தகைய சாதகனுக்கு (மரண காலத்தில் நான் சுலபமாக நினைவுக்கு வந்து), அனாயாசமாக தரிசனம் அளிப்பேன் – என்று ஸ்ரீகிருஷ்ணன் அர்ஜுனனுக்கு கூறியதைப் போல, முமுக்ஷுகளுக்கு வரங்களைக் கொடுப்பவனான ஸ்ரீஹரி.

**163. முனீந்திர ஸுமனோத்யக்ஷ**

முனீந்திர – முனிஸ்ரேஷ்ட + ஸு+மன+அத்யக்ஷ. முனிஸ்ரேஷ்டரின் மனதில் முதன்மை ஸ்தானத்தில் இருப்பவன். அவர்களால் ஆராதிக்கப்படுபவனான ஸ்ரீஹரி.

**164. தாமோதர**

ஒரு முறை யசோதை தயிர் கடைந்து கொண்டிருந்தபோது, ஸ்ரீகிருஷ்ணன் தனக்கு முலைப்பால் வேண்டும் என்று சொல்லி, மத்தினைப் பிடித்து நிறுத்திவிட்டான். அவன் யசோதையின் துடையின் மேல் படுத்து, குடித்துக் கொண்டிருந்தான். யசோதை வீட்டினுள் போக வேண்டும் என்று, ஸ்ரீகிருஷ்ணனை கீழே இறக்கினாள். தனக்கு முலைப்பால் கொடுப்பதைவிட, உள்ளே அடுப்பில் உள்ள பாலை இறக்கி வைப்பதே முக்கியம் என்று நினைத்த யசோதைக்கு தக்க பாடம் கற்பிக்க வேண்டி, ஸ்ரீகிருஷ்ணன், எதிரில் இருந்த தயிர் பாத்திரத்தை உடைத்து, அதில் இருந்த வெண்ணையை எடுத்துக் கொண்டு, வெளியில் சென்று அமர்ந்துவிட்டான். அதனை பூனைகளுக்கும் கொடுத்து, தானும் உண்டு வந்தான். யசோதைக்கு பயங்கர கோபம் வந்தது. ஸ்ரீகிருஷ்ணனை கயிற்றில் கட்டினாள். கயிற்றால் வயிற்றைக் கட்டிக்கொண்டவனான ஸ்ரீகிருஷ்ணாவதாரியான ஸ்ரீஹரி.

**165. தயாபர**

பத்ரம் புஷ்பம் பலம் தோயம் யோ மே பக்த்யா ப்ரயச்சதி |
ததஹம் பக்த்யாபஹ்ருத மஷ்னாமி ப்ரயதாத்மன: ||
(**கீதை** 9-26)

இலை, பூ, பழம், தண்ணீர் போன்ற அல்ப பொருட்களேயானாலும், பக்தியுடன் அதனை அர்ப்பித்தால், அவற்றை ஏற்றுக் கொள்கிறேன் என்று ஸ்ரீகிருஷ்ணனே கூறியிருக்கிறான். பக்தர்கள் அர்ப்பித்தது

அல்பமேயானாலும், அதனை பற்பல மடங்கு ஆக்கி, பலன்களைக் கொடுக்கிறான். பக்தியே காரணம் ஆகிறதே தவிர, பூஜைப் பொருட்களின் அல்பத்வம் காரணம் ஆவதில்லை. இதற்கு குசேலன் என்னும் பரம ஏழை பிராமணன் கொண்டு வந்து கொடுத்த ஒரு கைப்பிடி அவலில் மகிழ்ந்து, அவனுக்கு மிகப்பெரிய செல்வத்தைக் கொடுத்து அருளியவனான ஸ்ரீகிருஷ்ணாவதாரியான ஸ்ரீஹரி.

**166. ஜித திதிஜஸமர**

திதி+ஜ+ஸமர+ஜித. திதியிடம் பிறந்த அசுரர்கள் நடத்திய போர்களை தேவர்களின் சார்பாக வென்றவனான ஸ்ரீஹரி.

**167. பிக்ஷுகான்வயப்ரிய**

பிக்ஷுக என்றால் பரமஹம்ஸ ரூபிகளான ஸனகாதிகளின் வம்சத்தில். அதாவது, சிஷ்ய பரம்பரையில் வந்த பக்தர்களுக்கு ப்ரியனான ஸ்ரீஹரி.

காலாஸ்ச தேஷகுணதோஸ்ய ந பாதிரந்தோ
வ்ருத்திக்ஷயே நது பரஸ்ய ஸதாதனஸ்ய ।
னைதாத்ருஷ: ஷ்வ ச பபூவ ந சைவ பாவ்யோ
நாஸ்துத்தர: கிமு பராத் பரமஸ்ய விஷ்ணோ: ||12
(மகாபாரத தாத்பர்ய நிர்ணய 1-12)

**168. ஸமாதிகாபக்ஷ**

எப்போதும் ஒரே மாதிரியாக இருப்பவனான சர்வோத்தமனான பகவானுக்கு காலத்தினாலோ, தேஷ மற்றும் குணங்களிலோ, துவக்கமோ, இறுதியோ இல்லை. வளர்ச்சியோ குறைபாடோ இல்லை. பிரம்மாதி உத்தமரான மகாலட்சுமியைவிட உத்தமனான ஸ்ரீவிஷ்ணுவிற்கு சமமானவர்கள் இதுவரை யாரும் இல்லை. அடுத்து யாரும் வரப்போவதும் இல்லை. தற்போதும் யாரும் இல்லை. இவ்வாறு சமமே இல்லாதவனுக்கு, உத்தமர்களும் இல்லை என்று தனியாக சொல்லவும் வேண்டுமா?.

பலீனவித்யமானா஽பி ந ஸமஸ்தத்வதம் வினா ।
இதி தத்வநிர்ணய வாக்ய ஆசார்யேண உத்தரதா ।

மகாபாரத தாத்பர்ய நிர்ணயத்திற்கு இந்த மேற்சொன்ன ஸ்லோகத்திற்கு ஸ்ரீஜனார்த்தன பட்டர் அவரின் பதார்த்ததீபிகா என்னும் டீகை உள்ளது.

லட்சுமிகாந்த: ஸமந்ததோ விகலயன் நைவேஷிதுஸ்தே சமம்
பஷ்யாம்யுத்தம வஸ்து தூரதரதோऽபாஸ்தம் ரஸோயோऽஷ்டம: ||
(ஸ்ரீமத்வாசார்யரின் நக ஸ்துதி)

ஹே லட்சுமிதேவிக்கு தலைவனான நரசிம்மனே. வேதங்களே முதலான அனைத்து சாஸ்திரங்களில் பார்த்தபோது, ஸ்வாமியானவனுக்கு சரியான இன்னொருவனை நான் எங்கும் பார்க்கவில்லை. உனக்கு சமமே இல்லை என்றபிறகு, உத்தமமான வஸ்து இல்லவே இல்லை. ஆகையால், நீயே எட்டாம் ரஸ என்னும் ஷப்த வாச்யனாக இருக்கிறாய்.

ஷுப நிகேதன ஸௌக்யத பவ
ந்னிபரனன்யரகாணெனதிக |
த்ரிபுவனதி நால்கெரடனே ரஸதந்தெ ஸன்மஹிதா |
விபுவிபூதித பூஜலேந்த்ர
ப்ரப்ருதி ரஸ ஸப்தோத்தமனெ யன
கபயகொடு ப்ரல்தாதனுதப்ராணேஷ விட்டலனே ||
(பிராணேஷ விட்டல தாசர் - வாயுஸ்துதிக்கு கன்னட பத்யம்).

**169. ஸ்ருஷ்ட்யாத்யஷ்ட காரண**

1. ஸ்ருஷ்டி 2. ஸ்திதி 3. நியமன 4. லய 5. ஞான 6. அஞ்ஞான 7. பந்த 8. மோட்ச ஆகிய அஷ்ட காரியங்களை தன் விருப்பத்தினாலேயே நடத்துபவனான ஸ்ருஷ்ட்யாத்யஷ்ட காரணனான ஸ்ரீஹரி.

**170. தக்ஷாத்வர பரபிரம்ம நிவஹாத்பின்ன ரூப**

தக்ஷாத்வர பரபிரம்ம செய்த யக்ஞத்தை நாசம் ஆக்கியவர் - ருத்ரர். நிவஹ - ஜீவ சமூகம். ருத்ர கண மற்றும் கண ஜீவ சமூகத்தைவிட பின்னரான - ஸ்ரீஹரி.

**கண்ட2கௌஸ்துப4 பூ4ஷணாம்ஷாऽ**
**குண்டி2தாத்ம்யைஷ்வர்ய அஷுப4வி**
**லுண்டி2காதோ4க்ஷஜ உபேந்தி3ர ஸ்ரீ ஸ்ரீஷ அனிருத்3த4 |**
**குண்டி2த ஜனனமரண ஷிரிவை**
**குண்ட2 பத்3மாம்லான துலஸி**
**கண்ட2 மாலான் விதஸுக3ந்த4 ஞானகோஷ நமோ || 12**

**171. கண்ட கௌஸ்துப பூஷண**
தன் கழுத்தில் பூஷணார்த்தமாக – 'கௌஸ்துப' மாலையை தரித்திருப்பவனான ஸ்ரீஹரி.

**அம்ஷாऽகுண்டிதாத்ம்யைஸ்வர்ய**
**அம்ஷ+அகுண்டிதாத்ம்யைஸ்வர்ய**
**172. அம்ஷ ; 173. அகுண்டிதாத்ம்யைஸ்வர்ய**

மத்ஸ்ய, கூர்ம, வராஹாதி அனேக அம்ஷ ரூபங்களிலும், அகுண்டிதமான அதாவது, எவ்விதமான ச்யுதி இல்லாதவனான அஷ்ட கர்த்ருத்வ உள்ளவனான – ஸ்ரீஹரி. உதாரணம். ஸ்ரீகிருஷ்ணன், கிருஷ்ண கேசத்தினாலேயே அவதரித்தாலும், பூர்ண சாமர்த்தியம் உள்ளவனாக இருந்தான்.

1. பூர்ணமத: பூர்ணமிதம் பூர்ணாத் பூர்ணமிதமுச்யதே |
பூர்ணஸ்ய பூர்ணமாதாய பூர்ணமேவ அவசிஷ்யதே ||
(ரிக்வேத)

2. யதைவ கிருஷ்ணகேஷஸ்ய க்ருஷ்ணஸ்ய பிரம்மதாகிலா |
தர்ஷிதாசைவ பார்த்தாய நிஷ்மிமாஷக்த யோஷ்யஹி ||
(அனுவியாக்யான)

**174. அஷுபவிலுண்டிகா**
சுஜீவிகளுக்கு அவரவர்களின் செயல்களுக்கேற்ப கிடைக்கத்தக்க அஷுப சம்பவங்களை தடை செய்பவனான ஸ்ரீஹரி.

**175. அதோக்ஷஜ**
என்றென்றும் சுருங்காமல் இருப்பதால் அதோக்ஷஜ என்று அழைக்கப்படுபவனான ஸ்ரீஹரி. (மார்க்கண்டேய உபநிஷத் 2-1-1)

**176. உபேந்திர**

உப

1. உபோபஸர்கஸ்ய உத்க்ருஷ்டார்த்தகத்வம் – 'ப்ரபஞ்சோபஷமம்' (மகாபாரத உத்யோக பர்வ 70-10)

2. உத்க்ருஷ்டனந்த தூபத்வாதுபஷப்த: ப்ரகீர்த்தித: – துரிய நாமக பகவந்தனைப் பற்றிய விளக்கமாக ஶ்ரீமதாசார்யர் கூறியது.

இந்திர:

சர்வோத்தமனான பகவந்தன் – வியாஸ, கிருஷ்ண, கபில, ராகவாதி ரூபங்களைக் கொண்ட தன்னை மிகவும் பரிபூர்ணனாக 'இதம்' என்கிறான். (மந்திரார்த்த மஞ்சரி – ரிக்பாஷ்ய டீகா 2-4).

இதம் எனப்படும் தன் ஸ்வரூபத்தை காண்பதாலேயே பகவந்தன், இதந்த்ர என்று புகழ்பெற்றிருக்கிறான். இவ்வாறு 'இதந்த்ர' எனப்படும் பகவந்தனை பரோக்ஷ ப்ரியரான தேவதைகள், ரமா, பிரம்மாதிகள்கூட இந்திர என்று அழைக்கின்றனர். (ஐதரேய உபநிஷத் 2-3-3, 10, 11).

அசுராதிகளுக்கு பகவந்தனின் 'இதந்த்ர' தெரியக்கூடாதென்று ஸ்ருதி அவனை பரோக்ஷமாக 'இந்திர' என்றே அழைக்கிறது. ஐதரேயோபனிஷத் பாஷ்ய.பகவந்தன் அனைவரைவிடவும் மேலே இருந்து, பரம ஐஸ்வர்யஷாலியாக இருக்கிறான். ஆகையாலேயே கார்க்யர் பகவந்தனை அனைத்து ஜீவிகளுக்கு தலை (மூர்த்தா) ஸ்தானத்தில் இருக்கிறான் என்று தான் வணங்குகிறேன் என்று அஜாதஷத்ருவைக் குறித்து உபதேசிக்கிறார். (ப்ருஹதாரண்யக உபநிஷத் 4-1.2 மற்றும் பாஷ்யம்).

பரமைஷ்வர்ய உள்ளவனே இந்திர. பகவந்தனே முக்கியமாக பரமைஷ்வர்ய உள்ளவனாக இருப்பதால், அவனே முக்கியமாக இந்திரன். சசிபதியானாலும் முக்கியமான பரமைஷ்வர்யத்தை அடைந்ததன் பொருட்டு இந்திர என்று அழைக்கப்படுவதில்லை. பகவந்தனே பூதாதிபத்ய ரூபமான மஹைஷ்வர்யத்தை பெற்றிருப்பதால் அவனே இந்திரன். ப்ருஹதிசஹஸ்ர அவனின் புகழே ஆகிறது. என்று மஹிதாசர் கூறுகிறார். (ஐதரேய உபநிஷத் பாஷ்ய 2-1-2-15 மற்றும் 2-2-6-12). யக்ஞ நாமக பகவந்தனே பிரதம

மன்வந்தரத்தில் ஸ்வேச்சையுடன் இந்திரனாக இருந்தான். மற்ற 12 பேருக்கு பகவந்தனால் அருளப்பட்ட இந்திரத்வமே தவிர, முக்கியமானதல்ல. ஆகையால், வேதங்கள் முக்கியமாக ஸ்ரீஹரியையே இந்திர என்னும் பெயரால் அழைக்கின்றன.

வலது கண்ணில் இருக்கும் பகவந்தன் ஒளிர்வதால் இந்திரன் எனப்படுகிறான். (ரிக்பாஷ்ய 2-4). ஆனால், பரோக்ஷப்ரியரான ஞானிகள் அவனை 'இந்த' என்பதற்கு பதில் 'இந்திர' என்று சொல்கின்றனர் என்று கண்வஸ்ருதி சொல்கிறது. இந்திராதிகளுக்கு அருள்வதற்காக இந்திரனின் தம்பியாக அவதரிக்கிறான். (வித்யாதிராஜிய டீகை – உபேந்திர நாமத்திற்கு).

ஸ்வர்க்காதிபதியாக பலி தேவதைகளின் ஐஷ்வர்யங்கள் அனைத்தையும் இழந்தபோது, இந்திராதி தேவதைகளுக்கு அருள்வதற்காக அதிதியிடம் கஷ்யபர் மூலமாக பகவந்தன் வாமனனாக அவதரித்தான். அதிதியிடம் இந்திராதிகளின் அவதாரமான பிறகு, இந்த வாமனாவதாரமே உபேந்திர என்று அழைக்கப்பட்டது.

பகவந்தனே கிருஷ்ணாவதாரத்தின் சமயத்தில் வசுதேவ தேவகியிடம், தான் முன்னர் உபேந்திர என்று புகழ்பெற்ற அவதாரத்தை எடுத்தேன் என்று கூறுகிறான். (ஸ்ரீமத் பாகவத 10-3-42). இத்தகைய உபேந்திரரூபியான ஸ்ரீஹரி.

**177. ஸ்ரீஸ்ரீஷ**

எந்த காலத்திலும் எந்த அவதாரத்திலும் ஸ்ரீதேவி, ரமாதேவியின் தலைவன் – அதாவது வல்லபனான ஸ்ரீஹரி. சிசுபாலாதி ராஜர்களை விட்டு, என்னையே ஏன் திருமணம் செய்தாய் என்று ஸ்ரீகிருஷ்ணன் ருக்மிணியிடம் நகைச்சுவையாக கேட்க – ஸ்ரீரமாவதாரியான ருக்மிணி - ராஜைஷ்வர்யாதிகள் உள்ளவர்கள் என்று நீ சொல்லப்படும் அரசர்கள் காமத்தைக் கொண்டு, பெண்களின் அந்தப்புரத்தில், கழுதை, பசு, குதிரை, பூனைகளைப் போல அவர்களின் தாசனாக இருக்கின்றனர். இத்தகைய பேடிகளான அரசர்களை அடைவதற்கு, உன் பாத பத்மங்களின் மகரந்தத்தை என்றும் நுகராமல் மூர்க்களான ஸ்த்ரீ மட்டும்

பதித்வேன, வெறும் காமத்திற்காக விரும்பலாம். உத்தம ஸ்த்ரியர் தம்மை ஆள்வதற்கு, குணங்களால் உத்தமரான புருஷர்களை கணவனாக விரும்புவார்களே தவிர, தன் ஆணைக்கேற்ப நடக்கும் பேடிகளை அல்ல' என்று கூறுகிறாள். (ஸ்ரீமத்பாகவத 10ம் ஸ்கந்தம் உத்தரார்த்தம் 75ம் அத்தியாயம்). இத்தகைய ஸ்ரீதேவியின் ஈசனான ஸ்ரீஹரி.

**178. அனிருத்த** நாமம் 154 அனிருத்த பார்க்கவும்

**கண்டித ஜனன மரண**

**179. கண்டித ஜனன: & 180. கண்டித மரண**

நாம 132 'வ்ருத்தி வர்ஜித' 133 'ஹ்ராஸ வர்ஜித' பார்க்கவும்

**181. ஷிரி வைகுண்ட**

ஸ்ரீவிஷ்ணு பத்னியான ரமாதேவி மற்றும் ஏகாந்த பக்தர்களான வாயு, கருட, இவர்களால் சேவை பெற்றுக்கொள்ளப்பட்டு வைகுண்டத்தில் பூர்ணானந்தத்தினால் இருக்கிறான். தன் இருப்பினாலேயே வைகுண்ட லோகத்திற்கு ஒளியைத் தருபவனான ஸ்ரீஹரி.

பத்மாம்லான துலஸி கண்டமாலான்வித ஸுகந்த. பத்ம + அம்லான + துலஸி + கண்ட + மாலான்வித + சுகந்த. பத்மபுஷ்ப மற்றும் வாடாத துளசி தளங்களால் செய்த மாலையை கழுத்தில் தரித்தவனான ஸ்ரீஹரி.

**182. பத்மாம்லான**

ஸ்ரீகிருஷ்ணன் ருக்மிணியிடம், சிறந்த அரசர்களை விட்டு, கோபாலகனான என்னை ஏன் வரித்தாய் என்று நகைச்சுவையாக கேட்டான். இதைக் கேட்ட ருக்மிணி, மூர்ச்சையடைந்தாள். அதனைக் கண்ட ஸ்ரீகிருஷ்ணன், நான் வெறும் நகைச்சுவைக்காகவே கூறினேன் என்று அவளின் துக்கத்தை பரிகரித்தான். அப்போது, அவள் பயபக்தி கொண்டு, பெண்ணுக்கே உரிய வெட்கத்துடன் தலை குனிந்து, காதல் பார்வையுடன் அவனைப் பார்த்தாள். இவ்வாறு ரமாதேவியை வெட்கமடையச் செய்தவனான ஸ்ரீஹரி. (ஸ்ரீமத்பாகவத 10ம் ஸ்கந்தம் உத்தரார்த்தம் 75ம் அத்தியாயம்).

**183. துலஸிகண்ட மாலான்வித ஸுகந்த**

பகவந்தன் ஸ்ரீதுளசிதேவியில் இருக்கும் தனது அன்பிற்காக தன் கழுத்தில், ஸ்ரீ துளசி மாலையை தரித்திருக்கிறான். அனைத்து ருதுகளில் விளையும் அனைத்து பூக்களின் வாசனையும் ஸ்ரீதுளசியில் இருக்கிறது. ஆகையால், துளசி கண்ட மாலான்வித ஸுகந்தத்தை நுகர்பவனான ஸ்ரீஹரி.

**184. ஞானகோஷ**

பகவான் அறியாத விஷயமே எதுவும் இல்லை. ஆகையால், அவன் ஞானத்தின் கருவூலமாக இருந்து 'ஞானகோஷ' என்று அழைக்கப்படுபவனான ஸ்ரீஹரி.

**நிர்ஜரேஷ்டத$^{3}$ நீதப$^{2}$லத$^{3}$ கு**
**து$^{3}$ர்ஜனார்த$^{3}$க தூ$^{3}$ஷணாந்தக**
**நிர்ஜிதாகி$^{2}$ள ஸுஜனபாலக நிஷாசரௌக$^{4}$ ஹர ।**
**வர்ஜிதகலுஷ நித்யவிபு$^{3}$த$^{4}$ர**
**உர்ஜிதர சாரித்ர விமலகு$^{3}$**
**நார்ஜிதோத$^{3}$தி$^{4}$ உபத்$^{3}$வஜ வைராக்$^{3}$ய புருஷ நமோ ।। 13**

**185. நிர்ஜரேஷ்வர**

நிர்ஜர - (ஜரா - மூப்பு). மூப்பு இல்லாதவன். தேவதைகள். மூப்பு இல்லாததால் மரணம் இல்லாதவனாக அமரன் எனப்படும் தேவதைகளின் இஷ்ட. அதாவது, விருப்பத்தை நிறைவேற்றுபவனான ஸ்ரீஹரி.

**186. நீதபலத**

பகவந்தன் அவரவர்களின் கர்மங்களுக்கேற்ப அவரவர்களுக்கு கிடைக்கவேண்டிய பலன்களை கொடுத்து 'நீதபலத' என்று அழைக்கப்படுபவனான ஸ்ரீஹரி.

**187. குதுர்ஜனார்த்தக**

கு+துர்ஜன+அர்த்தக = பூமி + துஷ்டஜன + நாசம் ஆக்கும். கெட்ட செயல்களால் பூபாரமான துஷ்ட ஜனர்களை நாசம் செய்பவனான ஸ்ரீஹரி.

**188. தூஷணாந்தக**

ஸ்ரீராமன் சீதா லட்சுமணனுடன் பஞ்சவடியில் வசித்தபோது ‘ஷூர்ப்பணகி’ என்னும் அரக்கி ராமலட்சுமணர் மேல் மோகம் கொண்டு அவர்களுடன் திருமணம் ஆகவேண்டும் என்று விரும்பி, தன் காது, மூக்கு ஆகியவற்றை கத்தரித்துக்கொண்டு, விரூபளாகி, தன் அண்ணனான கரனிடம், நடந்த விஷயங்கள் அனைத்தையும் சொல்லி, தன்னுடன் தன் அண்ணனின் 14 சேனாதிபதிகளையும், பற்பல அசுரர்களையும் அழைத்துக்கொண்டு, ராம லட்சுமணர்களுடன் போருக்கு வருகிறாள். ஆனால், அந்தப் போரில் அவர்கள் அனைவரும் தோற்றுவிட, கரன் தன் சேனாதிபதிகளில் முக்கியமானவர்களான த்ரிஷிர மற்றும் தூஷணர்களுடன் 14,000 அசுர சேனையுடன் ஸ்ரீராமனுடன் போர் புரிந்தான். அதில் அவர்கள் அனைவரும் தோற்றனர். இவ்வாறு ஸ்ரீராமாவதாரத்தில் ‘தூஷண’ என்னும் அசுரனைக் கொன்று ‘தூஷணாந்தக’ என்று அழைத்துக் கொண்டவனான ஸ்ரீராமாவதாரியான ஸ்ரீஹரி.

2. ராஜசூய யாகம் மிகவும் விமரிசையாக நடந்தது. அக்ரபூஜை யாருக்கு என்று கேட்டபோது, பீஷ்மர் (சஹதேவ நாமக வஸு), ‘ஸ்ரீகிருஷ்ணனே அக்ரபூஜைக்கு தகுதியானவன்’ என்று கூறினார். போலவே, தர்மராஜன் ஸ்ரீகிருஷ்ணனுக்கு அக்ரபூஜையை வழங்கினான். சிசுபாலன் அப்போது கிருஷ்ணனை திட்டி, போருக்கு வந்தான். ஸ்ரீகிருஷ்ணன் தன் சக்கரத்தால் அவனின் தலையை கத்தரித்தான். இதனால், ஹரித்வேஷிகளுக்கு, சுகங்கள் கிடைப்பதில்லை என்று குறிப்பு சொல்லப்படுகிறது. இந்த சிசுபாலனில் ஜீவத்வயர்கள் இருந்தனர். துஷ்டனாக இருந்தவனை தமஸ்ஸிற்கு அனுப்பி, தன் த்வார பாலகனான ஜயனுக்கு நற்கதியை அளித்தான்.

ஸர்வதாபக்தி தோமுக்தி: த்வேஷாத்தம உதீரதம் |
ஜீவத்வய ஸமாயோகாத் கதித்வய ஜிகீஷவ: ||
ஷிஷுபாலாதிக்ஷு த்விஜா:ஜிவா: - பாகவத தாத்பர்ய
(ஸ்ரீமத் பாகவத 10ம் ஸ்கந்தம் உத்தரார்த்த. 82ம் அத்தியாயம்).

**189. நிர்ஜிதஸுஜனபாலக. & 190. ஸுஜனபாலக**

அனைவரையும் வென்றவனாக, சுஜனர்களை காப்பவனான ஸ்ரீஹரி.

அனன்யாஸ்சிந்தயந்தோ மாம் யே ஜனா: பர்யுபாஸதே |
தேஷாம் நித்யாபியுக்தானாம் யோகக்ஷேமம் வஹாம்யஹம் ||
(கீதை 9-22)
சுஜனர்களை காப்பவனான ஸ்ரீஹரி.

**191. நிஷாசரௌகஹர**

நிஷா – இரவு + சர – திரிபவன் – அசுரன். ஔக – சமூக + ஹர – அழிப்பவன். அசுரர்களின் சமூகத்தை விசேஷமாக அழிப்பவனான ஸ்ரீராமாவதாரியான ஸ்ரீஹரி.

**192. வர்ஜிதகலுஷ.**

நாம 125 'அசேஷதோஷ விதூர' பார்க்கவும். கலுஷ – தோஷ. வர்ஜித – இல்லாதவன். எந்த காலத்திற்கும் எப்போதும் தோஷம் இல்லாதவனான ஸ்ரீஹரி.

நாராயணம் நமஸ்க்ருத்ய நரஞ்சைவ நரோத்தமம் -- நாராயணனுக்கு நமஸ்கரிக்கும் நரன், நரோத்தமத்வத்தை அடைகிறான் என்ற பிறகு, அத்தகைய நாராயணனுக்கு தோஷம் எங்கிருந்து வருகிறது? எப்போதும் அவனில் தோஷம் இல்லை. (அனுவியாக்யான).

**193. நித்யவிபுதர உர்ஜிதர சாரித்ர**

எப்போதும் விசேஷ புத்திவந்தரான பிராமண வர்ணத்திற்கு அருமையான சாரித்ர்யத்தை தருபவனான ஸ்ரீஹரி.

**194. விமல குணார்ஜிதோததி**

விமல+குண+அர்ஜித+உததி (கடல்). நிர்மலமான குணங்களை கடலைப் போல பரந்த மற்றும் தூய்மையாக பெற்றிருப்பவனான ஸ்ரீஹரி.

**195. விபதத்வஜ**

வி = ஆகாயம். பத = வழி. ஆகாயமே வழியாக உள்ள. கருட, கருடத்வஜ உள்ளவனான – ஸ்ரீஹரி.

**196. வைராக்யபுருஷ**

ராக – விருப்பம். விராக – விருப்பம் இல்லாத. படைக்கும்போது, காக்கும்போது, அல்லது அழிக்கும்போது, அதில் படைத்த எந்த பூத

வஸ்துகளிலும், எந்தவொரு காலத்திற்கும் எவ்வகையிலும் விருப்பத்தை வைக்காதவனான ஸ்ரீஹரி.

**அபுஷயன ஆத்$^{3}$யப்த இஷ்டஜ**
**ந பரக$^{3}$திப்ரத$^{3}$ ஈ ஷவரனுத**
**உபமவிரஹித ஊர்த்$^{3}$வக்ரப்ரிய ருஜுர்பி$^{4}$ ந்ருபத$^{4}$ர ।**
**உபதது$^{3}$ஷ்க்ருத ஈக$^{2}$மோத$^{3}$க**
**சபல ஏகானேக விக்$^{3}$ரஹ**
**ஸ்வபர ஐஷ்வர் யோஜ ஔதா$^{3}$ர்ய ஸஹஸ்ர நமோ ।। 14**
**(மேலுள்ள இந்த நுடி – அம், அ: அக்ஷரமாலை இருக்கிறது)**

**197 அபுகயன**
தண்ணீரில் சேஷனை படுக்கையாக ஆக்கிக்கொண்டு, தான் அதில் படுத்துக்கொண்டு ஸ்ரீதேவி, மாயா, கருடர்களால் சேவை பெற்றுக்கொள்பவனான ஸ்ரீஹரி. நாம 114 - சேஷஷயன பார்க்கவும்.

**198. ஆத்யப்த இஷ்டஜன பர**
தனக்கு பிரியமான சுஜீவிகள் அனைவருக்கும் பரகதி (மோட்சம்) கொடுத்து, உத்தம உலகங்களில் அவர்களுக்கு அனந்த சுகங்களை கொடுக்கத்தக்கவனான ஸ்ரீஹரி.

**199. கதிப்ரத**
அவரவர்களின் கர்மங்களுக்கேற்ப சத்கதி அல்லது அதோகதியை கொடுப்பவனான ஸ்ரீஹரி.

**200. ஈஷவரனுத**
ஈஷ-ருத்ர. ஈஷரவ்ர – வாயு, பிரம்ம மற்றும் ஸ்ரீரமாதேவி. ருத்ரதேவரைவிட அதிகமானவரான வாயுதேவர். பிரம்ம, சேஷ, கருட மற்றும் ஸ்ரீரமாதேவியர்களால் நித்ய சேவை கொள்பவரான ஸ்ரீஹரி.

**201. உபமவிரஹித**
பெயர் 168 ‘ஸமாதிகாபக்ஷ’ பார்க்கவும். தனக்கு ஒப்புமை காட்டுவதற்கும், சரிசமானர்கள் யாரும் இல்லாமல், உத்தமமானவர்கள் இல்லாதவனான ஸ்ரீஹரி.

**202. ஊர்த்வகப்ரிய**

மந்த்ரத்ரஷ்டாரனான திரிசங்குராஜன் – ஊர்த்வ – எனப்படும் பகவந்தனால் தான் பவித்ரனான பிறகு, சம்சார விருட்சத்தை அறுப்பவன் என்று சொல்லிக் கொள்பவன். (தைத்திரிய உபநிஷத் 1-18)

ஊர்த்வ – எனப்படும் பகவந்தனிடம் க-மனதை வைக்கும் தன் பக்தர்களுக்கு ப்ரியனானவனான ஸ்ரீஹரி.

**203. ருஜுர்பிந்ருபதர**

ருஜுபி: + ந்ருப = ருஜுர்பிந்ருப = பிரம்ம. ருஜுர்பி ந்ருப + தர – ஸ்ரீஹரி. ருஜுகளின் அரசனான பிரம்மனை தன் நாபி கமலத்தில் தரித்தவனான ஸ்ரீஹரி.

**204. விபதுதுஷ்க்ருத**

துஷ்டர்கள் தம் மேல் எறிந்த துஷ்கர்மங்களை, சத்பக்தர்களின் பிரார்த்தனைக்கேற்ப 1. திரௌபதியின் வஸ்த்ர அபஹரண சங்கடத்தை 2. சிஷ்ய சமேத துர்வாசரின் அகால உணவு விருப்பத்தை 3. அம்பரீஷனை துர்வாசரின் சாபத்தினாலும் 4. கஜேந்திரனை முதலையினாலும் விடுதலை செய்த, கருணையானவனான ஸ்ரீஹரி.

**205. ஈகமோதக**

ருத்ர – பிரம்மாதிகளுக்கு ஆனந்தத்தைக் கொடுப்பவனான ஸ்ரீஹரிசபல ஏகானேக விக்ரஹ

**206. சபல விக்ரஹ & 207. ஏக விக்ரஹ & 208 அனேக விக்ரஹ**

பகவந்தனின் ஸ்ருஷ்ட்யாதிகள் உலகத்தின் ஸ்ருஷ்ட்யாதிகளைவிட வேறுபட்டவை. ஒரு தீபத்தினால் மற்றொரு தீபம் பிறப்பதைப் போல, ஒரு ரூபத்தினால் மற்றொரு ரூபத்தின் தோற்றமே பகவந்தனின் ஸ்ருஷ்டி அல்லது அவனின் அவதாரம் (பாகவத தாத்பர்ய நிர்ணய 11-18-6). இவ்வாறு தன் ஒரு ரூபத்தினால் அனேக ரூபங்களை அதாவது அவதாரங்களை எடுப்பவனான ஸ்ரீஹரி.

**209. ஸ்வபர – ஐஷ்வர்ய ஸஹஸ்ர & 210. ஸபர ஓஜ – சஹஸ்ர & 211. ஸபர – ஔதார்ய சஹஸ்ர**

ஸ்வபர – தன் பக்ஷத்தின். ஓஜ – தேஜ – சக்தி. தன் மக்களுக்கு செல்வம், சக்தி மற்றும் கருணையை ஆயிரம் மடங்கு திருப்பிக் கொடுப்பவனான ஸ்ரீஹரி.

**கருணநிதி$^{4}$ க$^{2}$ளஹகெ$^{3}$யராத$^{3}$ ப**
**க$^{4}$ர க$^{4}$ராதி$^{3}$ ஸம்யங் ஞானாத்மக ஸு**
**சரித ப்ராக்ருத ச$^{2}$விரஹித ஜனபா ஜு$^{4}$ஷ ருஷபா$^{4}$**
**ரூருஜக$^{3}$த்பர்யஜன கமர ட$^{3}$**
**மரத$^{4}$ரேட்$^{4}$யனே கூ$^{3}$ட$^{4}$கு$^{3}$ணசித்**
**பரகுத$^{4}$ரதி$^{4}$ கோச்சாரஜாரக$^{3}$ த$^{3}$னஹ ஸூத$^{4}$னத$^{3}$ நமோ || 15**
**(மேலுள்ள இந்த நுடி – த$^{2}$ - அக்ஷரமாலை இருக்கிறது)**

**212. கருணநிதி**

மிகவும் காருண்யம் உள்ளவனாக 'கருணநிதி' என்று அழைக்கப்படுபவனான ஸ்ரீஹரி.

**213. களஹகெயராதப**

துஷ்ட அசுரனான பகாசுர, ஹிடிம்ப ஆகியோரையும் மற்றும் துர்ஜனரான ஜராஸந்த, துர்யோதன, துச்சாதனன் ஆகிய கௌரவர்களின் வைரியான பீமாவதாரத்தின் வாயுதேவரை காப்பவனான ஸ்ரீஹரி.

**214. கரகராதி ஸம்யங் ஞானாத்மக**

கர்கராதி கோஷ வர்ணங்களின் ஞான நாமகனான ஸ்ரீஹரி.

**215. ஸுசரித**

நல்ல மரியாதையுடைய சரித்திரத்தைக் கொண்ட ஸ்ரீஹரிப்ராக்ருத சவி ரஹிதஜனப. ப்ராக்ருத சவி ரஹித ஜன + ப. ப்ராக்ருத தோஷங்களான காம க்ரோதாதிகள் இல்லாதவாறு செய்து கொண்டவரான முக்த ஜனர்களை காப்பவனான ஸ்ரீஹரி.

**216. ப்ராக்ருத சவிரஹித**

ப்ரக்ருதியினால் பிறக்கும் காம க்ரோதாதி எவ்வித தோஷங்களும் இல்லாதவனான ஸ்ரீஹரி. நாமம் 125 அகேஷதோஷவிதூர மற்றும் நாமம் 162 முமுக்ஷவரத பார்க்கவும்

**217 ஜனப** - மக்களை காப்பவனான ஸ்ரீஹரி

**218 ஜுஷ**

நாமங்கள் 1. 882 விஷயசுகமயமீன; 2. 348 ஜுஷபதி ; 3. 387 ஸத்யவ்ருதப – பார்க்கவும்.

**219. ருஷப** - நாமம் 101 ருஷப – பார்க்கவும்.

**220. ஜுரு ஜகத்பர்யவன**

பகல் இரவு எப்போதும் ஜகத்வியாபியானவனான ஸ்ரீஹரி

**221. கமட** - கூர்மரூபியானவனான ஸ்ரீஹரி

**222. டமர தரேட்யனே**

ருத்ரதேவரால் வாசிக்கப்பட்ட டமருவிலிருந்து வெளிப்பட்ட அ-கார, உ-கார, ம-கார ஆகிய ஷப்த வாச்யனான ஸ்ரீஹரி.

**223. கூடகுணசித்**

ரகசியமான குணங்கள் மற்றும் ஞான உள்ளவனான ஸ்ரீஹரி.

**224. பராகதர.**

பர+கு+தர. ஸ்ரீதேவி + பூதேவி + தாரணம் செய். ஸ்ரேஷ்டளான பூதேவியை தாரணம் செய்திருப்பவனான ஸ்ரீஹரி.

**225. அதிகோச்சார**

பிரம்ம, வாயு, சரஸ்வதி, பாரதி, கருட, சேஷ இவர்கள் மட்டுமல்லாமல் அக்ஷர எனப்படும் ஸ்ரீலட்சுமிதேவியைவிட உத்தமன் என்று சொல்லப்படுபவனான ஸ்ரீஹரி.

**226. ஜாரக**

ஸ்ரீகிருஷ்ணாவதாரத்தில் ஜாரகர்ம (பிறர் பெண்ணை கவர்ந்தான்) என்னும் அபராதத்திற்கு ஆளாகி, ‘ஜாரக’ என்று அழைக்கப்பட்டவனான ஸ்ரீஹரி.

**227. தன ஹஸூதனத**

மூலத்தில் - தனுஹஸ்தனத என்று இருக்கிறது. கிருஷ்ணாவதாரத்தில் நந்தகோபனின் வீட்டில் இருக்கும்போது பசு, கன்றுக்குட்டி, தனங்களை, செல்வமாக ஆக்கிக் கொண்டவனான ஸ்ரீகிருஷ்ண அவதாரியான ஸ்ரீஹரி.

**நரஸகா[2]மித பஷுப க[4]ணிமத[3]**
**ஹர ப[3]லானுஜப[4]ரித விக்ரம**
**மருத காங்கெ[3]யெரக்[4]ன நெரலேஷ்வர லக்ஷ்மீஷா |**
**வரத[3]ராஜ ஷஷிவத[3]ன ஷக்ருஷ**
**நிரத ஸர்வபு[4]க் நுக்ஞ ஹவ்யே**
**ஷ்வர ஸ்வத்ருப்த ஸ்வபூர்ண லக்ஷ்மீத[4]ர யக்[3]ஞாங்க[3] நமோ || 16**
**(மேலுள்ள இந்த நுடி - ள - அக்ஷரமாலை இருக்கிறது)**

**228. நரஸக**

நர - நாராயணரே அர்ஜுன மற்றும் ஸ்ரீகிருஷ்ணராக அவதரித்தனர். அர்ஜுனனின் சக - நண்பனானவனான, ஸ்ரீகிருஷ்ணாவதாரியான ஸ்ரீஹரி.

**229. அமிதபஷுப**

அ+மித+பஷு+ப. ஸ்ரீகிருஷ்ணன், நாராயணனிடமிருந்து வரும் சுக துக்கங்களை இந்திரனால் தீர்க்கமுடியாது என்று சொல்லி, இந்திரனின் பூஜையை செய்யவிடாமல், கோவர்த்தன கிரி பூஜையை செய்ய விடவில்லை. அதனால் இந்திரன் கோபம் கொண்டு, ஏழு நாட்கள் தொடர்ந்து அடைமழை பெய்ய வைத்தான். இதனைக் கண்ட ஸ்ரீகிருஷ்ணன், தன் சுண்டு விரலால் அந்த கோவர்த்தன மலையைத் தூக்கிப் பிடித்து, அதன் கீழ் அனைத்து பசுக்களையும், கோபாலகர்களையும் இருக்க வைத்து, காத்தான். இப்படியாக அந்த மழையிலிருந்து அனைவரையும் காத்தவனான ஸ்ரீகிருஷ்ணாவதாரியான ஸ்ரீஹரி. (ஸ்ரீமத் பாகவதம் 10-22,23,24,25).

ஒரு நாள் பசுக்களை மேயவிட்டு, ஸ்ரீகிருஷ்ணன் கோபாலகர்களுடன் விளையாடிக் கொண்டிருந்தான். அவர்கள் அந்த பசுக்களையே மறந்தனர். பின், அவற்றை எங்கு தேடியும் கிடைக்கவில்லை. அவை பக்கத்தில் இருந்த காட்டிற்குள்

போயிருந்தன. ஸ்ரீகிருஷ்ணன் பசுக்களின் பெயர்களை சொல்லி அழைக்கையில், அவை 'அம்மா' என்று திரும்ப குரல் கொடுத்தன. குரல் வந்த திசையில் இவர்கள் செல்வதற்குள், அங்கு காட்டுத்தீ பரவியது. அப்போது ஸ்ரீகிருஷ்ணன் அனைவரையும் கண்களை மூடச் சொல்லிவிட்டு, அந்த காட்டுத்தீயினை தானே விழுங்கி, அவர்களை காப்பாற்றினான். இத்தகைய ஸ்ரீகிருஷ்ணாவதாரியான ஸ்ரீஹரி.

**230. பணிமதஹர -** நாம 75 'நாகரக்ஷரக' பார்க்கவும்

**231. பலானுஜபரித**

வழக்கம்போல, ஒரு நாள் ஸ்ரீகிருஷ்ணன் மற்றும் அவனது நண்பர்களான கோபாலகர்கள் காட்டிற்குச் சென்று, இரு பிரிவுகளாகப் பிரிந்து பந்து விளையாடிக் கொண்டிருந்தனர். அப்போது 'பிரலம்ப' என்னும் அசுரன் ஒரு சிறுவனைப் போல வேடம் பூண்டு, கிருஷ்ணனின் அணியில் நின்று, பலராமனுடன் விளையாடினான். அவன் பலராமனை தூக்கிக் கொண்டு புறப்பட்டான். பயம் கொண்ட பலராமன், கிருஷ்ணனை அழைத்தான். அப்போது கிருஷ்ணன், பலராமனில் இருந்த ஹரியின் ஷ்வேதகேஷ ஆவேசத்தை, சேஷனின் ஸ்வரூபத்தை அவன் நினைவுக்கு கொண்டு வந்தான். அப்போது பலராமன், ஆவேச பலத்தினால் பிரலம்பாசுரனை கொன்றான். இத்தகைய பலமிக்க அண்ணனான பலராமனால் விரும்பப்பட்ட ஸ்ரீகிருஷ்ணாவதாரியான ஸ்ரீஹரி. (ஸ்ரீமத் பாகவதம் 10-16).

**232. விக்ரமமருத**

மருதாவதாரியான ஹனுமந்தனால் தொடர்ச்சியான சேவை பெறுவதில் தலைவன் எனப்படுபவனான ஸ்ரீராமாவதாரியான ஸ்ரீஹரி.

**233. காங்கேயரகனெரலேஷ்வர**

கோபிகா ஸ்த்ரீயர்கள் தம் துணிகளை கரையில் வைத்துவிட்டு, யமுனையில் ஸ்னானம் செய்து கொண்டிருந்தபோது, ஸ்ரீகிருஷ்ணன் அவர்களின் துணிகளை அபகரித்து, அவர்களுக்கு தீர்த்தாதி புண்யஸ்தானங்களில், தீர்த்த அபிமானி தேவதைகளின்

சான்னித்யம் இருப்பதால், அவர்கள் நிர்வாணமாக ஸ்னானம் செய்யக்கூடாது என்றும், பரமாத்மனிடம் மறைக்கக்கூடாத விஷயங்கள் எதுவும் இருக்கக்கூடாது என்றும் சுக்ஞானத்தையும் அருளி, அவர்களை பாவங்களிலிருந்து முக்தி கொடுத்த ஸ்ரீகிருஷ்ணாவதாரியான ஸ்ரீஹரி. (ஸ்ரீமத் பாகவத 10ம் ஸ்கந்தம் 20ம் அத்தியாயம்).

**234. லக்ஷ்மீஷா**

ஸ்ரீலட்சுமிதேவியின் ஈசன். தலைவன். கணவனான ஸ்ரீஹரி.

**235. வரதராஜ**

தன் பக்தர்களுக்கு வரங்களைக் கொடுப்பதில் ராஜன். சிறந்தவன். அதிகமாக கொடுப்பவனான ஸ்ரீஹரி.

**236. ஷஷிவதன**

சந்திரனைப் போல மனதிற்கு மகிழ்ச்சியைக் கொடுக்க வல்ல முககமலம் கொண்டவன் ஸ்ரீஹரி.

**237. ஷக்ருஷநிரத**

ஷ-ஷடூர்மிகள். க்ருஷ - குறைத்துவிடு. நிரதெ - ஆதரவு. 1. பசி 2. தாகம் 3. சோக 4. மோக 5. ராக 6. த்வேஷ இந்த ஆறும் ஊர்மிகள். அதாவது பெரிய அலைகளை கட்டுப்படுத்துபவனான ஸ்ரீஹரி. (ஞானம்யதா ப்ரதி நிவ்ருத்த குணோர்மிசக்ர’ பாகவத 2-3-12)

**238. ஸர்வபுக்**

பிரளய காலத்தில் சராசரங்கள் அனைத்தையும் தன் உதரத்தில் வைத்துக்கொண்டு ‘ஸர்வபுக்’ என்று அழைக்கப்படுபவனான ஸ்ரீஹரி.

**239. யக்ஞஹவ்யேஷ்வர**

யக்ஞ யாகாதிகளில் ஹவிஸ்ஸினை ஏற்றுக் கொள்வதில் முதன்மையாக இருப்பவனான ஸ்ரீஹரி.

**240. ஸ்வத்ரப்த**

தன்னில் தானே திருப்தியை அடைபவனான ஸ்ரீஹரி

**241. ஸ்வபூர்ண**

தான் தன்னாலேயே பரிபூர்ணனாக இருப்பவனான ஸ்ரீஹரி

**242. லக்ஷ்மீதர.**

நாம 234 லக்ஷ்மீஷா பார்க்கவும். லக்ஷ்மீபதியான ஸ்ரீஹரி

**243. யக்ஞாங்க**

யக்ஞோத்தேஷத்வாத் யக்ஞாங்க: – ஸ்ரீஸத்யசந்த தீர்த்தர். யக்ஞத்தின் உத்தேசம் உள்ள 'யக்ஞாங்க'னானவன் – ஸ்ரீஹரி. யக்ஞாபிமானி தேவதைகள் பகவந்தனின் இந்திரியங்களிலிருந்து தோன்றியவர்கள். அப்படியே அந்தந்த இந்திரியங்களை பற்றிக் கொண்டிருப்பவர்கள். ஆகையால், அத்தகைய யக்ஞாபிமானிகள் பகவந்தனின் அங்கங்கள் என்று சொல்லப்படுகிறார்கள்.

அங்கா நிக்ரதவோ ஜாத: .. (பாகவத 6-4-46).
ரக்ஷத்வஸௌ யாsத்வனி யக்ஞகல்ப:
ஸ்வதம்ஷ்ட்ர யோன்னிததரோ வராஹ: |
(நாராயண வர்ம 15ம் ஸ்லோகத்தின் பூர்வார்த்த).

யக்ஞான் ஸ்வாங்கேப்ய: கல்பயதீதி – 'யக்ஞகல்ப' இதற்கு ஸத்யதர்ம டீகை – தன் அங்கங்களால் யக்ஞங்களை வெளிப்படுத்தியிருக்கும் தன் தாடையால் பூமியை மேல் கொண்டு வந்து நிறுத்தியிருக்கும் வராகன் வழியில் ரக்ஷணை கொடுக்கட்டும். சாஸ்திரத்திற்கு எதிரான வழியில் நடக்காதவாறு செய்வதன் மூலம் அருளட்டும். இவ்வாறு யக்ஞாங்கனானவனான ஸ்ரீஹரி.

**கபட நாடக காலகிதவப[4]**
**யபரிஹர கீசகரிபு ப்ரிய**
**குபுருஷாந்தக கூத்[3]கேஷனெ கைவல்யகேஷ |**
**விபுலகோஷனெ கௌஷிக முனீந்திர[3] ம**
**க[2] பரிபோஷ[2]க கம்புகந்த[4]ர**
**தபன கோடிப்ரகாஷ கஷ்யபஸுத ஸுரேந்த்[3]ர நமோ || 17**
**(மேலுள்ள இந்த நுடி – க: – அக்ஷரமாலை இருக்கிறது)**

**244. கபட நாடக**

ஜீவாத்மரின் சரீரத்தில் பிம்பனாக இருந்துகொண்டு, மனஸ் மற்றும் கர்மேந்திரியங்களுக்கு முக்ய நியாமகனான, வாயுதேவரின் மூலம் அனைத்து காரியங்களையும் தானே செய்துகொண்டிருந்த, ஜீவாத்மரை கர்ம பந்தனத்திற்கு காரணமாக செய்தவனான கபட நாடக சூத்திரதாரியானவனான ஸ்ரீஹரி.

**245. காலகிதவ பயபரிஹர**

கால-கலிகாலம். கிதவ - துஷ்டர். பயபரிஹார - பயத்தை போக்கும் துஷ்ட துரியோதனாதிகளால், திரௌபதி வஸ்த்ர அபஹரண மற்றும் துர்வாசரால் அகால போஜனத்தை வேண்டுதல் ஆகியவற்றிலிருந்து பாண்டவர்களுக்கு வந்த பயத்தை பரிகரித்த - ஸ்ரீகிருஷ்ணாவதாரியான ஸ்ரீஹரி.

**246. கீசக ரிபுப்ரிய**

பாண்டவர்கள் வனவாசத்தை முடித்துக்கொண்டு அஞ்ஞாத வாசத்தில் விராட அரசனிடம் மாறு வேடங்களில் இருந்தபோது, ஸைரந்திரியாக இருந்த திரௌபதியின் அழகினைக் கண்டு மயங்கி, அவளை தனியாக வரச்சொன்ன கீசகனை, பெண் வடிவம் தரித்து பீமசேனன், அந்த துஷ்டனைக் கொன்றான். இத்தகைய பீமாவதாரத்தின் வாயுதேவரே, ஸ்ரீவிஷ்ணுவிற்கு அத்யந்த ப்ரியமானவராக இருக்கிறார். ஆகையால், கீசகரிபு ப்ரியனானவனான ஸ்ரீஹரி.

**247. குபுருஷாந்தக**

நாமம் 1. 126 களஜனபீஷண 2. 40 தாடகாந்தக பார்க்கவும்

**248. கூதகேஷனெ.** (மூலத்தில் கூபகேஷனெ என்று இருக்கிறது).

கூ-பூமி. உ-தண்ணீர். த-கொடுப்பதற்கு. கொடுக்கத்தக்க மேகம். பூமிக்கு தண்ணீர் கொடுக்கக்கூடிய கருப்பு மேகத்தைப் போல, கூந்தலையுள்ள ஸ்ரீகிருஷ்ணாவதாரியான ஸ்ரீஹரி.

**249. கைவல்யகேஷ**

கைவல்ய + கம் + ஈஷ. கம் = சுக. கைவல்ய = மோட்சம். மோட்சத்தில் சுகத்திற்கும் தலைவனான ஸ்ரீஹரி.

**250. விஷுபகோஷ**

எண்ணிக்கையற்ற தனதிரவ்யாதி செல்வங்களைக் கொண்டவனான ஸ்ரீஹரி.

**251. கௌஷிக முனீந்திர மகபரிபோஷக**

நாம 1. 39 - முனினுத 2. 40 - தாஜகாந்தக – பார்க்கவும்

**252. கம்புகந்தர**

சங்கினைப் போல ரேகைகளைக் கொண்ட கழுத்தினைக் கொண்டவனான ஸ்ரீஹரி.

**253. தபனகோடிப்ரகாஷ**

கோடி சூரியர்கள் ஒரே சமயத்தில் ஒளிர்ந்தால் வரக்கூடிய ஒளியைக் கொண்டவனான ஸ்ரீஹரி.

**254. கஷ்யபஸுத**

நாம 1). 70 த்ரிவிக்ரம 2). 73 வாமன 3). 176 உபேந்திர பார்க்கவும்.

1. ப்ருத்விஸுத்ததல்லி நிம்ம உதரதல்லி புட்டிதெ |
அதிகரஷ்யபரல்லி வாமனனாகி புட்டிதெ ||88
மூருஜன்மதல்லி நிம்ம உதரதல்லி புட்டிதெ |
முக்திகெ யோக்யளாதெ தேவகி எந்த ||89

ஸ்ரீவாதிராஜர் இயற்றிய ஸ்ரீகிருஷ்ண பாலலீலெ பூர்வார்த்த நுடி 88, 89.

2. ஸ்ரீவிஷ்ணு தேவகிக்கு கூறிய – ‘ஸ்வாயம்புவ மன்வந்தரத்தில் நீ ப்ரஷ்னி. உன் பதி ஸுதப. 12,000 ஆண்டுகள் தவம் செய்தீர்கள். நான் அதில் மகிழ்ந்து, மூன்று பிறவிகளில், நானே உங்களுக்கு மகன் ஆகவேண்டும் என்று வரம் பெற்றீர்கள். நான் ப்ரஷ்னி கர்ப்ப, ப்ரஜேஷ்வரனாகவும், மூன்றாம் முறை உங்கள் மகன் கிருஷ்ணனாகவும் பிறந்தேன். சாமான்ய ரூபத்தினால் என் ஞானம் ஆகாதென்று இந்த நிஜ ரூபத்தை எடுத்தேன். உங்களுக்கு கம்சனின் பயம். என்னை கோகுலத்திற்கு எடுத்துச் சென்று யசோதைக்கு பிறந்த குழந்தையை இங்கு கொண்டு வந்தீர்கள். (ஸ்ரீமத் பாகவத 10ம் ஸ்கந்தம் பூர்வார்த்த 4ம் அத்தியாயம்).

3. கஷ்யப – பிரம்மபுத்ர மரீசியிடம் பிறந்தவர். யக்ஞத்திற்கு கொண்டு வந்த வருணனின் பசுக்களை, மனைவியரான அதிதி, திதியின் பேச்சுக்களைக் கேட்டு திரும்பக் கொடுக்கவில்லை. இந்த காரணத்தினால் மனிதப்பிறவி, சிறையில் வாசம் ஆகிய சாபங்களைப் பெற்றான். அதிதி, திதியின் மக்களைக் கொன்று, தன் மக்களும் பிறந்த உடனேயே இறக்குமாறு சாபம் பெற்றாள். மூவரும், வசுதேவ, தேவகி மற்றும் ரோஹிணியராக பிறந்தனர்.

**255. ஸுரேந்திர**

நாம 1. ஸுரமணி 2. ஸுரேஷ 3. 23 வாமன 4. 164 உபேந்திர பார்க்கவும்.

**க$^{2}$ரவிதா$^{3}$ரக கா$^{2}$தி$^{3}$ பஞ்சக**
**ப$^{4}$ரத$^{3}$கி$^{2}$ளகு$^{3}$ரோ வ்ருஜஸகீ$^{2}$மனோ**
**ஹர ஸுகு$^{2}$ரபுட ஷோபி$^{4}$த க$^{2}$ட்$^{3}$க$^{3}$கூ$^{2}$ர்ச்ச இஷு$^{2}$பாணி |**
**ஸுரஸகே$^{2}$ளன பரஸுகை$^{2}$க ஷ**
**ரீர விசிஷ்ட ஸூகோ$^{2}$த$^{3}$யாங்க்குர**
**வரஸு கௌ$^{2}$தா$^{3}$க$^{2}$ண்ட$^{3}$ பரஷோ து$^{3}$க்கஹரண நமோ || 18**
**(மேலுள்ள இந்த நுடி – க$^{2}$: அக்ஷரமாலை இருக்கிறது)**

**256. கரவிதாரக**

ஸ்ரீராமாவதாரத்தின் வனவாசத்தில் இருந்தபோது, பஞ்சவடியில், சூர்ப்பணகி ஸ்ரீராம லட்சுமணர்கள் மேல் மோகம் கொண்டு, அவர்களால் அவமானப்படுத்தப்பட்ட விஷயத்தை தன் அண்ணனான கர என்னும் அசுரனிடம் கூற, அவன் கோபம்கொண்டு முதலில் தன் 14 சேனாதிபதிகளை சூர்ப்பணகையுடன் அனுப்பினான். அவர்கள் ஸ்ரீராமனுடன் போர் புரிந்து தோற்றனர். இதனை அறிந்து தன் 14,000 அசுர சேனையுடன், சேனாதிபதிகளான த்ரிஷிர மற்றும் தூஷண இவர்களுடன் கரன் தானே ஸ்ரீராம லட்சுமணர்களுடன் போர் புரிந்து ஸ்ரீராமனிடம் தோற்றனர். இவ்வாறு கரனை சம்ஹரித்தவனான ஸ்ரீராமாவதாரியான ஸ்ரீஹரி. (வால்மிகி ராமாயணம்).

**257. காதிபஞ்சகபரத**

க – என்றால் ஆகாயம். ஆகாயமே முதலான பஞ்சமஹா பூதங்களை படைத்து அவற்றில் நிரம்பியிருப்பவனான ஸ்ரீஹரி.

**258. அகிளகுரோ**

1. ஜீவாத்மர்களுடன் படைக்கப்பட்ட அனைத்தையும்விட அத்யந்த சிறந்தவனான ஸ்ரீஹரி

2. பரமாத்மா மற்றும் ஸ்ரீலட்சுமிதேவியரை விட்டு மற்ற அனைவருக்கும் பிரம்ம வாயுதேவர் குருகளானால், அவர்களுக்கும் குருவான ஸ்ரீஹரி.

**259. வ்ருஜஸகீமனோஹர**

வ்ரஜ + சகீ + மன + ஹர. ஸ்ரீகிருஷ்ண, தன் பாலலீலையினால் நந்தகோபனின் பட்டணத்தில் இருந்த சகி தோழியர்கள் அனைவரின் மனதினை வென்று, அவர்களின் அன்பினை தான் பெற்றுக்கொண்டு. தன் அன்பினை அவருக்கு பிரித்துக் கொடுத்தவனான ஸ்ரீஹரி.

**260. சுகுரபுடஷோபித**

ஹயக்ரீவாவதாரத்தில் இருந்த பாதங்களின் நகங்கள் நன்றாக அழகானதாக இருப்பவனான ஸ்ரீஹரி.

**கட்க சூர்ண இஷ்டு பாணி**

**261. கட்கெபாணி**

நந்தக என்னும் வாளினை, தினமும் தரித்துக்கொண்டவன். அல்லது நந்தக ரூபத்தில் இருக்கும் துர்காதேவியை தினமும் காப்பவன். இத்தகைய வாளினை தரித்தவனான – நந்தகி நாமகனான ஸ்ரீஹரி.

**262. கூர்ச்சபாணி.**

கூர்ச்ச – கேடயம். ஒரு கையில் கத்தி. இன்னொன்றில் கேடயம் வைத்திருப்பவனான ஸ்ரீஹரி.

**263. இஷுபாணி**

வித்யா எனப்படும் லட்சுமிதேவியின் ரூபமே ஷார்ங்க வில்லாக இருந்தது. அத்தகைய வில்லினால் விடப்படும் இஷு என்றால்

பாணங்களை தன் கையில் பிடித்துக்கொண்டு ஷார்ங்கதன்வா எனப்படுபவனான ஸ்ரீஹரி.

**264. ஸுரஸகேளன**

கோபியர்களுடன் ராஸக்ரீடை ஆடுபவனான ஸ்ரீகிருஷ்ணாவதாரியான ஸ்ரீஹரி.

**265. பரஸுகைக ஷரீர விஷிஷ்ட**

பரஸுக என்றால் அப்ராக்ருத சுகம். இத்தகைய அப்ராக்ருத சுகமே சிறப்பு. முக்கியம் மற்றும் சர்வோத்தமனான சரீரம் உள்ளவனான ஸ்ரீஹரி.

**266. சுகோதயாங்குர**

சுகத்தின் உதயத்திற்காக விதையைப் போல இருக்கும் நிரந்தர சுகரூபமான மோட்சத்திற்கு சாதனி பூதமான – ஸ்ரீஹரி.

**267. வரஸுகேத**

வர + சுக + த. சிறந்த சுகத்தை கொடுக்கத்தக்க. அதிகமான சுகத்தைக் கொடுப்பவனான ஸ்ரீஹரி.

**268. அகண்ட பரஷோ**

யாராலும் எதிர்க்கமுடியாத பரசு கோடலியைப் பிடித்தவரான பரசுராமரூபியான ஸ்ரீஹரி.

**269. துக்கஹரண**

‘ஸங்கட பந்தாக வெங்கடரமணா’ என்னும் பழமொழியைப் போல, சங்கடம் வந்தவர்கள் யாராக இருந்தாலும் தன்னை நினைத்தால், அவர்களின் துக்கங்களை பரிகரிப்பவனான ஸ்ரீஹரி.

**க$^{3}$க$^{3}$னனாபா$^{4}$கா$^{3}$த$^{3}$ சரித கி$^{3}$**
**ரிக$^{3}$ணஸேவ்ய ஸுகீ$^{3}$தப்ரிய கு$^{3}$**
**ப்தகு$^{3}$ண கூ$^{3}$ட$^{4}$தீ$^{4}$ கே$^{3}$ஹத்ரயயுத கை$^{3}$தி$^{3}$ஹ கோ$^{3}$கோ$^{3}$ப்த |**
**ஸ்வக$^{3}$த க$^{3}$லரவ க$^{3}$வ்ஹராங்கித**
**ஸ்வக$^{3}$ஹநோத்தர ஷுப$^{4}$ ஸுக$^{2}$கர**
**ஸுக$^{3}$மஸூக்ஷ்ம ஸுது$^{3}$ர்க$^{3}$மாலய விஜிதரோஷ நமோ || 19**
**(மேலுள்ள இந்த நுடி – க$^{3}$: - அக்ஷரமாலை இருக்கிறது)**

**270. ககனநாபி**
நாப்யா ஆஸீதந்தரிக்ஷம் – புருஷ சூக்தம். ஸ்ரீவிஷ்ணுவின் விராட ரூபத்தின் பாதம் முதல் தலை வரை 14 உலகங்கள் அடங்கியிருக்கின்றன என்றும், அதில் நடுப்பாகம் வரை அதல லோகம் என்றும், அதன் மேல் பூலோகம் அந்த விராட ரூபத்தின் நாபி என்று பாகவதத்தில் விராட ரூபத்தின் வர்ணனையில் சொல்லப்பட்டிருக்கிறது. இத்தகைய ககனநாபியானவனான ஸ்ரீஹரி.

**271. அகாதசரித.**
துஷ்டர்களுக்கு தண்டனை, பக்தர்களை காத்தல், தன்னை உதைத்தவர்களைக் கூட மன்னிக்கக்கூடிய அபாரமான சரித்திரத்தைக் கொண்டவனான ஸ்ரீஹரி.

**272. கிரிகணஸேவ்ய**
கைலாஸவாசியான சிவனாலும் அவனின் கணங்களாலும் வணங்கப்படுபவனான ஸ்ரீஹரி. நாமம் 'ஷைலக்ருஹ ஸம்யமீ கணார்ச்சித' பார்க்கவும்.

**273. ஸுகீதப்ரிய** - ஸ்வரபத்தமான ஸாமவேத ப்ரியனான ஸ்ரீஹரி.

**274. குப்தகுண**
குப்த என்றால் ரகசியமான குணங்கள் உள்ளவனான ஸ்ரீஹரி.

**275. கூடதீ**
கூட என்றால் சூக்ஷ்மமான. தீ என்றால் புத்தி உள்ளவனான ஸ்ரீஹரி.

**276. கேஹத்ரயயுத**
பரமாத்மனின் ஸ்வரூபாம்ஷங்கள் எவை என்றால், அனந்தாஸனத்தில் இருப்பவன் – அனந்தாஸனன். அவனுக்கு, அம்ருத – என்று பெயர். வைகுண்டத்தில் இருக்கும் வைகுண்ட நாமகன் – க்ஷேம – என்று அழைக்கப்படுகிறான். ஷ்வேததீபத்தில் இருக்கும் பத்மனாபன் – அபய – எனப்படுகிறான். இவ்வாறு, வைகுண்ட, ஷ்வேததீப, அனந்தாஸன இந்த மூன்றும் இருப்பிடமாக

உள்ளவனான ஸ்ரீஹரி. (ஸ்ரீமத் பாகவதம் 2ம் ஸ்கந்தம் 6ம் அத்தியாயம்).

**277. கைதிஹகோகோப்த**
கைதிக + கோ + கோ + ஆப்த. சரணடைந்த + பசுக்கள் + பசுக்களின் நண்பன் = ஸ்ரீகிருஷ்ணன். தன்னை சரணடைந்த பசுக்களின் ரூபத்தில் இருந்த தேவதைகள் மற்றும் ரிஷிகள் இவர்கள் அனைவருக்கும் நண்பன் என்றால், ரக்ஷகனான ஸ்ரீகிருஷ்ணாவதாரியான ஸ்ரீஹரி.

**278. ஸ்வகத**
தன்னில் தானே சார்ந்திருப்பவனான ஸ்ரீஹரி. (ப்ருஹதாரண்யக உபநிஷத்)

**279. கலரவ.**
கல – கழுத்து. ரவ – வேத. கழுத்தில் எப்போதும் வேத உள்ளவனான ஹயக்ரீவ அவதாரியான ஸ்ரீஹரி.

**280. கவ்ஹராங்கித**. (மூலத்தில் கம்வராங்கித என்று இருக்கிறது).
கவ்ஹர – மலை. அங்கித – பெயருள்ள. கோவர்த்தன என்னும் பர்வதத்தின் பெயரால் அங்கிதம் உள்ள என்றால், அந்த நாமாபிமானத்தினால் பெயரான ஸ்ரீகிருஷ்ணாவதாரியான ஸ்ரீஹரி.

**281. ஸுகஹனோத்தர**
ஸு + கஹன + உத்தர. நல்ல + அறிவதற்கு அசாத்தியமான + சிறந்த. முழுமையாக அறிவதற்கு அசாத்தியமான சிறந்தவனான ஸ்ரீஹரி.

**282. ஷுப**
மனதில் மூருதி. நாக்கில் ஹரிநாம. யாருக்கு வருவதோ அவர்கள் அனைவருக்கும் ஷுபப்ரதனான ஸ்ரீஹரி.

**283. ஸுககர** - நாம – 156 ஸுக்யகர பார்க்கவும்.

**284. ஸுகம**
தான் அமர்ந்த இடத்திலேயே எங்கு செல்ல வேண்டுமோ அங்கு செல்ல முடிபவனாக இருப்பதால் ஸுகமனான ஸ்ரீஹரி.

**285. ஸூக்ஷ்ம**
ஸூக்ஷ்ம ரூபத்தினால் அனைத்து ஜீவாத்மரின் சரீரத்தில் வசிப்பவனான ஸ்ரீஹரி.

**286. ஸுதுர்கமாலய** - நாம 633 ஜலதிபுரபதெ பார்க்கவும்

**287. விஜிதரோஷ**
ரோஷ என்றால் – கோபம் முதலான தோஷங்களை வென்றவன். ப்ருகு முனிகள் தன் இதயத்தில் உதைத்தபோது, கோபம் கொள்ளாமல் அவரின் பாத பூஜை செய்து, உபசரித்தவனான ஸ்ரீஹரி.

**க4டஸ்ரவண கா4தக லகி4மயக்**
**சடுலகாத்ராகீ4ஜன ஹரண**
**படு ரகு4த்3வய பிஷிதபோ4ஜக கோ4கக2த்3யோத |**
**கடி2ணௌகே4ண்டமான க2ள ஸங்**
**கட நிவாரக கோ4ரரோத4கர**
**நடகாகௌ4க4 விதா3ர க4ண்டாசாப தீ3ர்க்க4 நமோ || 20**
**(மேலுள்ள இந்த நுடி – கை4, க4: - அக்ஷரமாலை இருக்கிறது)**
**288. கடஸ்ரவண காதக**
கட – பானை. ஸ்ரவண – காது. கடஸ்ரவண – கும்பகர்ண. கும்பகர்ணனை போரில் கொன்றவனான ஸ்ரீராமாவதாரியான ஸ்ரீஹரி.

**289. லகிமயுக்**
அணிமாதி அஷ்டைஸ்வர்யங்களைக் கொண்டவனான ஸ்ரீஹரி.

**290. சடுலகாத்ர** - சடுல – அழகான. காத்ர – சரீரம்.

**291. அகீஜனஹரணபடு**
அக – பாப. அகீஜன – மிகுந்த பாவம் உள்ள மக்கள். மிகுந்த பாவம் கொண்ட மக்களான – சிசுபால, தந்தவக்ர, சாணூர, கம்ஸ முதலான துஷ்ட மக்களை அழிப்பதில் வல்லவனான ஸ்ரீஹரி.

**292. ரகுத்வய** – (மூலத்தில் ரகுத்வ)

ரகுவம்சத்தில் பிறந்தவனான தசரதனின் புத்ரனாகவும், சேஷாவதாரியான லக்ஷ்மணனின் அண்ணனாகவும் அவதரித்த ராமாவதாரியான ஸ்ரீஹரி.

**293. பிஷிதபோஜக க்யோககத்யோத**

பிஷித + போஜக + க்யோக + கத்யோத. மாமிசம் + தின்பவர்கள் + ஆந்தை + சூரியன். மாமிசம் தின்பவர்களான அசுரர்களுக்கு, ஆந்தைகளுக்கு சூரியன் இருப்பதைப் போல. அதாவது, சூரிய உதயம் ஆனபிறகு, ஆந்தைகள் தம் கண்பார்வையை இழந்து, கூட்டில் இருப்பதைப் போல, அசுரர்களை ஓட்டுபவனான ஸ்ரீஹரி.

**294. கடிணாகேண்டமான**

கடிண + அகா + இண்டமான. கடும் + பாவ + துரபிமானி.

**295. களஸங்கட நிவாரக**

கடுபாபியும் மஹாதுரபிமானியும் ஆன துரியோதனால் பாண்டவர்களுக்கு வந்த சங்கடத்தை பரிகரித்தவனான கிருஷ்ணாவதாரியான ஸ்ரீஹரி.

**296 கோரரோதகர.**

ரோதகர – தடை செய். துஷ்டரின் கோர செயல்களை தடை செய்பவனான ஸ்ரீஹரி.

**297. நடகாகௌக விதார**

நடக + அக + ஔக துஷ்டர்கள் – தம் பாவ செயல்களாலேயே கஷ்டப்படுத்திய சமுதாயத்தை அருளிய ராமாவதாரியான ஸ்ரீஹரி.

**கண்டாசாபதீப்த**

**298. கண்டாதீப்த. & 299. சாப தீப்த**

கண்டாமணி முதலான மங்கலகரமான வாத்யங்களாலும், தனுஸ் முதலான ஷஸ்திரங்களாலும் ஒளிபொருந்தியவனான ஸ்ரீஹரி.

**சக்ஷுஷாலய சாருக³ண ஸ்யத்**
**குக்ஷே சீரத்³வயா சுதேதர**
**ரக்ஷ தூடா³சேஷ்ட சைத்³யஹராத்³ய சோராரே**

**ரிக்ஷ ஜாதா வர சௌராகிதி**
**லக்ஷ ப்ரதிபாத்[4]யக்ஷ சந்த[3]ன**
**வ்ருக்ஷவன ஸ்ருக்[3]த[4]ர ருச:ஸ்வனப்ரிய புருஷ நமோ || 21**
**(மேலுள்ள இந்த நுடி – சி – அக்ஷரமாலை இருக்கிறது)**

**300. சக்ஷுஷாலய**
சக்ஷுஸ் – கண். ஆலய = வீடு. வலது கண்ணில் பகவந்தன் இருந்து ஒளிர்கிறான். ஆகையால், கண்ணே வீடாக உள்ளவனான ‘விஷ்வ’ ரூபி பகவந்தனான ஸ்ரீஹரி.

1. சக்ஷுஸ் – நாமகனாகி சக்ஷு இந்திரியத்தில் உத்கீத ப்ரதிபாத்ய ‘நாராயண’ன் இருக்கிறான். (சாந்தோக்ய உபநிஷத் 11-68).

2. சக்ஷுரிந்திரியஸ்த வாயு – சரஸ்வதியில் விஷ்ணு இருக்கிறான் (அந்த சரஸ்வதி – பிராணரும் விஷ்ணுவையும் ரிக்வேத – ஸாமவேதங்களால் துதிக்கின்றனர். அந்த விஷ்ணு பாவத்தை போக்குபவன் ஆகையால், மற்றும் சிறந்தவனும் ஆகையால், ‘உத்’ எனப்படுகிறான். என்று சத்தத்வத்தில் இருக்கிறது). சூரியனில் இருக்கும் மற்றும் கண்ணில் இருக்கும் அந்த விஷ்ணு நீரினை இறைக்கும் நாளத்தில் இருக்கும். அதாவது, வாடாதிருக்கும் கண் மை தடவிய கண்களைப் போல இருக்கிறான். (சாந்தோக்ய உபநிஷத்).

**301. சாருகணஸ்ருத்குக்ஷீ**
தன் வயிற்றில் உத்தம கணங்களான, பிரம்ம, ருத்ராதிகளைக் கொண்டு அனைத்து ஸ்ருஷ்டியையே வசிக்க வைத்துக் கொண்டவனான ஸ்ரீஹரி.

**302. சீரத்வய**
நார் துணிகளை உடுத்தி வனவாசத்திற்குச் சென்ற ராமவதாரியான ஸ்ரீஹரி.

**303. அசுதேதரரக்ஷ**
அ + சுத + தர + ரக்ஷ. இல்லாத + ச்யுதி + ஸ்ரேஷ்ட + காப்பாற்று. தம் ஆனந்தாதிகளுக்கு ச்யுதி இல்லாத

சிறந்தவர்களான பிரம்ம வாயு ஆகியோர்களை அருள்பவனான ஸ்ரீஹரி.

**304. சூடாசேஷ்ட**

தன் ஷிகை – குடுமி – கட்டிக்கொண்டு அதற்கு மயிற்தோகை மற்றும் புஷ்பங்களை அலங்காரம் செய்துகொண்டவனான பாலகிருஷ்ணனான ஸ்ரீஹரி.

**305. சைத்யஹர**

சேதி அரஸனான ஷிஷுபாலனை சம்ஹரித்தவனான ஸ்ரீஹரி. நாம – தூஷணாந்தக – பார்க்கவும்.

**306. ஆத்யசோராரெ**

ஆத்யசோர என்றால் – மது கைடபர். அவர்களின் வைரியான ஸ்ரீஹரி.

**307. ரிக்ஷஜாதா**

சஜ்ஜனர்களின் ரக்ஷணைக்காக அவதரித்த ஸ்ரீஹரி.

**308. வரசௌர**

நாராயணோ நாம நர: ப்ருதிவ்யாய ப்ரஸித்த சோர: |பிரஸித்த – கிருஷ்ணாம்ருத மஹார்ணவ. அனேக பிறவிகளின் பாவங்களையும் தன் ஸ்மரணை மாத்திரத்தினாலேயே போக்கி; சுட்டுப் பொசுக்குபவனான ஸ்ரீஹரி.

**309. அஷிதிலக்ஷ ப்ரதிமாத்யக்ஷ**

80 லட்ச ஜீவராசிகளில் நின்று வியாபாரம் செய்பவனான ஸ்ரீஹரி. அத்யக்ஷஸ்ச அனுமந்தஸ்ச பர்த்தா போக்தா மஹேஷ்வர: || --- கீதை

**310. சந்தன வ்ருக்ஷவனஸ்ருக்தர**

சந்தன வ்ருக்ஷத்தைப் போன்ற ஸுகந்த வ்ருக்ஷங்களின் வனமாலையை தரித்தவனான ஸ்ரீகிருஷ்ணாவதாரியான ஸ்ரீஹரி. ஆபாதம்பிபி மாலா – வனமாலேதி சோச்யதே |

**311. ருச:ஸ்வதப்ரிய புருஷ**

ருச: வேத. வேதப்ரியனான ஹயக்ரீவரூபி – ஸ்ரீஹரி.

**ச$^{4}$த்ரசா$^{4}$ரோச்சி ப ஜ**
**க$^{3}$த் ஷிக்ஷக முர ந்ருபசே$^{4}$தி$^{3}$னி**
**ர்வசை$^{4}$க சர நமோத்$^{3}$ரேக மாந்த$^{3}$ஹரா |**
**ஷத்ருபி$^{4}$செள:ர்ய பூ$^{4}$ஷித**
**ஸத்ரபூ$^{4}$க் ச$^{4}$ந்தோ$^{3}$மயாத்மக**
**புத்ர பௌத்ர ப்ரபௌத்ர ஷோபி$^{4}$த ஸ்வச்ச$^{4}$வர்ண நமோ || 22**
**(மேலுள்ள இந்த நுடி – சே$^{4}$, சூ$^{4}$, சோ$^{4}$, ச$^{4}$: - அக்ஷரமாலை இருக்கிறது)**

**312. சத்ரசாலோச்சிப ஜகத்விக்ஷக**

அரசினை விரும்பிய கம்சன், ஜராசந்த முதலான துஷ்ட உலகினை திருத்திய கிருஷ்ணாவதாரியான ஸ்ரீஹரி.

**313. முரந்ருபசேதி.**

முர+ ந்ருப+ சேதி. ஸேனாபதி முரனின் அரசனான நரகாசுரனை சம்ஹரித்தவனான ஸ்ரீஹரி. நாமம் 38 ஷக்ர அர்ச்சித – பதாப்ஜ, பார்க்கவும்.

**314. நிர்வசைகசர**

யாருடைய பயமும் இல்லாமல் நிர்பீதியாக சஞ்சரிப்பவனான ஸ்ரீஹரி

**315. உபேந்திரஹரா & 316. மாந்த்ய ஹரா**

மேன்மை மற்றும் முட்டாள்தனம் ஆகிய தோஷங்களை பரிகரிப்பவனான ஸ்ரீஹரி.

**317. ஷத்ரிபிச்சேர்ய பூஷித**

ஷத்ருபித் + ஷௌர்ய + பூஷித. எதிரிகளான தைத்ய தானவர்களுடன் போரிடும்போது அற்புத வீரத்தைக் கொண்டவனான ஸ்ரீஹரி.

**318. ஸத்ரபுக்**
அக்னியில் போட்ட ஹவிஸ்ஸினை முக்கியமான எடுத்துக் கொள்பவன் – ஸ்ரீஹரியே. ஆகையால், ஸத்ரபுக் என்று அழைக்கப்படுபவனான ஸ்ரீஹரி.

**319. சந்தோமயாத்மக**
சந்தோமய – வேதங்களால் புகழப்பட்டு சந்தோமயாத்மக என்று அழைக்கப்படுபவனான ஸ்ரீஹரி.

**320. புத்ரஷோபித** - புத்ர = மகன்.

**321. பௌத்ரஷோபித** - பௌத்ர = பேரன்

**322. ப்ரபௌத்ர ஷோபித**
ப்ரபௌத்ர – கொள்ளுப் பேரன். சதுர்முக பிரம்மனை மகனாகவும், ருத்ரதேவரை பேரனாகவும், கணபதி, ஷண்முகர்களை கொள்ளுப் பேரனாகவும் பெற்று அற்புத ஆற்றல் கொண்டவனான ஸ்ரீஹரி.

**323. ஸ்வச்சவர்ண**
பகவந்தன் சத்குணங்களைக் கொடுத்து அருள்வதாக நினைத்தபோது, சுக்ல ரூபம் உள்ள ஹயக்ரீவாதி ரூபத்தை தரித்த ஸ்ரீஹரி.

**ஜயத1ரானன ஜாட்3யஹர ஜித**
**ப4யநிசய ஜீவௌக4ஹர க்ஷய**
**ஜீர்யஜாஸுர ஜனகனுத ஸுரஜேஷ்ட2 ஜைனதி3ஹன் |**
**லய ஜலாஸ்ரய ஜோதிர் மயதனோ**
**வ்யய வ்ரு ஔகஸ வந்த்3ய ஜம்பு3னி**
**லய குவலயாயுஜ ஆனந்த3 ப3லக3 நமோ || 23**
**(மேலுள்ள இந்த நுடி – ஜு ஜூ ஜ: – அக்ஷரமாலை இருக்கிறது)**

**324. ஜயதரானன**
ஜயதர+ ஆனன = முகம். யாரின் முகத்தைப் பார்த்தால் வெற்றி நிச்சயமோ அத்தகைய ஸ்ரீஹரி.

யத்ர யோகேஷ்வர: கிருஷ்ண: யத்ர பார்த்தோ தனுர்தர: |

தத்ர ஸ்ரீர்விஜயோ பூதி: த்ருவா நீதிர் மதிர்மம ||
(கீதை 18-28).

**325. ஜாட்யஹர** - நாம 316 மாந்த்யஹரா பார்க்கவும்.

**326. ஜதிபயநிசய**
பய – பயம். நிசய – சமூகம். ஜித – வென்ற. பயங்களின் சமூகத்தையே வென்றவனான ஸ்ரீஹரி.

**327. ஜீவௌகஹர**- ஜீவ+ ஔக – சமுதாய + ஹர – நாசம் செய்யும்.

**328. க்ஷயஜீர்யஜாஸுர ஜனக**
க்ஷயஜீர்யஜாஸுர + ஜனகனுத. க்ஷயாதிகளுக்கு நியாமகனான, ஜ்வர என்னும் அசுரனை ஜீர்ணிக்கும் வைஷ்ணவ – ஜ்வர – என்பவனை நியமனம் செய்தவனான ஸ்ரீகிருஷ்ணாவதாரியான ஸ்ரீஹரி. (ஹரிவம்ச மற்றும் தாத்பர்ய நிர்ணயம்).

**329. ஸுரஜேஷ்ட**
மஹிதாஸரூபி பகவந்தன் லட்சுமிதேவியிடம் இவ்வாறு கூறினான். தேவதைகளில் நான் வியாபித்திருக்கிறேன். அவர்கள் அனைவரும் என்னை சார்ந்திருக்கிறார்கள். அவர்கள் அனைவரும் என் ஆணைக்கேற்பவே தத்தம் பதவிகளை பெற்று, என்னாலேயே தோஷங்களையும் பெறுகிறார்களே தவிர, அவர்களின் பலம், நடவடிக்கைகள், ஞானாதிகள் மற்றும் அவரின் இருப்பு அனைத்தும் என் அதீனமாகியே இருக்கிறது. (ஐதரேய உபநிஷத் 1-6-1). அனைத்து தேவதைகளும் பகவந்தனை சார்ந்திருக்கிறார்கள். யாரொருவரும் அவனை மீறி நடப்பதில்லை. (காடோபநிஷத் 2-1-9). இவ்வாறு சுரர் அனைவருக்கும் தலைவனானவனான ஸ்ரீஹரி.

**330. ஜைனதிஹன்**
ஜினனெம்ப தனுஜ ஸஜ்ஜனகர்மவனு மாடெ
ஜனிஸி அவரல்லி துர்புத்தி | துர்புத்தி கவிஸித
வினுத ஸ்ரீபுத்த தயவாகோ ||
(ஸ்ரீஜகன்னாததாசரின் தத்வ சுவ்வாலி தசாவதார ஸ்துதி #183)

புத்தாவதாரத்தின் கதை சந்தர்ப்பம் மற்றும் மகிமைகளை ஸ்ரீமதானந்ததீர்த்த பகவத்பாதர் மகாபாரத தாத்பர்ய நிர்ணயத்தில் இவ்வாறு கூறியிருக்கிறார்.

த்ரிபுராசுரர்களின் முக்கியமான தைத்யன் ஷுத்தோதனன் என்னும் பெயரால் பூமியில் பிறக்கிறான். அவனுக்கு 'ஜின' என்று பெயர். கயா க்ஷேத்திரத்தில் (கயா நாமகளான மனைவியில்) இவனுக்கு ஒரு குழந்தை பிறந்தது. அதனை தூர விலக்கி, ஸ்ரீவிஷ்ணு குழந்தை ரூபத்தில் அங்கு படுத்தார். இதனை அறியாத ஜினாதிகள் அது தம் குழந்தையே என்று நினைத்து, ஜாதகர்ம முதலான வேதோக்த சம்ஸ்காரங்களை செய்யத் துவங்கினர். அதனைக் கண்ட அந்த குழந்தைரூப விஷ்ணு கேலியுடன் சிரித்தான். இதனால் வியப்படைந்த ஜினாதி சொந்தங்கள், ஏன் சிரிக்கிறாய் என்று குழந்தையைக் கேட்க, தான் புத்தன் என்று அக்குழந்தை சொல்லிக் கொண்டது.

நித்யஞான ஸ்வரூபனான விஷ்ணுவிற்கு அது காரணப்பெயராகவே அமைந்தது. மற்றும் புத்த தரிசனத்தை உபதேசம் செய்தது. அவர்கள் தன் உபதேசத்தில் நம்பிக்கை கொண்டிருப்பதைக் கண்டு, புத்தன் தன் விருப்பத்திற்கேற்ப தன் மேல் ருத்ராதி தேவதைகள் ப்ரயோகித்த ஷூலாதி ஆயுதங்களையும், தானே ஆகாய மார்க்கத்தில் கொண்டு வந்த சக்ராயுதத்தை வசப்படுத்திக் கொண்டு, அந்த சக்கரத்தை ஆசனமாக ஆக்கிக்கொண்டு, குழந்தையாகவே அமர்ந்தான்.

ஜினாதிகளுக்கு புத்தனில் நம்பிக்கை பிறந்து, மகேஸ்வர – விஷ்ணுகளைவிட அதிகன் என்று அறிந்து, அவனின் உபதேசத்தை அங்கீகரித்து, வேதோக்த கர்மங்களை புறக்கணித்து, வேதாதிகளில் அப்ராமாண்ய புத்தியை அடைந்தனர். தன் அந்த உபதேச வாக்கியங்களின் அர்த்தத்தை இவ்வாறு புரிந்து கொண்டனர் என்று தேவதைகளுக்கு விவரித்து, அவர்களில் சந்தேகங்கள் பிறக்குமாறு அருளினார். இவ்வாறு ஜினாதிகளை வேத கர்மங்களில் அவநம்பிக்கை உருவாகுமாறு செய்து, அவர்கள் மூலமாக அந்த வழியை புறக்கணிக்குமாறு செய்தவனான ஸ்ரீஹரி.

**331. லயஜலாஸ்ரய**

லய-ஜலத்தில் ஆல இலையின் மேல் படுத்திருப்பவனான ஸ்ரீஹரி. நாம 147 ஸ்ரீவடபர்ணதல்ப; மற்றும் 197 அபுஷயன - பார்க்கவும்.

**332 ஜ்யோதிர்மய & 333 தனோவ்யய**

மன்மத - எனப்படும் பகவந்தனின் ஸ்வரூபாத்மகமான சௌந்தர்ய மிகவும் அற்புதமானது. அவனின் மூல ரூபத்தில் மட்டுமல்லாமல், ஒவ்வொரு அவதாரத்திலும் இருக்கிறது. ராம, கிருஷ்ண, மோகினி முதலான அவதாரங்க்ளில் அதனை வெளிப்படுத்தியவனான ஸ்ரீஹரி. (ஸ்ரீமத் பாகவத தாத்பர்ய நிர்ணய 3-17-28 & 3-29-29).

**334 வ்ருஜௌகஸ வந்த்ய**

பகவந்தன் கிருஷ்ணாவதாரத்தின் சமயத்தில் ரைவத பர்வதத்தில் ருக்மிணி சமேதனாக திவ்ய ஆசனத்தில் அமர்ந்து அனைத்து அரசர்களாலும் கௌரவிக்கப்பட்டான். (மகாபாரத தாத்பர்ய நிர்ணய 20-63-64). இவ்வாறு குடும்பத்துடன் வணங்கப்பட்டவனான கிருஷ்ணாவதாரத்தின் ஸ்ரீஹரி.

**335 ஜம்பு நிலய**

மேரு பர்வதத்தில் இருந்த ஜம்புவனத்தில் ஜம்புபழத்தின் சாறினால் ஓடும் ஜம்பு நதியின் ஸ்வர்க்கத்திற்கு ஈடான இடத்தில் வசிப்பவனான ஸ்ரீஹரி.

**336 குவலயாயுஜ**

குவலய + ஆயு + ஜ. குவலயாபீட என்னும் கம்சனின் மதயானையின் ஆயுளையே பறித்து (கொன்று) அதனை வென்றவனான கிருஷ்ணாவதாரியான ஸ்ரீஹரி.

**337. ஆனந்தபலக**

எப்போதும் ஆனந்தாதிஷயத்திலேயே இருந்து, அதுவே தன் பலமாக உள்ளவனான ஸ்ரீஹரி.

**ஜூ$^4$ட$^3$திசர ஜுஞ்சா$^4$மருச்சர**
**உடு$^3$பசர ஜீ$^4$ல்லிக வனேசர**
**ஔஷதீ$^4$சர ஜூ$^4$ரிகஸூர ஜு$^4$ண்டாவலய ஜூ$^4$ணிசர ।**

**ஒட$^{3}$னெ ஜு$^{4}$ங்கரிஸூதலி ஜை$^{4}$டி$^{3}$யு**
**த$^{3}$ட$^{3}$தி$^{3}$ ஜொ$^{4}$ண்டி$^{3}$யோள்சரிஸி ஜௌ$^{4}$ங்கரி**
**ஸ்யொட$^{3}$லினொளு ஜு$^{4}$ங்காரபூர்ண ஜு$^{4}$ஷபதியே நமோ || 24**
**(மேலுள்ள இந்த நுடி – ஜு – அக்ஷரமாலை இருக்கிறது)**

**338. ஜடதிசர**
தத்தாவதோ அன்யானத்தேதி – என்னும் ஈஷாவாஸ்ய உபநிஷத்தின்படி வேகமாக சஞ்சரிப்பவனான ஸ்ரீஹரி.

**339 ஜஞ்சாமருச்சர**
ஜம்+ஜா+மருத்+சர. மழையுடன் காற்றிலும் இருந்து சஞ்சரிப்பவனான ஸ்ரீஹரி.

**340. உடுபசர**
உடு என்றால் நட்சத்திரங்கள். அவற்றை ப என்றால் காப்பவனான சந்திரன். அவனுடன் சர என்றால் சஞ்சரிப்பவன். அதாவது, சந்த்ராந்தர்கதனான ஸ்ரீஹரி.

**341 ஜல்லிகவனசர**
ஜல்லிக வன என்றால் பற்பல பூச்சிகளால் சூழப்பட்ட வனம் என்று அர்த்தம். அத்தகைய வனத்திலும் சஞ்சரிப்பவனான ஸ்ரீஹரி.

**342 ஔஷதீசர**
ஔஷதிகளிலும் (மருந்துகளிலும்) இருந்து, நோய்களை பரிகரிப்பவனான ஸ்ரீஹரி.

**343 ஜேரிகஸுர ஜண்டாவலய**
ஜேரிகனாகையால் ஆராதனை செய்யும் சுர குழுவினருக்கு பூஷணமாக இருப்பவனான ஸ்ரீஹரி.

**344 ஜணிசர**
**345 ஒடனெ ஜேங்கரிஸூதலி ஜைடியதடதி ஜொண்டியோள்சரிஸி**
ஒடனெ – வேகமாக ஜேங்கரிஸூதலி – சத்தம் செய்தவாறு இருக்கும். ஜைடியதடதி – நதிக்கரையில். ஜொண்டியோள் – தேனியைப் போல. சரிஸி – சஞ்சரித்து. வேகமாக சத்தம்

செய்துகொண்டிருக்கும் நதிக்கரையில், தேனியைப் போல சஞ்சரிப்பவனான கிருஷ்ணாவதாரியான ஸ்ரீஹரி.

**346 ஜங்கரிஸ்யோடலினொளு**
ஜங்கரிஸோ+ஒடலினொளு. வேதகோஷங்களால் த்வனி எழுப்பும் பிராமணர்களின் வயிற்றில் வேதவியாசராக பிறந்தவரான ஸ்ரீஹரி.

**347 ஜங்கார பூர்ண** - ஜங்காரவாச்ய பரிபூர்ணனான ஸ்ரீஹரி.

**348 ஜுஷபதி** - ஜுஷ – மீன். மத்ஸ்யாவதாரியான ஸ்ரீஹரி.

**படலஹைம கடாஹப$^{4}$ஞ்சக**
**நிடிலத்$^{3}$ருக் டீகார்த்த$^{4}$ ஸுப்ரிய**
**கடுமதிக்$^{4}$ன ப$^{4}$வேட்$^{4}$ய டங்கான்வித கராப்$^{3}$ஜேஷா |**
**ஜட$^{2}$ர ந்ருப ஸுகுடா$^{2}$ர த$^{4}$ரஸத்**
**கடி$^{2}$ணகர ஸுகடோ$^{2}$ர யோத$^{4}$ன**
**மட$^{2}$விகார ஷரௌங்க$^{4}$ஸம்ஹர ந்ருஹரேப்$^{4}$ருகு$^{3}$ஜ நமோ || 25**
**(மேலுள்ள இந்த நுடி – $^{1}$. டோ$^{1}$, டி$^{1}$, டை$^{1}$, டோ$^{1}$, டீ$^{1}$, ட$^{1}$: மற்றும் $^{2}$. டீ$^{2}$, டு$^{2}$, டோ$^{2}$, டெ$^{2}$, டை$^{3}$, டே$^{3}$, டம்$^{3}$, ட$^{3}$: - அக்ஷரமாலை இருக்கிறது)**

**349 படலயைம**
தங்கத்தைப் போல கண்களின் பொறை உடைய ஸ்ரீஹரி

**350 கடாஹபஞ்சக**
நாமம் 1. 70 த்ரிவிக்ரம 2. விஸ்போடகசாஹ 3. பாஹ்யாம்புப்ரவாஹக – பார்க்கவும். படலஹையகடாஹபஞ்சக – பிரம்மாண்டத்தின் ஓட்டினை உடைத்தவனான த்ரிவிக்ரம அவதாரியான ஸ்ரீஹரி.

**351 நிடிலத்ருக்**
நரசிம்ம அவதாரத்தில் அக்னியே மூன்றாவது கண்ணாக உள்ளவனான ஸ்ரீஹரி. நரசிம்ம அவதாரத்தில் பகவந்தனின் க்ரோதத்தினால் பயங்கரமான வலது கண்ணின் முனையிலிருந்து வெளிவந்த அக்னிகணத்தில் பட்டு, சதுர்முக ருத்ராதிகள் பஸ்மம் ஆவார்கள். என்று நகஸ்துதியில் சொல்லியிருக்கிறார்கள். (வாயுஸ்துதியின் முதல் இரு நக ஸ்துதிகள்).

**352 டீகார்த்தஸுப்ரிய**

பிரம்மசூத்ரங்களுக்கு பாஷ்ய, டீகை, இயற்றிய ஸ்ரீமதானந்த தீர்த்தருக்க்கு ப்ரியமான வேதவியாச ரூபி ஸ்ரீஹரி.

**353 கடுமதிக்ன**

தமஸ் (அக்ஞான), மோக (விபரீதஞான), மஹாமோஹ (அதில் தலைமை), தாமஸ்ர (மித்யாஞான), அந்தம்தாமிஸ்ர (யதார்த்த ஞானிகளுக்கு; அதாவது, சுக்ஞானிகளில் இறக்கும் வரையில் இருக்கும் த்வேஷ); என அவித்யை ஐந்து விதங்களாக இருக்கின்றன. (பஞ்சபர்வ உள்ளது அவித்யை). இவற்றிலிருந்து பிறந்த – ஷப்த, ஸ்பர்ஷ, ரூப, ரஸ, கந்த – என்னும் தன்மாத்ரங்களுக்கு அபிமானிகளான நாக, கூர்ம, க்ருகல, தேவதத்த, தனஞ்சய என்னும் உபப்ராணர்கள் இந்த பஞ்சவித அவித்யைகளின் ப்ரேரகர்களாக இருக்கின்றனர். இவர்களில் தமோ குணாபிமானியான துர்கா ரூபமான லட்சுமிதேவியும், அவளில் முறையே, க்ருத்தோல்க, மஹோல்க, வீரோல்க, த்யுல்க, ஸஹஸ்ரோல்க என்னும் பரமாத்மனின் ரூபங்களும் இருந்து, முக்தியோக்ய ஜீவர்களுக்கு அவித்யைகளை போக்கி, சுக்ஞானத்தைக் கொடுப்பவனான ஸ்ரீஹரி.

**354 பவேட்ய**

பவ+ ஈட்ய (ருத்ர+வணங்கப்படும்). ருத்ரதேவரால் வணங்கப்படுபவனான ஸ்ரீஹரி

**355 டங்கான்வித கராப்ஜேஷா**

டங்கெ என்னும் ஆயுதத்தை பிடித்த கர கமலங்களைக் கொண்டவன் என்றால், தலைவனான ஸ்ரீஹரி.

**356 ஜடரன்ருப**

கார்த்தவீர்யார்ஜுன என்னும் அசுரன், அக்னிஹோத்ரி என்னும் பசுவை எடுத்துப் போக,

**357 ஸுகுடாரதர**

ஒரு நல்ல கோடலியை எடுத்துக் கொண்டு சென்றான்.

**358 ஸத்கடிணகர** – நல்ல வலிமையான கைகளைக் கொண்ட அந்த

**359 ஸுகடோரயோதன** –
நல்ல கடுமையாக போர் புரியத்தக்க அந்த கார்த்தவீர்யார்ஜுனனின்

**360 மடவிகார கரங்க்ரி** – பற்பல பாணங்களை அழித்து

**361 ஸம்ஹர** – அவனைக் கொன்றவனான

**362 ந்ருஹரே** – நரசிம்மாபின்னனான
**363 ப்ருகுஜ** – ரேணுகாம்பா மற்றும் ப்ருகு வம்சத்தின் ஜமதக்னி முனியில் அவதரித்த பரசுராமாவதாரியான ஸ்ரீஹரி

**குண்ட$^3$ லீஷ ஷ$^4$டா$^3$ஸ்ய ஸன்னுத**
**பண்டி$^3$தார்ச்சித பண்டு$^3$ராம்ப$^3$க**
**மண்ட$^3$லேஷ பி$^3$டௌ$^3$ஜனுத ந்ருவிட$^3$ம்ப$^3$ன சரித்ர |**
**பண்ட$^4$ராபுர ராஜ விட$^2$லா**
**க$^2$ண்ட$^3$மதி பாக$^2$ண்ட$^3$ தூ$^3$ஷ$^2$க**
**ஷண்டா$^3$மரக ப்ரபு$^4$க்$^4$ன முனி புண்ட$^3$ரீகவரத$^3$ நமோ ||26**
**(மேலுள்ள இந்த நுடி – $^1$. டீ$^3$, டூ$^3$, டெ$^3$, டை$^3$, டோ$^3$, ட$^3$: மற்றும் $^2$. ட$^4$ வைத் தவிர அனைத்து அக்ஷரமாலை இருக்கிறது)**

**364 குண்டலீக**
குண்டலீகோடபா: சக்ஷுஸ்ரவா: – அமரகோஷ. குண்டலி என்றால் சேஷ. அந்த சேஷதேவருக்கு தலைவனான ஸ்ரீஹரி.

**365 ஷடாஸ்யஸன்னுத**
ஷட்+ ஆஸ்ய+ ஸத்+ நுத. ஆறு+ முக+ நன்றாக+ வணங்கப்படும். ஷண்முகனால் நன்றாக வணங்கப்படுபவனான ஸ்ரீஹரி. (வாயு புராணம்).

**366 பண்டிதார்ச்சித**
பண்டிதர்கள் அனைவராலும் பூஜிக்கப்படுபவனான ஸ்ரீஹரி

**367 பண்டுராம்பக**

பண்டுர - வெண்மையான, தூய்மையான; அம்பக - கண். அப்ராக்ருத த்ருஷ்டி கொண்டவனான ஶ்ரீஹரி.

**368 மண்டலீஷ. & 369 பிடௌஜனுத**

அரசனைப் போல இருக்கும், பிடேஜ என்றால் இந்திரனால் வணங்கப்படுபவனான ஶ்ரீஹரி.

**370 ந்ருவிடம்பனசரித்ர**

ராமாவதாரத்தில் சீதையை இழந்து, காட்டில் 'ஹா-ஸீதே' என்று மரம் செடி கொடிகளிடம் புலம்பி, துக்கப்பட்டு, திரும்ப அவளைத் தேடி காட்டில் சென்றான். ஶ்ரீனிவாச அவதாரத்தில் பத்மாவதியைக் கண்டு மோகம் கொண்டு, தூக்கம் ஆகாரங்களை துறந்து, அந்த பத்மாவதியைக் கொண்டு வந்து திருமணம் செய்து வை என்று பகுளாதேவியிடம் வேண்டிக் கொள்கிறான். இதே முதலான சந்தர்ப்பங்கள், உலக மக்களை மயக்குவதற்காக செய்தவனான ஶ்ரீஹரி.

**371. பண்டராபுரராஜ விட்டலா**

பக்த புண்டலீகனுக்கு தரிசனம் அளித்து அவனின் கோரிக்கைக்கேற்ப, பண்டரிபுரத்தில் வசிப்பவனான விட்டலரூபி ஶ்ரீஹரி.

**372 கண்டமதி பாகண்ட தூஷக:**

அஞ்ஞானம் மற்றும் ஆத்ம பரமாத்மனில் அபேதத்தை சொல்லும் பாகண்டர்களை தூஷித்து அவர்களை அந்தம்தமஸ்ஸிற்கு அனுப்புபவரான ஶ்ரீஹரி.

**373 ஷண்டாமரக ப்ரபுக்ன**

ஹிரண்யகசிபுவிற்கு நான்கு பேர் ஆண் மக்கள். ப்ரஹ்லாத, சஹ்லாத, அனுல்ஹாத மற்றும் ல்ஹாத. சுகாசார்யர் தலைநகரில் இல்லாதபோது அவரின் மக்களான ஷண்ட மற்றும் மர்க இருவரும் ராஜகுருவின் செயல்களை செய்து வந்தனர். ஹிரண்யகசிபு தன் மக்களை அவர்களிடம் பாடம் படிப்பதற்கு அனுப்பினான். இத்தகைய ஷண்டமர்கரின் தலைவனான ஹிரண்யகசிபுவை கொன்றவனான ஶ்ரீஹரி.

**374 முனிபுண்டரீக வரத**

நாமம் 371 பண்டராபுரராஜவிட்டலா பார்க்கவும்.

**ப்ரணதப்ரிய ப்ரணாயப்ரிய விப்ர**
**அணுமஹத் ரமாதே³வி ப்ராணதே³வரு கணேஷப்ரிய**
**க்ஷண க்ஷணைக ஸுவ்யக்த தா⁴ரண**
**ந்ருண க³ணௌத்வாடணா ரணௌகா⁴ங்**
**க³ண பயோச்சாசண கு³ணாங்க¹ ஷரண்ய ஸுக²த³ நமோ || 27**
**(மேலுள்ள இந்த நுடி – ணூ, ண: – அக்ஷரமாலை இருக்கிறது)**

**375 ப்ரணதப்ரிய**

தன்னை வணங்குபவர்களிடம் மிகவும் அன்பு வைத்திருப்பவனான ஸ்ரீஹரி

**376 பரணாமப்ரிய**

வெங்கடேஷஸ்வாமி யானையின் மேல் ஏறிச் சென்றபோது, யானை தோற்று, தன் தும்பிக்கையால் அவரை வணங்கியபோது, அந்த பாணத்தை விடாமல், யானையை அன்புடன் காத்தவனான ஸ்ரீஹரி.

**377 விப்ரப்ரணிதப்ரிய:**

ப்ரணித – இயற்றிய. அறிஞர்களால் இயற்றப்பட்ட கிரந்தங்கள் யாருக்கு மிகவும் பிடித்தமோ, அத்தகைய ஸ்ரீஹரி

**378 வாணீதவப்ரிய**

வாணி (சரஸ்வதி) வல்லபனான பிரம்மதேவனுக்கு மிகவும் பிடித்தவனான ஸ்ரீஹரி

**379 அணுமஹத் ரமாதேவி ப்ராணதேவரு**

அணு – பிரம்மாதி ஜீவர்களின் ஸ்வரூப அணுரூபமானது. ஆகையால், ஜீவன் அணுவானவன். ஆகையால், ரமாதேவியருக்கு அணுத்வ இருப்பதால், ஜீவாந்தர்கதத்வ ரமாதேவியரில் அணுவாக, ஸ்ரீரூபத்தினால் பிம்பனாக இருக்கிறான். ஆகையால், ஜீவாந்தர்கதத்வ என்பது, ரமா நாராயணனுக்கு மட்டுமே இருக்கிறது. பிரம்மாதி ஜீவருக்கு ஸ்வரூபத்தினால் அணு மஹத்துகள் இல்லை. இதற்கான ஆதாரம். முக்தஸ்யய

ஸ்வரூபேண ஹ்யணுவ்ருத்திர்ன யுஜ்யதே | நோ ஹானி: புனராவ்ருத்தி: துக்காஞான பயாதய:'. மஹத் – ஸ்வரூப தேகத்தைவிட பெரியதான ஸ்தூல தேகத்தில் பிரம்மாதி தேவதைகளுடன் இருக்கிறான். மற்றும் நவ-ஆவரண சகிதமாக பிரம்மாண்ட, அதற்கு அப்பால் ஸ்தூலத்வேன இருக்கும் ரமா, இந்த இரண்டில் அதன் உருவம் மஹத்ரூபத்தினால் இருக்கிறான். அணுமஹத்கள் என்பது ஜீவகோடி ப்ரவிஷ்டரில் இல்லை. ஈஷகோடி பிரவிஷ்டரில் மட்டுமே உள்ளன. அதாவது, ரமா நாராயணருக்கு மட்டுமே உள்ளது என்று பொருள்.

அணோரணீயான் மஹதோ மஹீயான் – என்று ஸ்ருதி சொல்கிறது. (ஸ்ரீஹரிகதாம்ருதசார 3-19). இத்தகைய ரமாதேவிக்கு பிராணதேவர்; அதாவது, வல்லபனான ஸ்ரீஹரி.

**380 கணேஷப்ரிய** ஸ்ரீகஜவதனனுக்கும் ப்ரியனான ஸ்ரீஹரி.

**381 க்ஷணக்ஷணைக ஸுவ்யக்த தாரணந்ருண்**

தாரண – சமாதியின் அங்கம். ஒவ்வொரு நொடியிலும் த்யானத்தில் ஈடுபடுபவர்களான யோகிகளின் தாரணத்தில்; அதாவது, சமாதியில் ஸுவ்யக்த; அதாவது, நன்றாக தெரிபவனான ஸ்ரீஹரி.

**382 கணோத்பாடண**

துஷ்ட கணங்களை உத்பாடண; அதாவது, அழிக்கக்கூடியவனான ஸ்ரீஹரி

**383 ரணௌகாங்கண பயோச்சாடண**

குரு மற்றும் மூத்தவர்களை, பிடித்த நண்பர்களை போரில் கொன்றால் மிகுந்த பாவம் வரும் என்று அர்ஜுனன் கூறினான். அப்போது அவனுக்கு வந்த பயத்தை கீதோபதேசத்தைக் கொடுத்து போக்கியவனான ஸ்ரீஹரி

**384 குணாங்க**

சத்வ, ரஜஸ், தம குணங்கள் தன்னிடமிருந்தே உண்டானதால் அவை பரமாத்மனுக்கு எதுவும் செய்வதில்லை. அவை அவனின்

அங்கிதத்திலேயே இருக்கின்றன. இவ்வாறு இந்த குணங்களின் மேல் அங்க; அதாவது, ஸ்வாம்ய உருவாக்குபவனான ஸ்ரீஹரி.

**385 ஷரண்ய**

கௌதம ரிஷிகளின் சாபத்தின் காரணமாக வேதங்களைப் பற்றிய அஞ்ஞானம் வந்தபோது சதுர்முக பிரம்ம, ருத்ர, இந்திர முதலான தேவதைகள் ஷரண்யம் – சர்வரக்ஷகனான நாராயணனைக் குறித்து சரணடைந்தனர். (பிரம்மசூத்ர பாஷ்ய – ஸ்ரீமன் மத்வாசார்யர்).

புத்தௌ ஜாதாயாமபி விஷ்ணுமேவ ஷரணமனிச்ச |
அஞ்ஞானம் ஞானினாம்சைவ முக்தானாம் ஷரணம் ஹரி: ||

ஞானம் பிறந்த பிறகு, விஷ்ணுவையே சரணடைவாயாக. அஞ்ஞானிகள், ஞானிகள், முக்தர்கள் இவர்கள் அனைவருக்கும் ஸ்ரீஹரியே ஷரண்யன்.

**386 ஸூகத**

நாமம் 1. 156 ஸௌக்யகர 2. 283 ஸுககர பார்க்கவும்.

**ஸத்யவ்ருத ஸத்வாத்ம காக$^{3}$மாட்$^{4}$ய**
**தத்வேஷ ஸூரரு திலமாத்ரார்பகேஷ்டத$^{3}$**
**மித்$^{2}$ய தூ$^{3}$ஷ$^{2}$க தீர்த்த$^{2}$ஸ்ரவ துர்யாத்மா தூர்ணப்ரிய |**
**நித்ய தேஜன தைத்திரிய ஸ்ருதி**
**ஸ்துத்ய தோயாயுன த்$^{4}$ருதௌஷ$^{2}$த$^{4}$**
**பத்$^{2}$யதாந்த்ரிக பரமசேத$^{1}$: பரமகால நமோ || 28**

**387 ஸத்யவ்ருத**

ஸத்யபரிபாலனையில் ஆதர்சமான ஸ்ரீராமாவதாரியான ஸ்ரீஹரி

**388 ஸத்பாத்மகாகமாட்ய**

ஸாத்விக புரணாதி வேத்யனான ஸ்ரீஹரி.

**389 தத்வேஷ ஸூரரு திலமாத்ரார்ப்பகேஷ்டத**

தத்வேஷரான தேவதைகளின் அல்ப பிரமாணத்தின் அர்ப்பணைக்கு மகிழ்பவனான ஸ்ரீஹரி.

**390 மித்யதூஷக**
அஹம் பிரம்மாஸ்மி என்னும் மித்யாவாதத்தை தூஷிப்பவனான ஸ்ரீஹரி

**391 தீர்த்தஸ்ரவ** - பவித்ரமான கீர்த்தி உள்ளவனான ஸ்ரீஹரி

**392 துர்யாத்மா**
பகவந்தன் அனைத்து பிராணிகளின் சரீரங்களில், விஷ்வ, தைஜஸ, ப்ராக்ஞ மற்றும் துர்ய என்னும் நான்கு ரூபங்களால் இருக்கிறான். பகவந்தன் ஜாக்ரத அவஸ்தையின் ப்ரேரகனாக விஷ்வ ரூபத்தினாலும், ஸ்வப்ன அவஸ்தையின் ப்ரேரகனாக தைஜஸ ரூபத்தினாலும், ஸுஷுப்த அவஸ்தையின் ப்ரேரகனாக ப்ராக்ஞ ரூபத்தினாலும், மோட்ச அவஸ்தையின் நியாமகனாக துரிய ரூபத்தினாலும், இவ்வாறு நான்கு ஸ்வரூபாத்மக ரூபங்களால் அனைத்து ப்ராணிகளின் சரீரங்களிலும் இருப்பவனான ஸ்ரீஹரி. (மாண்டூக்ய உபநிஷத் பாஷ்ய 1-1-7). நாமங்கள் 135, 136, 137, விஷ்வ, தைஜஸ, ப்ராக்ஞ அவஸ்தா த்ரயதாதா – பார்க்கவும்.

**393 தூர்ணப்ரிய**
பக்தர்களுக்கு வேகமாக அருள்வதில் மகிழ்பவனான ஸ்ரீஹரி. 'தூர்ணமதேத நபதேத அனும்ருந்தூ யாவத்' - பாகவத ஸாரோத்தார.

**394 நித்யதேஜன**
தேஜோமயனாக நித்யதேஜன என்று இருப்பவனான ஸ்ரீஹரி. நாமம் 332 ஜ்யோதிர்மய பார்க்கவும்.

**395 தைத்திரிய ஸ்ருதி ஸ்துத்ய**
தைத்திரிய உபநிஷத்தில் ஸ்துதி செய்துகொண்டவனான ஸ்ரீஹரி

**396 தூயாயன**
தண்ணீரில் சயனம் செய்திருப்பவனான ஸ்ரீஹரி. நாமம் 197 அபுரஷயன பார்க்கவும்.

**397 த்ருதௌகத பத்யதாந்த்ரிக**

கையில் அமிர்த கலசத்தைப் பிடித்து பாற்கடலைக் கடையும் காலத்தில் தோன்றிய மற்றும் ஔஷதங்களை நிர்வகிப்பவனான தன்வந்திரி அவதாரியான ஸ்ரீஹரி.

**398 பரமசேத:**
சராசர வஸ்துகள் அனைத்திற்கும் சேதனம் ஆனவனான ஸ்ரீஹரி

**399 பரமகால**
நரசிம்ம ரூபத்தினால் ருத்ராந்தர்யாமியாக இருந்து கொண்டு, அனைத்து சம்ஹாரத்திற்கு காரணமாகி, பரமகால, என்று அழைத்துக் கொள்பவனான ஸ்ரீஹரி.

**ப்ரத2ம புருஷ ப்ருதா2த்மஜான்ருப**
**மதி2த வீர்ய ரதீ2ந்தி3ர பரிசர**
**ப்ருது2விபூ1ஜித ஸ்தூ2லக்ருத்ய யதே2ச்ச ஸ்தை2ர்யமதே |**
**பதி2க ஸத3ன யதோ2க்த ப2லத3 வி**
**பத2ரதௌ4க4ப ஸூரத2 சரண கு**
**பத2தூ3ரக3 பி3ரம்மஸ்த1ம்பா4ந்த2ஸ்த ஸ்வஸ்த2: நமோ || 29**
**(மேலுள்ள இந்த நுடி – த2ம் – அக்ஷரமாலை இருக்கிறது. ஸ்தூ, ஸ்தை, ஸ்த: என்று வரிசையாக வந்திருப்பதால், தூ2, தை2 மற்றும் த2: வும் வந்ததாக ஆயிற்று).**

**400 ப்ரதமபுருஷ**
ஒவ்வொரு பிரளய காலத்திலும் அனைத்து சராசர வஸ்துகளையும், தன் உதரத்தில் வைத்துக்கொண்டு, ஆல இலையின் மேல் படுத்திருப்பவனான பரமாத்மன். தனக்கு ஸ்ருஷ்டியை செய்ய வேண்டும் என்றபோது, நாராயண, வாசுதேவ, சங்கர்ஷண, பிரத்யும்ன மற்றும் அனிருத்த ரூபங்களை ஏற்று ஸ்ருஷ்டியை துவக்கினான். இத்தகைய ஸ்ருஷ்டியின் முன்பே இருந்து, பிரதம புருஷ என்று அழைக்கப்படுபவனான ஸ்ரீஹரி.

**401 ப்ருதாத்மஜா ந்ருபமதிதவீர்ய**
ப்ருதாத்மஜா – குந்திதேவியின் மக்களான பாண்டவர்கள். அவர்களில் சன்னிதானம் கொண்டு துஷ்டரின் சாமர்த்தியத்தை நாசம் செய்தவனான கிருஷ்ணாவதாரியான ஸ்ரீஹரி.

**402 ரதீத்ர பரிசர**

ரதத்தை ஓட்டுபவர்களில் சிறந்தவனான அர்ஜுனனுக்கு, மஹாபாரத போர்க் காலத்தில், சாரதியாக, அவனின் சேவகனாக, பாண்டவர்களுக்கு தன் இருப்பினாலேயே வெற்றியைக் கொடுத்தவனான கிருஷ்ணாவதாரி ஸ்ரீஹரி.

**403 ப்ருதுவி பூஜித**

1. பிரம்மனின் வரத்தினால் கர்வத்துடன் சுற்றித் திரிந்த தைத்யர்களின் மற்றும் துஷ்டர்களின் பாரத்தினால் கஷ்டப்படுவதாகவும், பிரம்ம மற்றும் அனைத்து தேவதைகளுடன், பசு ரூபத்தினால் பாற்கடல் அருகில் வந்து பூதேவி பிரார்த்தனை செய்தாள். சேஷசாயியான பகவந்தன், 'சிறிது காலத்தில் வசுதேவ தேவகியில் தான் தோன்றி பூ-பாரத்தைக் குறைக்கிறேன்' என்று அபயம் அளித்தான். அதனைக் கேட்டு பூதேவியுடனான அனைத்து தேவதைகளும் தத்தம் இடத்திற்கு மகிழ்ச்சியுடன் திரும்பச் சென்றனர். இவ்வாறு ப்ருதுவி பூஜிதனான ஸ்ரீஹரி. (ஸ்ரீமத் பாகவத 10ம் அத்தியாயம் பூர்வார்த்த 1ம் அத்தியாயம்).

2. வரபலத்தினால் கர்வம் கொண்ட நரகாசுரன், ஸ்வர்க்கத்தின் மேல் போர் தொடுத்து, தேவதைகளை தோற்கடித்து, அதிதியின் கர்ணகுண்டலங்களை அபகரித்து, வந்தான். இந்த விஷயத்தை தேவேந்திரன் ஸ்ரீகிருஷ்ணனுக்கு தெரிவித்து, அந்த கர்ண குண்டலங்களை திரும்ப பெற்றுத்தர வேண்டும் என்று வேண்டினான். அவனின் பிரார்த்தனைக்கேற்ப, ஸ்ரீகிருஷ்ணன் சத்யபாமையுடன் அந்த நரகாசுரனின் கோட்டைக்குச் சென்றான். கோட்டையின் மகாத்வாரத்திலேயே அந்த அசுரனின் சேனாதிபதியான முரனை சம்ஹரித்தான். அப்போது பூதேவி, தனக்கு அருளுமாறு வேண்டினாள். ஸ்ரீகிருஷ்ணன் நரகாசுரனின் மகனான பகதத்தனுக்கு பட்டம் கட்டி, கர்ண குண்டலங்களைப் பெற்றுக்கொண்டு, சத்யபாமையுடன் கருடன் மேல் ஏறி, ஸ்வர்க்கத்திற்கு வந்த கிருஷ்ணாவதாரியான ஸ்ரீஹரி. (ஸ்ரீமத் பாகவத 10ம் ஸ்கந்த, 63,64,65ம் அத்தியாயங்கள்).

**404 ஸ்தூலக்ருத்ய**

தேஷு காலேப்யஜாயந்த ரசிதாவயவா ஹரே: |
ஷக்திர்பீ: த்ருவிப்யாபி: கோமலாங்க தனுர்ஹுஹா: ||
(பாகவத 11ம் ஸ்கந்தம்) அனைவருக்கும் தெரியுமாறு ஸ்ருஷ்ட்யாதி செயல்களை செய்பவனான ஸ்ரீஹரி.

**405 யதேச்சஸ்தைர்யமதெ**

தன் இஷ்டத்திற்கேற்ப இருக்கும் நிலைத்தன்மை, மதி – இந்த குணங்களைக் கொண்ட ஸ்ரீஹரி.

**406 பதிகஸதன**

பதிக – பயணம் செய்பவர்கள். ஸதன – ஆதரவு. முக்திக்கு செல்பவர்களுக்கு ஆதரவாக இருப்பவனான ஸ்ரீஹரி.

**407 யதோக்தபலத**

சூர்ய புத்திர சுக்ரீவனின் நட்பினைப் பெற்று, இந்திர புத்திரனான வாலியைக் கொன்ற ஸ்ரீராமன். அந்த வாலிக்கு கூறியதைப் போல, ஸ்ரீகிருஷ்ணாவதாரத்தில் இந்திர புத்திரனான அர்ஜுனனின் நட்பினைப் பெற்று, சூர்ய குமாரனான கர்ணனை போர்க்களத்தில் கொன்றவனான ஸ்ரீஹரி.

**408 விஷதரதௌகஷ**

விஷத+ரத+ ஓக+ ப. ருக்மிணியின் ஸ்வயம்வர காலத்தில், ருக்மிணியை ரதத்தில் அமர்த்திக்கொண்டு மதுராவிற்கு வந்து கொண்டிருக்கையில், அவளின் அண்ணனான ருக்மி துரத்திக் கொண்டு வந்து, ஸ்ரீகிருஷ்ணனுடன் போர் புரிந்து தோற்றான். அப்போது ருக்மியைக் கொல்ல வேண்டாம் என்று ருக்மிணி வேண்டிக் கொண்டதால், தன் கையில் இருந்த கத்தியால் அவனின் கூந்தலை மட்டும் வெட்டி, ரதத்தையும் அழித்தான் ஸ்ரீகிருஷ்ணன்.

இவ்வாறு தோற்ற ருக்மியை காத்தவனான கிருஷ்ணாவதாரியான ஸ்ரீஹரி. (ஸ்ரீமத் பாகவதம் 10ம் ஸ்கந்தம் உத்தரார்த்த 57, 58, 59 அத்தியாயங்கள்). நாமம் 755 அஷ்டமஹிஷியரு பார்க்கவும்.

**409 ஸூரதசரண**

சூர்யாந்தர்யாமி ஸவித்ரு நாமக பகவந்தன் இரவில் இருட்டினை உருவாக்கி, தேவதைகள், மனிதர்கள் மற்றும் மற்ற பிராணிகள்

அனைவரும் இரவில் படுக்குமாறு சொல்லி, உலகத்தைப் பார்க்க தங்கமயமான ரதத்தில் ஏறி வருகிறான். பிராணிகளின் கஷ்டங்களை பரிகரித்தவாறு நீச–உச்ச பிரதேசங்கள் அனைத்திலும் தினமும் சஞ்சரிப்பவனான சவித்ரு நாமக ஸ்ரீஹரி. (ரிக்வேத 35-7 மற்றும் 35-3).

**410 குபததூரக**
தன் பக்தர்களை கெட்ட வழியிலிருந்து விடுவிப்பவனான ஸ்ரீஹரி.

**411 பிரம்மஸ்தம்பாந்தஸ்தஸ்வஸ்த:**
பிரம்மதேவரில் துவங்கி, த்ருண வரைக்கும் அனைத்து வஸ்துகளில் நிலைத்திருந்து, அவற்றை வழி நடத்துபவனாகவும், தான் மட்டும் ஆனந்தபூர்ணனாகவும் இருப்பவனான ஸ்ரீஹரி.

**த$^{3}$ஹர வ்யோமக$^{3}$ தா$^{3}$த்ருதா$^{3}$ந்த ஹ்ருத்$^{3}$**
**கு$^{3}$ஹஸத$^{3}$ன கர்த்த து$^{1}$ஹினபி$^{3}$ந்த$^{3}$க$^{3}$**
**அஹோக$^{4}$ தீ$^{3}$ர்க்க$^{4}$மயூக$^{2}$ து$^{3}$ர்கா$^{3}$ வ்யாக்ருதாம்ப$^{3}$ரகா$^{3}$ |**
**ஸ்வஹிக$^{3}$ தூ$^{3}$ரக$^{3}$ தே$^{3}$வதைத்யரக$^{3}$**
**தோ$^{3}$ஹன கார்யக$^{3}$ தெள$^{3}$த்யகர்மக$^{3}$**
**த்$^{3}$ரோஹிணதே$^{3}$ஹ்யக$^{3}$ த$^{3}$ண்ட$^{3}$காரக$^{3}$ த$^{3}$ர்ப்பகஸஹ நமோ || 30**
**(மேலுள்ள இந்த நுடி – தி$^{3}$, த$^{3}$: - அக்ஷரமாலை இருக்கிறது)**

**412 தஹரவ்யோமக**
ஹ்ருதயாந்தர்கத ஆகாஷத்தில் இருப்பவனான ஸ்ரீஹரி

**413 தாத்ருஹ்ருத் குஹஸதன கர்த்த**
**414 தாந்த ஹ்ருத் குஹஸதன கர்த்த**
தாத்ரு – கொடுப்பவன். தாந்த – பெறுபவன். இந்திரிய நிக்ரஹ உள்ள தானம் கொடுப்பவன் மற்றும் தானம் பெறுபவன் இவர்கள் இருவரின் ஹ்ருதய என்னும் குகையில் வசிப்பவனான ஸ்ரீஹரி.

**415 துஹினபிம்பக** - சந்திரனில் இருப்பவனான ஸ்ரீஹரி

**416 அஹோக தீர்க்கமயூகதர்க்க.**
துர்க்கா – கோடி. அஹோக – வீணாகாத. மயூக – கிரணங்கள். வீணாகாத தீர்க்க கிரணங்களின் கோடிகளைக் கொண்டவனான ஸ்ரீஹரி.

**417 அவ்யாக்ருதாம்பரக**
அவ்யாக்ருத ஆகாஷத்தில் இருப்பவனான ஸ்ரீஹரி.

**418 ஸ்வஹிக**
பகவந்தன் சர்வகத. அதாவது அனைத்து இடங்களிலும் இருப்பவன் என்னும் அபிப்பிராயத்தையே ஈஷாவாஸ்ய உபநிஷத் – பகவந்தன் தூரத்திலும், சமீபத்திலும், அனைத்தின் உள்ளும், வெளியேயும், இருப்பவன் – என்று சொல்கிறது. இத்தகைய ஸ்வஹிகனான ஸ்ரீஹரி. (ஈஷாவாஸ்ய உபநிஷத் 1-5)

**419 தூரக**
சர்வகதனான பரபிரம்மன், தூரத்திலும், அருகிலும், அனைத்து இடங்களிலும் இருக்கிறான். இதையே 'ஸர்வங்கல்விதம் பிரம்ம' என்னும் ஸ்ருதியும், ஓம் ஸர்வத்ர பிரசித்தோபதேஷாத் ஓம்' என்னும் பிரம்மசூத்திரமும் சொல்கின்றன.

**தேவதைத்யரக**
**420 தேவரக. ரக – நியாமக.**

**421 தைத்யரக** – தேவதைத்யர்களிலும் நியாமகனான ஸ்ரீஹரி.

**422 மோஹன கார்யக**
மனு குலத்தில் உதித்த துருவனின் வம்சத்தில் வந்த அங்கராஜன் தன்னுடைய மகனான வேனனின் கெட்ட செயல்களில் மனம் நொந்து, அரசினை விட்டு இரவில் யாருக்கும் சொல்லாமல் வீட்டை விட்டு வெளியேறினான். அப்பொழுது வேனனுக்கு பட்டாபிஷேகம் ஆயிற்று. அவனுடைய கெட்ட செயல்கள் மேலும் தொடர்ந்தன. அவனுக்கு உபதேசம் செய்ய வந்த பிருகு முனிவரை அவமானம் செய்ததால், அவர் சாபம் அளித்தார். சில காலங்களுக்குப் பிறகு நாட்டில் அராஜகம் உண்டாயிற்று. பிராம்மணர்கள், வேனனின் தாய் செய்த அவனுடைய பார்த்திவ சரீரத்தை கொண்டு வந்து, அதன் இடது தொடையை மதனம் செய்ய, அதிலிருந்து ஒரு குள்ளமான உருவம் தோன்றி – என்ன செய்ய வேண்டும் – என்று கேட்டது.

அதற்கு அவர்கள் – நீ எதுவும் செய்ய வேண்டாம் – என்று கூறியதால், அவன் அன்றிலிருந்து நிஷாத குலத்திற்கு மூல புருஷன் ஆனான். திரும்ப அவர் அந்த வேனனின் இடது மற்றும் வலது தொடைகளை உடைத்தனர். அதிலிருந்து ஒரு புருஷ ரூபமும், ஸ்த்ரி ரூபமும் தோன்றின. பகவான் உலகத்தை காப்பதற்காக, தன்னுடைய அம்சத்தினாலான புருஷனையும், மகாலட்சுமியின் அம்சத்தினால் ஸ்திரீ ரூபத்தையும் அருளினான் என்று அறிந்து சதுர்முகன், நீங்கள் இருவரும் தம்பதிகளாகி, உலகத்தை காப்பதற்காக வெகுகாலம் சக்கரவர்த்திகளாக இருங்கள் என்று அருளினார்.

மக்களைக் காப்பதற்காக தொடர்ந்து தேசத்தின் நிலையினை ஆராய்ந்து, செயல்களை செய்தனர். ஒருமுறை பூமியில் பஞ்சம் நிலவி மக்கள் எவ்வித உணவும் இன்றி பட்டினியில் வாடினர். எங்களுக்கு உணவு ஏற்பாடு செய் என்னும் மக்களின் பிரார்த்தனைக்கு ஏற்ப, அந்த பிருத்விராஜன், விதைத்த நெல் அனைத்தையும் விழுங்கிய பூதேவியின் மேல் கோபம் கொண்டு மொத்த பூமியையே சுட்டுப் பொசுக்குகிறேன் என்று சபதம் செய்தான். இதைக்கண்ட பூதேவி, பசு ரூபத்தை எடுத்து, ‘உலகத்தின் அரசர்கள் அனைவரும் மருந்து பதார்த்தங்களை துரோகம் செய்வதைக் கண்டு பொறுக்காமல் அப்படி செய்தேன் – என்று கூறி, பசு ரூபமான எனக்கு தகுந்த கன்றினை, பால் பிடிக்கும் பாத்திரத்தை, பால் கறப்பதற்கு ஒரு மனிதனை அனுப்பு. அப்படி செய்தால் உனக்கு தேவையான பதார்த்தங்களை நான் விளைத்து கொடுக்கிறேன். அதனால், உனக்கும் உன்னுடைய மக்களுக்கும் நலன் உண்டாகும்’ என்று கூறினாள்.

பசு ரூபி பூதேவியின் வாக்கிற்கு ஏற்ப, பிருது சக்கரவர்த்தி ஸ்வாயம்புவ மனுவை கன்றாக ஆக்கி, தன்னுடைய கைகளை பாத்திரமாக சிந்தித்து, பால் கறப்பதற்கு தானே வந்தான். பசு ரூபியான பூதேவியின் ஸ்தனங்களில் இருந்து, அனைத்து பொருட்களையும், தானிய வகைகளையும் கறந்தான். இந்திராதி தேவர்களும், ராக்ஷஸர்கள், மகரிஷிகளும், பிராணிகள் அனைவரும் தமக்கு தேவையான பல ரூபமான பொருட்கள் அனைத்தையும் பூதேவியிடம் இருந்து பெற்றுக்கொண்டனர்.

இவ்வாறு பிருது சக்கரவர்த்தியின் ரூபத்தில் இருந்து, உலக நலனுக்காக பசு ரூபியான பூதேவியின் மோகன காரியம் என்று அழைக்கப்பட்ட ஸ்ரீஹரி.

**423 தௌத்யகர்மக**

சூதாட்டத்தில் தோற்றுப்போன பாண்டவர்கள் 12 ஆண்டுகள் வனவாசம் மற்றும் ஒரு ஆண்டு அஞ்ஞானவாசத்தை முடித்து, விராடராஜனின் தலைநகரில் வெளிப்பட்ட பிறகு, தம் அரசினை திரும்ப தமக்கே கொடுக்கவேண்டும் என்று ஒரு புரோகிதனை தூது அனுப்பினர். ஆனால் அது தோல்வியில் முடிந்தது. பிறகு கௌரவர்களின் சபைக்கு பாண்டவர்களின் தூதனாக ஸ்ரீகிருஷ்ண பரமாத்மன் தானே சென்று அவர்களுக்கு பாண்டவர்களின் சார்பாக அவர்களின் கோரிக்கையை திருதராஷ்டிரனுக்கு கூறி, தூத காரியத்தை சரியாக செய்தவனான ஸ்ரீகிருஷ்ணாவதாரியான ஸ்ரீஹரி.

**424. த்ருஹிணதேஹ்யக –**

த்ருஹிண – பிரம்ம. பிரம்மதேவரின் தேகத்திலும் இருப்பவனான ஸ்ரீஹரி.

**425 தண்டகாரக**

தண்டனை கொடுப்பவர்களான அரசர்களில், ராஜேஷ்வர ரூபத்தில் இருப்பவனான ஸ்ரீஹரி

**426 தர்ப்பக ஸஹ**

அசுரர்கள் எறியும் ஷஸ்திர அஸ்திரங்களை சகிப்பவனான (அழிப்பவனான) ஸ்ரீஹரி.

**த$^4$ர்ம நிசயப தா$^4$து ஸமூஹப**
**கர்மதி$^4$ஷ$^2$ணப தீ$^4$ர ப்ரக்ளுப**
**நர்மவாக்$^3$மிப து$^4$ நிகத$^3$ம்ப$^3$ப தூ$^4$ர்ஜ சாங்கிதப |**
**சர்மக$^2$ட்க$^3$ப தே$^4$னு விப்ரப**
**வர்ம தை$^4$ர்யாங்கித பாதோ$^4$க்ஷஜ**
**நிர்மலாத்ம தௌ$^4$ம்யர்க$^3$ப த்$^4$வநிப ஜனப நமோ || 31**
**(மேலுள்ள இந்த நுடி – த$^4$ம், த$^4$: - அக்ஷரமாலை இருக்கிறது)**

**427 தர்மநிசயப**

நிசய – கூட்டம். தர்ம சமுதாயத்தை உருவாக்குபவர்களை காப்பவனான ஸ்ரீஹரி.

**428 தாது ஸமூஹப**

ரஸ, ரக்த முதலான சப்த-தாதுகளின் சமூகங்களை காப்பவனான ஸ்ரீஹரி.

**429 கர்மதீக்ஷணப**

கர்மத்தில் புத்தி உள்ள ஜனகாதி ராஜர்களை காத்தவனான ஸ்ரீஹரி

**430 தீரப்ரக்ஞப**

நல்ல ஞானத்தைக் கொண்டவர்களை காப்பவனான ஸ்ரீஹரி

**431 நர்மவாக்மிப**

நல்ல வாக்கியங்களை பேசுபவர்களை காப்பவனான ஸ்ரீஹரி

**432 துனிதம்பப**

துனி = த்வனி. கதம்ப = சமுதாயம் (கூட்டம்). 1. த்வனி சமுதாயத்தை காப்பவனான ஸ்ரீஹரி. துனி என்றால் நதி. 'தாரினி ஹ்ரார்தீனி துனி' (அமரகோஷ). நதிகளின் சமுதாயத்தை காப்பவனான ஸ்ரீஹரி.

**433 தூர்ஜசாங்கித ப**

துர்ஜடை உள்ள ருத்ரதேவரை காப்பவனான ஸ்ரீஹரி. நாம 272 கிரிகணஸேவ்ய பார்க்கவும்

**434 சர்மப & 435 கட்கப**

தோல் கேடயம் மற்றும் வாள் பிடித்து போரிடும் வீரர்களை காப்பவனான ஸ்ரீஹரி. தானே போரில் ஒரு கையில் கத்தி மற்றும் இன்னொரு கையில் கேடயம் தரிப்பவனான ஸ்ரீஹரி.

**436 தேனுப & 437 விப்ரப**

1. பிராமணர்களை, பசுக்களை காப்பவனான ஸ்ரீஹரி 2. கார்த்தவீர்யாஜுனன் ப்ருகு வம்சத்தின் ஜமதக்னி முனியைக் கொன்று, அவரின் காமதேனுவினை அபகரித்துக் கொண்டான். அப்போது ஜமதக்னி முனியின் மகனாக அவதரித்த பரசுராம ரூபி

ஸ்ரீஹரி, அந்த கார்த்தவீர்யார்ஜுனனைக் கொன்று, அவனின் இதயத்தில் இருந்த அம்ருதகுண்டத்தைக் கொண்டு வந்து, ஜமதக்னி முனியை மறுபடி உயிர்ப்பித்து, காமதேனுவையும் திரும்பி கொண்டு வந்த பரசுராம அவதாரியான ஸ்ரீஹரி.

**438 மர்மதைர்யாங்கித ப**
கவசத்தை தரித்தவனான மற்றும் தைர்யத்தைக் கொண்ட வாலிபர்களை காப்பவனான ஸ்ரீஹரி.

**439 அதோக்ஷஜ**
என்றென்றும் வறட்சியை (அழிவை) அடையாதவனான ஸ்ரீஹரி. (மகாபாரத உத்யோக பர்வ 70-10).

**440 நிர்மலாத்ம**
தோஷங்கள் இல்லாதவன் மற்றும் நிர்மலமான ஆத்ம உள்ளவனான ஸ்ரீஹரி. நாம 125 அசேஷதோஷ விதூர பார்க்கவும்.

**441 தௌம்யப** - தௌம்ய ரிஷிகளை காப்பவனான ஸ்ரீஹரி

**442 கர்கப**
கர்காசார்யர் ஒருமுறை யாதவர்கள் மேல் கோபம் கொண்டு, அவர்களை அழிக்கும் மகனைப் பெற வேண்டும் என்று தவம் செய்து, யவன ஸ்த்ரீயர்களில் ‘காலயவன’ என்னும் மகனைப் பெற்றார். பிறகு அவர் ஸ்ரீகிருஷ்ணனிடம் சரணடைந்தபோது, கர்காசார்யர் மூலமாக விஷ்ணு பஞ்சக விரதத்தை செய்வித்து, அவரை காத்தவனான ஸ்ரீகிருஷ்ணாவதாரியான ஸ்ரீஹரி.

**443 த்வனிப**
த்வனியை காப்பவனான. உதாரணத்திற்கு – த்ருவன் தவம் செய்த காலத்தில், அவனின் கன்னத்தில் சங்கினால் தொட்ட உடனேயே, அவனுக்கு ஞானோதயம் ஆகி, அவன் ஸ்ரீஹரியை பிரார்த்திக்கத் தொடங்கினான். இத்தகைய த்வனி ரக்ஷகனான ஸ்ரீஹரி.

**444 ஜனப** - நாம 38 ஜனப பார்க்கவும்.

**நக3வித்4ருதகர நாக3க3ர்வஹன்**
**நிக3மரிபுனாஷக நீதபிரபு4**
**ஸுக3ணஸேவ்ய நுதஜனமந்தா3ர நூதனாப்ஜாங்க்4ரி |**
**யுக3யுகா3ந்தர நேமனைஷ்2டிக**
**ஸுகு3ணனோத3தே4 ஸௌக3னந்த3க**
**விக3த ஸ்னேஹவிமனஷ்ட ஜக3தோ3த4ரணஷீல நமோ || 32**
**(மேலுள்ள இந்த நுடி – நௌ மற்றும் ந: அக்ஷரமாலை இருக்கிறது)**

**445 நக வித்ருத்கர**

கோவர்த்தன பர்வதத்தை தூக்கிய கிருஷ்ணாவதார ஸ்ரீஹரி. நாம 78 ‘ஷக்ர அர்ஜித பதாப்ஜ’ பார்க்கவும்.

**446 நாககர்வஹன்**

நாம 75 ‘நாகரக்ஷக’ மற்றும் 230 ‘பணிமதஹர’ பார்க்கவும்.

**447 நிகமரிபு நாஷக** - நாம ‘கபலி ரூப’ பார்க்கவும்

**448 நீதப்ரபு நீதா:**

(ப்ரபவ: பந்தனாத் ஏவ ஸஹா = நீதப்ரபு). ஜராசந்தனிடம் சிறையில் இருந்த அரசர்களை விடுவித்த கிருஷ்ணாவதாரியான ஸ்ரீஹரி.

**449 ஸுகணஸேவ்ய**

ஸு+கண+ஸேவ்ய. சிறந்த ருஜுகணத்தவர்களால் வணங்கப்படுபவனான ஸ்ரீஹரி.

**450 நுதஜனமந்தார**

தன்னை வணங்கிய மக்களுக்கு மந்தார வ்ருக்ஷத்தைப் போல அபீஷ்டத்தை கொடுப்பவனான ஸ்ரீஹரி

**451 நூதனாப்ஜாங்க்ரி**

புத்தம்புதிய தாமரையைப் போல கோமள பாதங்களைக் கொண்டவனான ஸ்ரீஹரி

**452 யுகயுகாந்தரனேம**

யுக யுகாந்தரங்களின் நியமங்களை செய்பவனான ஸ்ரீஹரி

**453 நைஷ்டிக ஸுகுணனோததே**

நாம 1. 745 ஷட்குணேஷ்வர 2. 96 பலபூர்ண பார்க்கவும்.

**454 ஸௌகனந்தக**

ஸௌ - சுமன - நல்ல மனம் கொண்டவர்கள். இத்தகையவர்களை மகிழ்ச்சிப்படுத்துபவனான ஸ்ரீஹரி.

**455 விகதஸ்னேஹவினஷ்ட**

துஷ்டர்களின் ஸ்னேகம் இல்லாதவனான ஸ்ரீஹரி.

**456 ஜகதோத்தரணஷீல**

உத்தரண - தாங்கிப் பிடித்தல். நாம 1. 27 வரஹ 2. மூகஸம்பவ - பார்க்கவும்.

**பவன மத பர பாகபி[4]த்தம்**
**ஸ்தவனநிரத பினாகிமோஹக**
**ஸுமது[4] பீயூஷத[4]ர ஸுபுஷ்ப விஹாஸ பூர்ணப்ரபா[4] |**
**கவிவரத[3] ஜைமினி ஸுமந்த பை**
**ல வைஷம்பாயன ஷுகவிபோஷ[2]க பௌரா**
**ண விரசக பஞ்சராத்ர பா[4]ரத ஸூத்ரகர்த்த நமோ || 33**
**(மேலுள்ள இந்த நுடி - பே[1] மற்றும் ப[1]: - அக்ஷரமாலை இருக்கிறது)**

**457 பவனமதபர** - நாம 846 வாதஸுதமத பார்க்கவும்

**458 பாகபித்தம்**

பாகஷாஸன என்றால் இந்திர. அவனில் இருந்த பாகனெ என்னும் தைத்யனை கொல்வதற்கு வலிமையைக் கொடுத்தவனான ஸ்ரீஹரி.

**459 ஸ்தவன நிரத பினாகி மோஹக ஸுவது**

தன் ஸ்துதியிலேயே எப்போதும் இருப்பவனான - பினாகி (ஷங்கரன்) - அவருக்கு சம்ஹரிப்பதற்கு வலிமையைக் கொடுத்தவனான ஸ்ரீஹரி.

**460 பீயூஷதர**

பீயூஷ - அமிர்த. பீயூஷதர - அம்ருத கலசத்தை தரித்தவனான ஸ்ரீதன்வந்தரி ரூபி ஸ்ரீஹரி.

த்ரிவிடிதாள
அஸுர நிர்ஜரததி நெரெது கிரியதந்து
மிஸகதலெ மஹோததி மர்திஸலாகி
நஸுநகுத புட்டிதெ பீயூஷ கடதரிஸி
......
தஷதிஷதொளு மெரெவ விஜயவிட்டல பிஷ்கா
அஸு இந்திரியங்கள ரோக நிவாரண ||3
(ஸ்ரீவிஜயதாசரின் தன்வந்திரி ஸுளாதி).

ஸ்ரீபாகவத சாரோத்தார ஸ்லோக 224

ஏவம் ஸுராஸுராணா: ஸமதேஷகால
ஹேத்வர்த்த யோககத யோsபி பலெ விகல்பா: |
தத்வாம்ருதம் ஸுரகணா: பலமஞ்சஸாஸு
ர்யத்பாத பங்கஜரஜ: ஸ்ரயணான்னதைத்யா: || 8-8-23

பாற்கடலைக் கடையும் சமயத்தில், கால, தேஷ, கார்ய ஒன்றே ஆகியிருந்தாலும், உன்னை அறிந்த தேவதைகள் அமிர்தத்தை பெற்றனர். உன்னை அறியாத தைத்யர்கள், மத்யபானத்தையே பெற்று திருப்தியடைந்தனர். (ஸ்ரீமத் பாகவத 8-8-23).

**461 ஸுபுஷ்பவிஹாஸ**

எப்போதும் ஆனந்தத்துடன் புன்னகையுடன் இருக்கும் ஸ்ரீகிருஷ்ணாவதாரியான ஸ்ரீஹரி.

**462 பூர்ணப்ரபா**

சூர்ய, சந்திர, நட்சத்திராதிகள் ஒளி தருபவை. ஆனால், அவை அனைத்தும் தானே ஒளி தருவதில்லை. பகவந்தனே ஒளி பொருந்தியவனாக இருந்து, அவனின் ஒளியை அனுசரித்து, அவனிடம் ஆதரவு அடைந்து, மற்ற பதார்த்தங்கள் ஒளி தருகின்றன என்று உபநிஷத்கள் சொல்கின்றன. (காடகோபநிஷத் 2-4-2-2-2).

உலகத்திற்கு ஒளி கொடுக்கும் ஆதித்யனில் இருக்கும் தேஜஸ் மற்றும் சந்திரன் மற்றும் அக்னியில் இருக்கும் தேஜஸ் - என்னிடமிருந்தே என்று அறி. என்று, கீதாசார்யன் கூறியிருக்கிறான். (கீதை 15-12).

பராவர எனப்படும் பகவந்தன் ரவியில் இருந்து, பிரம்மாண்டத்தின் நடுவில் இருந்து, அனைத்தையும் ஒளிர்விக்கிறான் என்று அதர்வண உபநிஷத் சொல்கிறது. (அதர்வண உபநிஷத் 2-1-12).

இவ்வாறு உண்மையாக தானே ஒளியைக் கொடுப்பவனாக இருந்து, 'பூர்ணப்ரபா' என்று அழைத்துக் கொள்பவனான ஸ்ரீஹரி.

**463 கவிவரத**

கவி என்றால் பிரம்மதேவர். அவருக்கு ஞானோபதேசம் செய்தவனான ஸ்ரீஹரி.

**464 ஜைமினி விபோஷக. & 465 ஸுமந்த விபோஷக. & 466 வைஷம்பாயன விபோஷக & 467 பைல விபோஷக & 468 ஷுக விபோஷக**

அல்ப ஆயுள் உள்ளவர்களும், மந்தபுத்தி உள்ளவர்களுமான மக்களைப் பார்த்து, த்வாபர யுகத்தின் முடிவில், தர்ம ரக்ஷணைக்காக பிரம்மருத்ராதி தேவதைகளால் பிரார்த்தனை செய்யப்பட்டவனான நாராயணன் பராஷரர்-சத்யவதியில் 'வேதவியாஸ' நாமகனாக அவதரித்து, ரிக், நிகம (யஜு), ஸாம, அதர்வ என்னும் நான்கு வேதங்களால், ரிக், யஜுஸ், ஸாம, அதர்வண என்னும் நான்கு ஸம்ஹிதைகளை செய்து, பைல, வைஷம்பாயன, ஜைமினி மற்றும் சுமந்து என்னும் ரிஷிகளுக்கு முறையே உபதேசம் செய்தார்.

மற்றும் வேதவியாசரின் சாட்சாத் புத்திரரான ஷுகாசார்யருக்கு இந்த நான்கு சம்ஹிதைகளை மட்டுமல்லாது 18 புராணங்களையும் உபதேசித்தார். சுகாசார்யர் ருத்ர அவதாரர். மற்றும் வாயுதேவரின் ஆவேசம் கொண்டவர். வைஷம்பாயன பிரம்ம அம்சர். பைல, ஸுமந்த மற்றும் ஜைமினிகளில் முறையே சேஷ, கருட, மற்றும் இந்திரரின் சன்னிதானம் உள்ளது. (தாத்பர்ய நிர்ணய 10-74).

இவ்வாறு பிரம்மாதி தேவதைகள், ஏதோவொரு வகையில் வியாசசிஷ்யராக ஞானம் பெற்றனர். (அனுவியாக்யான). அந்த காலத்தில் அவதரித்த ஒவ்வொரு தேவதையும் வியாசரின் சிஷ்யரே ஆகியிருக்கிறார். (தாத்பர்ய நிர்ணய 12-11). ஆகையால், ஷுக, பைல, வைஷம்பாயன, ஜைமினி மற்றும் சுமந்த இவர்கள் அனைவருக்கும் ஞானத்தைக் கொடுத்து போஷகனான வியாசாவதாரியான ஸ்ரீஹரி.

**469 பௌராணவிரசக**

வேதார்த்தங்களை நிர்ணயம் செய்யும் கிரந்தங்களே புராணங்கள். இவற்றில் மஹாபுராண மற்றும் உப புராண என்று இரு விதங்கள். மஹாபுராணங்கள் 18. 1. பிரம்ம புராணம் 2. பத்ம புராணம் 3. விஷ்ணு புராணம் 4. ஷிவ புராணம். 5. பாகவத புராணம் (தேவி பாகவத). 6. நாரதீய புராணம் 7. மார்க்கண்டேய புராணம் 8. அக்னி புராணம் 9. பவிஷ்யத் புராணம் 10. பிரம்ம வைவர்த புராணம் 11. லிங்க புராணம் 12. வராஹ புராணம் 13. ஸ்கந்த புராணம் 14. வாமன புராணம் 15. கூர்ம புராணம் 16. மத்ஸ்ய புராணம் 17. கருட புராணம் மற்றும் 18 பிரம்மாண்ட புராணம்.இவற்றில் மொத்தம் 4 லட்ச ஸ்லோகங்கள் உள்ளன. இவற்றில் 10 சிவ புராணங்கள். 4 - விஷ்ணு புராணங்கள். 2 - பிரம்ம புராணங்கள். 1 - சூர்ய புராணம். 1- அக்னி புராணம் என மொத்தம் 18.

உப புராணங்கள் 18. 1. ஸனத்குமார புராண 2. நாரசிம்ஹ புராண 3. நந்தி புராண 4. ஷிவதர்ம புராண 5. துர்வாஸ புராண 6. நாரதீய புராண 7. கபில புராண 8. மானவ புராண 9. உஷன: புராண 10. பிரம்மாண்ட புராண 11. வாருண புராண 12. காளி புராண 13. வாசிஷ்டஷைங்க புராண 14. ஸாங்க புராண 15. ஸௌர புராண 16. பராஷர புராண 17. மரீசி புராண 18. பார்க்கவ புராண .

மஹாபுராணத்திற்கு ஸர்க்க, விஸர்க்க, வ்ருத்தி, ரக்ஷா, அந்தர, வம்ஷ, வம்ஷானுசரித, சம்ஸ்தா, ஹேது, அபாஸ்ரய என்னும் 10 லட்சணங்கள் உள்ளன. உப புராணங்களில் ஸர்க்க, விசர்க்க, வம்ஷ, மன்வந்தர, வம்ஷானுசரித என்னும் ஐந்து லட்சணங்கள் உள்ளன. இந்த 18 புராணங்களை இயற்றிய வேதவியாச அவதாரியான ஸ்ரீஹரி.

**470. பம்வராத்ரி விரசக & 471. பாரத விரசக & 472. ஸூத்ர கர்த்ரு விரசக**

பஞ்சராத்ர, மஹாபாரத, மற்றும் பிரம்மசூத்ரங்களை இயற்றியவரான வேதவியாச அவதாரியான ஸ்ரீஹரி.

**பலிதஸத்$^{3}$ரஸ பா$^{2}$லலேக$^{2}$க**
**லலித ஸ்பிதாத்மக ஸ்பு$^{2}$டித$^{4}$வ்ரு**
**ஜ்வல மருத்ப$^{1}$ய: பே$^{2}$னபு$^{4}$க்பதே விஸ்போ$^{2}$டக கசாஹ |**
**ப$^{3}$லப$^{3}$லத$^{3}$ பா$^{3}$ணக்$^{4}$ன பி$^{3}$லகி$^{3}$ரி**
**நிலய முனி ஹ்ருன்னிலய பு$^{3}$த$^{4}$ மண்**
**ட$^{3}$ல விராஜித போ$^{3}$த$^{4}$யுத ப$^{3}$ந்த$^{4}$மோக்ஷரக நமோ || 34**
**(மேலுள்ள இந்த நுடி – பீ$^{2}$, பூ$^{2}$, பை$^{2}$, பே$^{2}$, ப$^{2}$ம், ப$^{2}$: மற்றும் பீ$^{3}$, பூ$^{3}$, பெ$^{3}$, பை$^{3}$, பே$^{3}$, ப$^{3}$: - அக்ஷரமாலை இருக்கிறது)**

**473 பலித ஸத்ரஸ**

ரஸத்திற்கு ரஸ ரூப – ஸ்ரீ ஹரிகதாம்ருதசார. மரங்களில், பழங்களில் ரஸ ரூபமாகயும், ரஸ நியாமகனாகவும் இருப்பவனான ஸ்ரீஹரி.

**474 பாலலேகக**

பிரம்மாந்தர்கதனாக இருந்துகொண்டு ஜீவிகளின் தலையெழுத்தினை எழுதுபவனான ஸ்ரீஹரி.

**475 லலித ஸ்திதாத்மக**

லலித – அழகான. ஸ்திதாத்மக – ஒளிமயமான. அழகான மற்றும் ஒளிமயமானவனான ரூபத்தைக் கொண்ட ஸ்ரீஹரி.

**476. ஸ்புடித வ்ருஜ்ஜல**

ஸ்புடித – வெளிப்பட்ட வ்ருத்+ஜல – வ்ருஜ்ஜல. நாம 70 த்ரிவிக்ரம பார்க்கவும்.

**477 மருத் புக்வதெ & 478 பய: புக்வதெ & 479 பேன புக்வதெ**

மருத் – காற்று. பய – பால். பேன – கன்று பால் குடிக்கும்போது வரும் நுரை. காற்றினை வணங்கி, பால் குடித்து அல்லது பாலில் இருக்கும் நுரையை மட்டுமே உண்டு வாழும் முனிவர்க்கத்திற்கு பதி – அதாவது, அதிபதியானவரான ஸ்ரீஹரி.

**480. விஸ்போடக கடாஹ**

நாம 1. 70 த்ரிவிக்ரம 2. 350 கடாஹபஞ்சக 3. 704 த்ரபதகாபித 4. பாஹ்யாம்புப்ரவாஹக - பார்க்கவும்.

**481 பலபலத**

பலசாலிகளில் இருந்து கொண்டு, அவர்களுக்கு வலிமையை கொடுக்கும் பகவத் ரூபம் பல எனப்படுகிறது. பகவான் வலிமை ஆவதற்கு விரும்புவதில்லை. ராஜஸ இல்லாத அவனுடைய வலிமையை, அவன் தகுதி இல்லாதவர்களிடம் பயன்படுத்துவது இல்லை. ஆகையால் அவனின் ஸ்வரூபாத்மக பலம், காம மற்றும் ராகத்தின் பாதிப்பு இல்லாதது. இத்தகைய பலமே தன்னுடைய விபூதி ரூபமாக ஆனது என்று 'பலினாம் பலத: ஸ்வயம்' என்று கீதாசார்யன் சொல்கிறான். இத்தகைய பலபலதன் ஆனவனான ஸ்ரீஹரி.

**பலிபலத**

இரண்யகசிபு தவம் செய்வதற்கு மந்தர மலைக்குச் சென்ற பொழுது, தேவதைகள் அசுர புரத்தை நாசப்படுத்தினர். அப்பொழுது இந்திரன், கர்ப்பிணியான கயாதுவை சிறைப்பிடித்து அழைத்து சென்றபோது, நாரதர் நிரபராதியான அவளை விட்டுவிடுமாறு இந்திரனிடம் கூறினார்.

அதற்கு இந்திரன் – இவளுடைய கர்ப்பத்தில் இரண்யகசிபுவின் குழந்தை இருக்கிறது. அவன் பிறந்து தன் தந்தையை விட அதிக அசுரன் ஆனால் என்ன செய்வது? என்று கேட்டான். அந்தக் குழந்தை பிறந்தவுடன், அதை மட்டும் கொன்றுவிட்டு தாயை விட்டுவிடுகிறேன் – என்று கூறினார். அதற்கு நாரதர், 'இந்திரனே, இவளுடைய கர்ப்பத்தில் இருப்பவன் அசுரன் அல்ல. மற்றும் அவனை நீ கொல்ல மாட்டாய். ஏனென்றால் அவன் பலி. அதாவது வலிமைக்கு முக்கிய அபிமானி ஆனதால், மகா வாயு தேவருக்கு பலி என்று பெயர். அவர் இந்த பகவத் பக்தனான பிரகலாதனின் நிலைத்திருக்கிறார். ஆகையால் இந்த மகன் பலி எனப்படுகிறான்.

அதோ ஷுசிஷ்மதிதேவி ஸுஷாத புத்ர முத்தமம் |
வாயுனா ச ஸமாவிஷ்டம் ஹரிபாதாப்ஜ ஸம்ஸ்ரயம் ||

(பிரம்மாண்ட கருட புராண அத்தியாயம் 38 ஸ்லோகம் 98).

பவித்ரமான கயாது தேவி, வாயு தேவர் நன்றாக நிலைத்திருக்கும், ஸ்ரீஹரியின் பாத கமலங்களை நன்றாக வணங்குபவள். அதனாலேயே உத்தம புத்திரன் ஆன பிரகலாதனை பெற்றாள்.

பிரகலாதன் பிறந்த பொழுதே, வாயு ஆவேசத்தைப் பெற்றவன் என்று வேதவியாசர் கூறியதால், அவன் பிறப்பதற்கு முன்பே தாயின் வயிற்றில் இருந்த பொழுது, வாயு ஆவேச உள்ளவன் என்று தனியாக சொல்லவும் தேவையில்லை. ஆகையால், ஞானிகளான நாரதர், கர்ப்பத்தில் இருந்த பிரகலாதனை வர்ணிக்கும் பொழுது பலி என்று கூறுகிறார். இத்தகைய ஆவேசத்தைக் கொண்ட பிரகலாதனுக்கும், பலி நாமாபிமானிதானத்தின் முக்ய பிராணதேவருக்கும் வலிமையைக் கொடுப்பவனான ஸ்ரீஹரி.

**482 பாணக்ன**

பலி சக்கரவர்த்தியின் மூத்த மகனான பாணாசுரன் சிவ பக்தனாக இருந்தான். பாணாசுரனின் மகளான உஷை, தன் நியத பதியான அனிருத்தனுடன் வாழ்வதாக கனவு கண்டாள். அவன் யார் என்று தெரியாமலேயே தவித்த பொழுது, அவளுடைய தோழியான சித்திரலேகா என்பவள் உஷையையை சமாதானம் செய்து, ஓவியம் வரைவதில் வல்லவளான அவள், அப்போதைய அனைத்து அரச குமாரர்களின் படங்களையும் வரைந்து காட்டினாள். அந்த படங்களில், கனவில் வந்த அனிருத்தனை உஷை கண்டாள். சித்திரலேகா, வான் மார்க்கத்தின் மூலமாக துவாரகையில் இருந்த அநிருத்தனை வரவழைத்தாள். உஷை காந்தர்வ விவாக விதிப்படி அவனை திருமணம் செய்துகொண்டாள். மகளின் அந்தப்புரத்தில் அனிருத்தன் இருந்த விஷயத்தை பாணாசுரன் அறிந்து அவனுடன் போர் புரியத் துவங்கினான்.

இந்த விஷயத்தை நாரதர் ஸ்ரீகிருஷ்ணனிடம் வந்து கூறினார். உடனே ஸ்ரீகிருஷ்ணன் பாணனின் பட்டணத்திற்கு வந்து, போர் புரிந்து, பாணனின் மிகப்பெரிய சைன்யத்தை தோற்கடித்தான். பாணனின் பட்டணத்தை சிவன் காத்து வருவதால், அவன் கிருஷ்ணனுடன் போர்புரிய வந்தார். ஆனால் அந்தப் போரில்

சிவன் தோற்றார். கிருஷ்ணன் பாணாசுரனைக் கொல்வதற்கு தயாரானபோது, சிவன் தன்னுடைய பக்தனான பாணனை கொல்ல வேண்டாம் என்று வேண்டிக்கொண்டான்.

ஸ்ரீகிருஷ்ணன் பாணனை கொல்லாமல், அவனுக்கு இருந்த ஆயிரம் தோள்களில் இரண்டு தோள்களை மட்டும் விட்டுவிட்டு, மற்ற அனைத்தையும் கத்தரித்தான். சிவனின் பிரார்த்தனைக்கேற்ப பாணனைக் காத்தான். அதுவரை பாணனின் தேகத்தில் இருந்து, ஹரியிடம் துவேஷம் செய்த பாணா என்னும் பெயருள்ள அசுரன், அந்த தேசத்தை விட்டு வெளியேறினான். பாணன் தன்னுடைய மகளான உஷையை அனிருத்தனுடன் அனுப்பி, அவளுக்கு தேவையான பரிசுகளை கொடுத்தான். இவ்வாறு கிருஷ்ண அவதாரியான ஸ்ரீஹரி.

**483 பிலகிரி நிலய பில – குஹா**

குஹா விஸிஷ்ட பர்வத என்றால் – வெங்கடகிரி. அங்கு இருக்கும் ஸ்ரீவெங்கடேஷ ரூபத்தில் இருக்கும் ஸ்ரீஹரி.

**484. முனி ஹ்ருன்னிலய.**

முனி+ ஹ்ருத் + நிலய. முனிகளின் இதயம் என்னும் நிலையம். வீட்டில் எப்போதும் வசிப்பவனான புருஷ என்று அழைக்கப்படுபவனான ஸ்ரீஹரி.

**485 புதமண்டல விராஜித**

ஞானிகளின் சமுதாயத்தில் வீற்றிருப்பவனான ஸ்ரீஹரி.

**486. போதயுத பந்தமோக்ஷகர**

ஸ்வகுணாச்சாதிகா என்னும் ப்ரக்ருதியினால் ஜீவாத்மனின் ஸ்வரூபத்தை மூடும் பகவந்தன், ஜீவாத்மனுக்கு தன் ஞானம் வராதவாறு செய்கிறான். பரமாச்சாதிகா என்னும் ப்ரக்ருதியினால் பகவந்தன், தன் ஞானத்தை குணங்களின் ஞானத்தினாலும், பகவந்தனின் ஸ்வரூப ஞானத்தினாலும், ஹீனனானதால் அவன் சம்சாரத்தில் விழுமாறு செய்யும் பகவந்தனே எந்த ஜீவாத்மனைப் பற்றி ப்ரசன்னன் ஆகிறானோ அத்தகைய ஜீவாத்மனை, இந்த இரு வித ப்ரக்ருதிகளாலும் விடுதலை செய்து, அவன் பகவந்தனின் ஸ்வரூபத்தின் மற்றும் தன் ஸ்வரூபத்தைப் பற்றி சரியான

அறிவினைப் பெறுமாறு அருளி, ஞானிகளுக்கு இருந்த பந்தனத்தை விடுவித்து, அவருக்கு முக்தியைக் கொடுக்கிறான். இவ்வாறு போதயுத பந்த மோட்சபிரதனான ஸ்ரீஹரி.

மன ஏவ மனுஷ்யாணாம் பந்த மோட்சயோ: காரணம் |

பந்த மோட்சத்திற்கு மனமே காரணம். மனோ நியாமகனான பகவந்தன், மானவர்களால் பாப புண்யங்களின் கர்மங்களை செய்வித்து, அவற்றிற்கு தக்கவாறு பலன்களைக் கொடுத்து, நித்ய சம்சாரத்தில் விழுமாறு அல்லது மோட்சத்தை அடையுமாறும் செய்பவனான, மனோ நியாமகனான ஸ்ரீஹரி.

**ப$^4$த்ரபத$^3$ பா$^4$வுகபி$^4$ஷ$^2$க்$^3$வர**
**ருத்$^3$ர பீ$^4$கர பு$^4$க்திதா$^3$ தா$^3$**
**ரித்$^3$ர்யதூ$^3$ரக பூ$^4$ரிபூ$^4$தித$^3$ பே$^4$த$^3$வாதீ$^3$ஷா |**
**ஹ்ருத்$^3$ருஜஹன் பை$^4$ஷ்மீஷ போ$^4$ஜேஷா**
**க$^4$த்$^3$ரி குலிஷ குஷஸ்த$^2$ளோக ஸோ**
**பத்$^3$ரவார்த்த$^3$க பௌ$^4$மவரப்ரத$^3$ ப$^4$ங்க$^3$ரதித நமோ || 35**
**(மேலுள்ள இந்த நுடி – ப$^4$: - அக்ஷரமாலை இருக்கிறது)**

**487 பத்ரபத**- மங்களகரமான பதங்களைக் கொண்ட ஸ்ரீஹரி.

**488 பாவுகபீஷ்டக்வர**
தன் பக்தர்களுக்கு வரங்களைக் கொடுப்பவனான ஸ்ரீஹரி.

**489 ருத்ரபீகர**
ருத்ரதேவனுக்கும் பயத்தைக் கொடுப்பவனான பயங்கரமான ஸ்ரீஹரி.

**490 புக்திதா**
பகவந்தன், ஜீவாத்மர்களின் கண், காது முதலான இந்திரியங்களில் இருந்துகொண்டு, தான் மட்டும் ஷுப போகங்களையே விஷய பதார்த்தங்களில் இருக்கும் சாரபாகத்தை ஏற்றுக் கொள்கிறான். (கீதை 15ம் அத்தியாயம். ஸ்ரீமத் பாகவதம் 4-23-64) அஸ்வதந்த்ரனான ஜீவாத்மர்கள், அஸாரபாகங்களையே போகிக்கின்றனர். பகவந்தனின் அருளால் மட்டும் ரூபத்தில்

போக்த்ரு ஜீவரில் சங்கர்ஷண மற்றும் பிரத்யும்ன ரூபங்களால் இருந்து, அவருக்கு போக்த்ருத்வ சாமர்த்தியத்தை அருள்கிறான். மற்றும் தான் 'அன்னாத' என்று அழைத்துக் கொள்கிறான். இவ்வாறு 'புக்திதா' ஆன ஸ்ரீஹரி. (ஐதரேய உபநிஷத் பாஷ்ய 2-2, 1-2)

**491 தாரித்ர்யதூரக**

குசேலனின் (ஸுதாம) பக்திக்கு மெச்சி, அவன் எதையும் கேட்காவிட்டாலும், அவனுக்கு அனைத்து செல்வங்க்ளையும் அருளியதைப் போல, தன் பக்தர்களின் தாரித்ர்யத்தை போக்குபவனான ஸ்ரீஹரி.

**492 பூரிபூதித**

1. நாமம் 301 சாருகணஸ்ருத்குக்ஷி 2. 356 ஜடரந்ருப 3. 400 பிரதம புருஷ – பார்க்கவும்.

**493. பேதவாதீஷா.**

1. ஜீவஜீவபேத 2. ஜீவ ஜடபேத 3. ஜீவ ஈஷ பேத 4. ஜடஜடபேத 5. ஜட ஈஷ பேத – என்ற பஞ்சபேதங்களை தெரிவிக்கும் மதத்தை நிறுவியவரான வாயுதேவரின் மூன்றாவது அவதாரியான ஸ்ரீமத்வாசார்யரின் பிரபுவான ஸ்ரீஹரி.

**494. ஹ்ருத்ருஜஹன்**

ஹ்ருத் + ருஜ + ஹன். இதய நோய்களை அழிப்பவனான ஸ்ரீஹரி.

**495. பைஷ்மீஷ**

பைஷ்மி – பீஷ்மக ராஜனின் மகள். ஈஷ – பதி – வல்லப. நாம 755 'அஷ்டமஹிஷெயர' பார்க்கவும்.

**496 போஜேஷ & 497 அகத்ரிகுலிஷ**

போஜகசா என்னும் பட்டணத்தின் தலைவன் ருக்மி. அவனில் இருந்த தான் ஒரு பலசாலி என்னும் கர்வ பர்வதத்தை, தன் வஜ்ராயுதத்தால் தாக்கிய ஸ்ரீகிருஷ்ணாவதாரியான ஸ்ரீஹரி.

**498. குஷஸ்தளோக** - குஷஸ்தள + ஓக = வீடு.

**499. ஸோபத்ரவார்தக**

குஷஸ்தள + ஓக + ஸோபத்ரவ + அர்த்தக. த்வாரகா பட்டண + வீடு + மிகவும் தொந்தரவு + நாசம் செய்பவன். த்வாரகா பட்டணம் – ஸ்ரீகிருஷ்ணனின் முக்கிய தலை நகரம். இங்கு முதலில் ஸ்ரீராமன் குஷனுக்காக ஒரு பட்டணத்தை நிர்மாணம் செய்தான். ரேவத என்னும் அரசன், இங்கு வெகு காலம் அரசாட்சி செய்தான். இதே பிரதேசத்திலேயே விஷ்வகர்மனால் த்வாரகா நகரியை நிர்மாணம் செய்தவனான ஸ்ரீகிருஷ்ணாவதாரியான ஸ்ரீஹரி.

கம்சனை கொன்ற காரணத்தால் அவனுக்கு பெண் கொடுத்த மாமனான ஜராசந்தன் தன் துஷ்ட சேனையை அழைத்துக்கொண்டு வந்து த்வாரகை மேல் போருக்கு வந்தான். இத்தகைய அந்த த்வாரகா நிவாசியின் தொந்தரவுகளை தடுத்தவனான கிருஷ்ணாவதாரியான ஸ்ரீஹரி.

**500. பௌமவர ப்ரத**

பூமிபிரதனான நரகாசுரனுக்கு பூதேவியின் கோரிக்கையைப் போல வைஷ்ணவாஸ்திர வரத்தினை கொடுத்தவனான ஸ்ரீஹரி.

**501. பங்கரஹித**

ஷட்குணைஷ்வர்ய சம்பன்னனான ஸ்ரீஹரியின் சங்கல்பத்திற்கு எந்த காலத்திற்கும், எந்த வகையிலும், யாராலும் பங்கம் வராததால், சத்யசங்கல்பனாகவும், பங்க ரஹிதனாகவும் இருப்பவனான ஸ்ரீஹரி.

**மகரத்$^4$வஜ ஜிததமாஸ கா$^2$மிதா**
**ப$^4$குலஜீவனமீன முரலீத$^4$**
**ரகர மூலகவீந்த்$^3$ர மேத்$^4$யசரித மைது$^3$னபா |**
**ஸுகரமோஹக மௌனிபூஜித**
**சகிதகரனுஜீந்த்$^3$ர கருணாம்**
**ப$^3$க ப$^3$காந்தக மஞ்சுஹாஸ மஹாதி$^4$ராஜ நமோ || 36**

**502. மகர த்வஜஜித தம**

மகரத்வஜ + ஜிததம. காமனை வென்றவர்களில் சிறந்தவனான ஸ்ரீஹரி.

**503. அஸகா**

நண்பர்கள் இல்லாதவன். தன் செயல்களுக்கு வேறு எவரின் விருப்பமும் தலையிடாதவாறு, தன் விருப்பத்திற்கேற்பவே அவற்றை செய்து நிறைவேற்றிக் கொள்பவனான ஸ்ரீஹரி.

**504. அமிதாபகுல ஜீவன மீன**

அமித+ அபி+ குல+ ஜீவனமீன. அபாரமான + காந்தி உள்ளவன். அதாவது தேவதைகள். அபாரமான காந்தியுள்ள தேவதைகளின் குழுவிற்கு ஜீவனபிரதனானவனான ஸ்ரீஹரி.

**505. முரளீதரகர**

தன் கையில் முரலி (குழல்) பிடித்துக்கொண்ட, கிருஷ்ணாவதாரியான ஸ்ரீஹரி.

**506. மூலகவிந்த்ர**

பகவந்தன் அனாதி அனந்த காலத்தில் யதார்த்த பதார்த்தங்களின் ஸ்ருஷ்டியை நடத்துகிறான் என்று சொல்வதான ஈஷாவாஸ்ய உபநிஷத்தில், ஜகத் ஸ்ருஷ்டிக்கு தேவையான ஸர்வக்ஞத்வத்தை 'கவி' என்னும் சொல்லை பயன்படுத்தி சொல்கிறார். (ஈஷாவாஸ்ய உபநிஷத் 1-8).

ரிக்வேதத்தில் இந்திர நாமக பகவந்தனை சர்வக்ஞ என்னும் அர்த்தத்தில் 'கவி' என்று சொல்லப்பட்டிருக்கிறது. (ரிக்வேத 11-4) மற்றும் மந்திரார்த்த மஞ்சரி. என்னை எப்போதும் நினைத்துக் கொண்டிரு – என்று அர்ஜுனனுக்குக் கூறிய கீதாசார்யன், தன்னை எப்படியாக சிந்திக்க வேண்டும் என்பதை சொல்லியவாறு, சர்வக்ஞனாக இருப்பதால் 'கவி' என்றும்கூட தன்னை தியானிக்க வேண்டும் என்று சொல்கிறான். (ஸ்ரீமத் பகவத்கீதை 8-9 மற்றும் கீதா பாஷ்யம் 8-9).அனைத்து தேவதைகளின் கவியும் நீயே ஆகியிருக்கிறாய் என்று பிராம்ஹத்தில் பகவந்தனை அழைத்து வணங்கப்பட்டிருக்கிறது. இவ்வாறு மூல கவீந்திரனானவனான ஸ்ரீஹரி.

**507. மேத்ய சரித**

மேத்ய – பவித்ரம். பவித்ரமான சரித்திரத்தைக் கொண்டவனான ஸ்ரீஹரி.

**508. மைதுனபா**

தன் மைத்துனன் (தங்கை சுபத்திரையின் கணவனான) அர்ஜுனனை காத்தவனான கிருஷ்ணாவதாரியான ஸ்ரீஹரி.

**509. ஸுகர மோஹக**

அற்புத கர கமலங்களைக் கொண்டவனாக கோபிகா ஸ்த்ரீயர்களுக்கு மோகத்தை உண்டு பண்ணிய கிருஷ்ணாவதாரியான ஸ்ரீஹரி.

**510. முனி பூஜித**

முனிவர்களால் எப்போதும் மானஸ பூஜை செய்யப்படுபவனான ஸ்ரீஹரி.

**511. சகிதகரனுசேந்திர**

அனுஜ+இந்திர – சிறந்த தம்பி – பரதன். நாம 50 'பரத பாலக' பார்க்கவும்.

**512. கருணாம்பக**

கருண + அம்பக – கண்கள். கருணையுடனான பார்வையை உடையவனான ஸ்ரீஹரி.

**513. பகாந்தக**

பக+அந்தக (ஹந்தக). கம்சனின் சேவகனான பகரூபி அசுரனை சம்ஹரித்தவனான, கிருஷ்ணாவதாரியான ஸ்ரீஹரி.

**514. மஞ்சுஹாஸ**

எப்போதும் புன்னகை புரிந்தவாறு இருப்பவனான கிருஷ்ணாவதாரியான ஸ்ரீஹரி.

**515. மஹாதிராஜ**

பாண்டவர்கள் செய்த ராஜசூய யாகத்தின் இறுதியில், சர்வஸ்ரேஷ்டன் என்று யாரை பூஜிக்க வேண்டும்? அனைவரும் இப்படியாக சர்ச்சை செய்து, அந்த அக்ர பூஜைக்கு ஸ்ரீகிருஷ்ணனே தகுதியானவன் என்று நிர்ணயித்து, அதன்படியே தர்மராஜன் அவனுக்கு அக்ரபூஜை செய்தான். இத்தகைய மஹாதிராஜனான கிருஷ்ணாவதாரியான ஸ்ரீஹரி.

**யக்ஞ பி⁴க்ஷுக யக்ஞரத இம்**
**த்³ராக்ஞா தூ³ஷக ஈஷணாத்⁴ருத**
**ஸுக்ஞராட்³யுக³ மூக³ஸம்ப⁴வ மூத²போத்தம்ஸ |**
**அக்ஞபி⁴த்³யேகேஷ மௌனிக³**
**ணக்ஞ மௌவ்வனபும்ஸ மந்த்ரா**
**ர்த்த²க்ஞ போஷ²க கிங்கரோத்⁴ருத காமகாஷ்ட² நமோ || 37**
**(மேலுள்ள இந்த நுடியில் – யா, யே, யீ, யு, யெ, யை, யோ, யம் ய: – அக்ஷரமாலை இருக்கிறது)**

**516 யக்ஞபிக்ஷுக**
பிரகலாதனின் பேரனான பலி நடத்திய யக்ஞத்தில், வடு ரூபத்தில் வந்து, அவனிடம் மூன்று பாத பூமியை தானமாகப் பெற்றவனான வாமனாவதாரியான ஸ்ரீஹரி. நாம 1. 70 - த்ரிவிக்ரம 2. 73 - வாமன 3. 196 உபேந்திர – பார்க்கவும்.

**517 யக்ஞரத**
யக்ஞத்தை விரும்புபவர்களான ராம மற்றும் கிருஷ்ண அவதாரியான ஸ்ரீஹரி

**518 இந்திராக்ஞா தூஷக**
நாம 1. ஷக்ர அர்ச்சித பதாப்ஜ – பார்க்கவும்.

**519. ஈஷணார்த்ருத ஸுக்ஞராட்யுக மகஸம்பவ**
ஈஷண = ஈஷணத்ரய – தாரேஷண, புத்ரேஷண, வித்தேஷண. மனைவி, மக்கள், செல்வத்தின் மேல் உள்ள மோகம். அர்த்ருத – புறக்கணித்த. ஸுக்ஞராட்யுக – சுக்ஞராட + யுக – ஞானஸ்ரேஷ்டரான இருவர். மக – யக்ஞ. சம்பவ – தோன்றிய.மோகத்தை புறக்கணித்த ஞான ஸ்ரேஷ்டரான பிரம்ம வாயுகள் இருவரும் நடத்திய யக்ஞத்தில் தோன்றிய ஹயக்ரீவ ரூபத்தின் ஸ்ரீஹரி.

**520 யூதபோத்தம்ஸ**
யூத – யானைகளின் கும்பல். உத்தம்ஸ – சிறந்த. யூத உத்தம்ஸ + ப – ஸ்தானத்தின் அடிப்படையில். நாம 74 - நக்ர சிக்ஷக – பார்க்கவும். பக்த சமுதாயத்தினை அருள்வதில் சிறந்தவனான ஸ்ரீஹரி.

**521 அஞ்ஞபித்** - அஞ்ஞானத்தை நாசப்படுத்துபவனான ஸ்ரீஹரி.

**522 ஏகேஷ** - 14 உலகங்களுக்கும் ஒருவனே தலைவனான ஸ்ரீஹரி

**523 முனிகணக்ஞ**
முனிகண+க்ஞ. முனிவர்களின் குழுவினரால் அறியப்படுபவனான ஸ்ரீஹரி

**524 யௌவ்வன பும்ஸ** - நித்ய தருணனான ஸ்ரீஹரி

**525 மந்த்ரர்த்தக்ஞ போஷக**
மந்திரத்தின் அர்த்தங்களை அறிவந்தவனை அருள்பவனான ஸ்ரீஹரி

**526 கிங்கரோத்ருத காமகேஷ்ட**
காமகஷ்டங்களை தன் கிங்கரர்களால் தூரப்படுத்துபவனான ஸ்ரீஹரி

**ரஸிகராஜிப ராஜ்யசக்ரப**
**வஸு பரிக்ஷப குலபரீக்ஷிப**
**பரர பாந்த[2]ப ருஜிகு[3]ணௌக[4]ப ரூப ப[3]ஹுரூபா |**
**அஸுப ரேதோத்ப[4]வப ரைக[3]ப**
**ரஸப ரோரௌப்ய நக[3]பபா**
**குஸும பா[3]ணப ரங்கா[3]க்ஷேத்ரப ரஹஸ்ய பால நமோ || 38**
**(மேலுள்ள இந்த நுடியில் ரஹ = ர: என்று பயன்படுத்தியுள்ளார்).**

**527 ரஸிகருஜிப**
ஸௌந்தர்ய பிரதானகளாக இருக்கும் பெண்களை வழி நடத்துபவனான ஸ்ரீஹரி. பகவந்தன், ஸௌந்தர்ய ப்ரதானராக இருக்கும் வாம எனப்படும் பெண்களை வழி நடத்துபவன் ஆகையாலேயே 'வாமுனி' என்று அழைத்துக் கொள்கிறான் என்று சாந்தோக்ய உபநிஷத் சொல்கிறது. நாம 73 வாமன பார்க்கவும்.

**528 ராஜ்ய சக்ர்ப**
ராஜ்ய சக்கரத்தை அருள்பவனான ஸ்ரீராமாவதாரியான ஸ்ரீஹரி.

**529 வஸு பரிக்ஷப**

அஷ்ட வசுக்களில் சிறந்தவரான பீஷ்மாசார்யரை பரிட்சை செய்து அருளியவனான கிருஷ்ணாவதாரியான ஸ்ரீஹரி.

**530 குல பரீக்ஷிப**

ஞானிகுலத்தில் சேர்ந்தவர்களை பரிட்சை செய்து காப்பவனான ஸ்ரீஹரி.

**531 பரர**

பர – சிறந்தவளான லட்சுமிதேவி. அவளை மகிழ்விப்பவன் ஆகையால் பரர ஆனவனான ஸ்ரீஹரி.

**532 பாந்தப**

மோட்சத்தின் வழியை பிடித்தவர்களை காப்பவனான ஸ்ரீஹரி

**533 ருஜிகுணௌகுபரூப**

ருஜி – ஒளி. ஒளி முதலான குணங்களின் சமுதாயத்தினை அருளும் ரூபத்தைக் கொண்டவனான ஸ்ரீஹரி

**534 பஹுரூபா** - நாம 143 பஹுள ஜீவந்தரீய பார்க்கவும்.

ஸ்ரீஹரி சர்வஷப்த வாச்யன் என்று ஐதரேய உபநிஷத் சொல்கிறது. அனைத்து லௌகிக வைதிக ஷப்தங்கள் முக்கியமாக ஸ்ரீஹரியின் நாமங்களே ஆனதால், ஸ்ரீஹரி சமஸ்த குணபூர்ணன் என்று தெளிவாக புரிகிறது. உதாரணத்திற்கு: ஸ்ரீஹரி எப்படி சர்வஷப்த வாச்யன் என்று பார்க்கலாம்.

ஸத்ய – ஷப்த வாச்யனான ஸ்ரீஹரி 'ஸ ஏஷ பகவான் விஷ்ணு: ஸத்யமித்யபிதீயதே; ஸர்வோத்தமத்வாத் பூர்ணத்வாத் ஸர்வக்ஞத்வாத் ததைவச'. ஸத் என்றால் ஸர்வோத்தம. குணபூர்ணன். ய என்றால் சர்வக்ஞ. இப்படி ஸ்ரீஹரி ஸத்ய ஷப்த வாச்யன். பித்ருத்வாத் பரமேஷிது: தன்னாமாப: – ஸர்வோத்தமனும், ஸர்வ நியாமகனும் அனைவருக்கும் பித்ருபூஷணனாகையால் 'ஆப:' ஷப்த வாச்யன். அனைத்து ஷப்தங்களுக்கும் ப்ரவ்ருத்தி நிமித்தத்வேன பரம முக்யார்த்தமாக ஸ்ரீவிஷ்ணுவிடமே சங்கம் ஆகின்றன.

யோ தே வா நாம் நாமதா ஏக ஏவதம் ஸம்ப்ரஷ்னம் புவனா யந்தன்யா - அவனையே இந்திரன் என்றும், வருணன் என்றும், அக்னி என்றும் சொல்கின்றனர். முக்கியமாக அந்த நாமங்கள் அனைத்தும் அவனுடையதே ஆகின்றன. நாமானி ஸர்வாணி யமா விஷந்தி தம் வை விஷ்ணும் பரம முதாஹரந்தி. ஸர்வோத்தமனான ஸ்ரீஹரியையே அனைத்து நாமங்களும் அடைகின்ரன. இவ்வாறு 'அனந்த நாமகத்வாச்ச ஸோனந்த குண ஈரத:'. அவனுக்கு அனந்த நாமங்கள் இருப்பதால் அவன் அனந்த குண பரிபூர்ணன். இதையே 'அனந்தரூபோஹி ஹரி: ஷப்தோ ப்யேஷஹ்யனந்ததா' என்னும் பாஷ்ய வசனம் சொல்கிறது.

விஷ்ணு சஹஸ்ரநாமம் அனந்த ரூபங்களை ப்ரதிபாதிக்கிறது. இதற்கு வியாக்யான ரூபமான ப்ருஹதி சஹஸ்ரமும், ஸ்ரீஹரியின் அனந்த நாமங்களின் மகிமையை சொல்கிறது. இவ்வாறு கூறிய ஸ்ரீஹரி அனந்த ரூபங்களுக்கு பேதம் இல்லை. ஸ்ரீஹரியின் அவதாரங்களிலோ, ரூபங்களிலோ சிறிதளவும் பேதம் இல்லை ஆனாலும், தன் அற்புத அசிந்த்ய ஐஷ்வர்யத்தினால் ஸ்ரீஹரி ஒருவனாக இருந்தாலும், பஹுரூபங்களைக் கொண்டவனாக பேதம் உள்ளவனாக வீற்றிருப்பவனான ஸ்ரீஹரி.

பஷ்ய மே பார்த்தரூபாணி ஷதஷோऽத ஸஹஸ்ரஷ: |
நானா விதானி திவ்யானி நானாவர்ணாக்ருதீனி ச ||5
(கீதை 11-5).

ஹே பார்த்தனே. நூறு ஆயிரம் எண்ணிக்கைகளின் ரூபங்களின், விதம்விதமான திவ்யமான பஹுவர்ணாகிருதிகளான நீ.

ஸ ஏகதா பவதி த்ரிதா பவதி பஞ்சதா |
ஸப்ததா நவதா சைவ புனஸ்சைகாதஷ: ஸ்ம்ருத: |
ஷத ச தஷைகஸ்ச ஸஹப்ராணி ச விம்ஷதி: ||
(சாந்தோக்ய உபநிஷத் 16)

1,3,5,7,9,11,111,1000 என்று விருப்பத்திற்கேற்ப அனேக ரூபங்கள் உள்ளவனாக ஆகிறான்.

பஞ்சாத்மக: ஸபகவான் த்விஷடாத்மகோऽபூ

த்தஞ்சத்வியே ஷத சஹஸ்ர ரோऽமிதஸ்ச |
ஏக: ஸமோப்யகில தோஷஸமுக்ய இதோऽபி
ஸர்வத்ர பூர்ணகுணகோऽபி பஹுரூபமோऽபூத் |
(தாத்பர்ய நிர்ணய 1-10).

பஞ்சரூபியான அந்த பரமாத்மன் 12 ரூபங்கள் கொண்டவன். 10 ரூபங்கள் கொண்டவன். 100 ரூபங்கள் உள்ளவன். 1000 ரூபங்கள் உள்ளவன். அனேக ரூபங்களைக் கொண்டவன். அமித ரூபங்கள் கொண்டவன். அனந்தமானவன். அபின்னன் (வேறுபாடு அற்றவன்). சர்வரூபங்களில் (தேஷ காலங்களால்) சமம் ஆனாலும், சர்வதோஷங்கள் யாரும் அற்றவன். பலவிதங்களான ஜீவாதிகளின் சாத்ருஷம் கொண்டவன் ஆகிறான்.

1. நாராயண, வாசுதேவ, சங்கர்ஷண, பிரத்யும்ன, அனிருத்த என்னும் 5 ரூபங்கள். 2. கேசவ, நாராயண முதலான 12 ரூபங்கள் 3. மத்ஸ்ய முதலான 10 ரூபங்கள் 4. நாராயண முதலான 100 ரூபங்கள் 5. விஷ்வ முதலான 1000 ரூபங்கள் 6. பர முதலான பலவித ரூபங்கள் 7. அஜித முதலான அபரிமித ரூபங்கள் 8. இந்த ஸ்ரீபகவந்தனுக்கு ஜீவர்களைப் போல ஸ்வாபாவிக பஹுத்வம் இல்லை. ஆகையால், பகவத்ரூபங்களில் பேதத்தை சிந்திக்கக்கூடாது.

**535 அஸுப**

அனைத்து ஜீவிகளின் பிராணத்தை காப்பவனான ஸ்ரீஹரி

**536 ரேதோத்பவப**

புருஷ ரேதஸ் ஸ்த்ரி கர்ப்பத்தில் சேர்ந்து, தக்க காலத்திற்குப் பிறகு ஸ்த்ரி கர்ப்பத்திலிருந்து பிறந்து வருவதான மானவ, சதுஷ்பாத பிராணிகள் முதலான ஜீவிகளின் ரக்ஷணையை செய்பவனான ஸ்ரீஹரி.

**537 ரைகப**

ரை – செல்வம். க – அடைந்திருப்பவன். செல்வத்தை வைத்திருப்பவனான குபேரன் ஆகியோர்களை அருள்பவனான ஸ்ரீஹரி

**538 ரஸப** - ரஸத்தை பின்பற்றுபவர்களில் சிறந்தவரான ஸ்ரீஹரி

**539 ரோரேப்யனகப**

ரோ+ரேப்ய+னதபபா. ரோ-விசேஷமாக ஒளிரும். ரேப்ய – வெள்ளியைப் போல. விசேஷமாக வெள்ளியைப் போல ஒளிரும் பர்வதத்தை காப்பவனான ஸ்ரீஹரி.

**540 குஸுமபாணப**

பூவினால் ஆன பாணங்களைக் கொண்ட காமதேவனை காப்பவனான ஸ்ரீஹரி.

**541 ரங்காக்ஷித்ரப**

ஸ்ரீரங்க க்ஷேத்திரத்தின் தலைவன் மற்றும் காப்பவனான ஸ்ரீஹரி

**542 ரஹஸ்யபால**

வாழ்க்கையின் ரகசியம். வேத ரகசியம் முதலான ரகசியங்களை காப்பவனான ஸ்ரீஹரி

**லவஜனக லாக4வகராஜ்ப லி**
**ப்தவிமல ஸ்ரீசந்த3னாங்க3 லீ**
**லாவினோத3 வனசரபாவன லுப்தவது4 ப2ல போ4க்தா |**
**மலாப4 போ3த4க ப4வஜபாக்ஷர**
**அதீஷ மோஹமத3 விரஹித லோப4**
**க்4ன லௌகிக ப்ரவஹேத லங்கௌக ஸார்த்த3க லுப்ததுஷ்ட நமோ || 39**
**(மேலுள்ள இந்த நுடியில் லூ, லெ, லை மற்றும் ல: வந்திருக்கிறது).**

**543 லவஜனக**

லவ, குஷ இருவரும் ஸ்ரீராமசந்திரனின் மக்கள். ஆகையால், லவ-ஜனகனான ஸ்ரீராமாவதாரியான ஸ்ரீஹரி

**544 லாகவ கராப்ஜ**

சம்சாரத்தின் பாரத்தை குறைக்கும் கர கமலங்களைக் கொண்டவனான ஸ்ரீஹரி.

**545 லிப்த விமல & 546 ஸ்ரீசந்திரனாங்க**

நிர்மலமான மற்றும் சிறந்ததான ஸ்ரீசந்தனத்தை பூசிக்கொண்ட அப்ராக்ருத சரீரத்தைக் கொண்டவனான ஸ்ரீஹரி

**547 லீலா வினோத**

லீலையினால் அவதாராதிகளை ஏற்றவனான ஸ்ரீஹரி

**548 வனசர பாவன**

சுக்ரீவ, அங்கத, ஹனுமந்த, நல, நீல, முதலான கபிகளுக்கும், ஜாம்புவந்த முதலான வனசர கரடிகளுக்கும், தன் சேவையின் சந்தர்ப்பத்தைக் கொடுத்து, அவர்கள் அனைவரையும் புனிதனாக்கிய ஸ்ரீராமாவதாரியான ஸ்ரீஹரி.

**549 லுப்தவது பல போக்தா**

ஸ்வர்க்க லோகத்தில் இருந்த ஒரு அப்சரா ஸ்த்ரி, சசிதேவியின் சாபத்தினால் ஷபர (வேடர்) குலத்தில் ஷபரி என்னும் பெயரில் பிறந்தாள். மதங்க ரிஷிகளின் அருகில் ஆசிரமம் கட்டிக்கொண்டு ராமனின் தரிசனத்தை விரும்பி இருந்தாள். ராமன் அந்த ஆசிரமத்திற்கு வந்தபோது அவனை பழ, புஷ்பாதிகளால் பூஜித்து, அந்த ராமனின் சன்னிதானத்திலேயே அவனின் ஆணைக்கேற்ப அக்னி பிரவேசம் செய்தாள். அந்த சபரியை சாப விமோசனம் செய்வித்து, ஸ்வர்க்கத்தின் அப்சரையாக மாற்றி, மதங்க ரிஷிகள், 'ராமன், தன் தம்பியுடன் இங்கு வந்து, உன் சாபத்தை போக்குவான்' என்று கூறிய வாக்கினை உண்மையாக்கினான்.

பிறகு கபந்தனால் குறிப்பிடப்பட்ட வழியை அனுசரித்து பம்பா தீரத்திற்கு வந்தான். இவ்வாறு தன்னிடமே பக்தி வைத்து ஷபரி, கொடுத்த பழங்களை தின்ற ராமாவதாரியான ஸ்ரீஹரி.

**550 அமலாப** - நிர்மலமான ஒளி பொருந்தியவனான ஸ்ரீஹரி

**551 போதக** - சரியான ஞானத்தைக் கொடுப்பவனான ஸ்ரீஹரி

**552 பவஜப**

பவ – மர்த்ய லோகத்தில் பிறந்தவர்களை காப்பவனான ஸ்ரீஹரி

**553 அக்ஷர**

க்ஷர – அழிவு. அக்ஷர – அழிவு இல்லாத. அழிவுகள் நான்கு விதங்களாக இருக்கின்றன. 1. பானை முதலியன ஸ்வரூப நாசத்தையும். 2. ஜீவர்கள் சரீர நாசத்தையும் 3. துக்கம் அடையும் நாசத்தையும்; ஸ்ரீலட்சுமிதேவி 4. அபூர்ணத்வா நாசத்தையும் அடைந்தால், பகவந்தன் இந்த விதமான எவ்வித அழிவும் இல்லாதவனாக அக்ஷர என்று அழைக்கப்படுகிறான். (கீதா தாத்பர்ய 2-17).

கடோபனிஷத் பகவந்தனை நித்யங்களிலும் நித்யமாக இருக்கிறான் என்று சொல்கிறது. (கடோபனிஷத் 2-3-1). எந்த காலத்திலும் அழிவு இல்லாதவன் பகவந்தனே என்று கீதாசார்யன் கூறியிருக்கிறான். கீதை (2-17).

ஜடப்ரக்ருதி, சேதன ப்ரக்ருதி என இருவரும் பகவந்தனைப் போலவே அக்ஷர எனப்படுகின்றன. ஆனால் ஜடப்ரக்ருதி அபராக்ஷர எனப்பட்டால், சேதன ப்ரக்ருதி பரமாக்ஷர எனப்படுகிறது. பகவந்தனோ பரத: பரமாக்ஷரஷ என்றும் அழைக்கப்படுபவனான ஸ்ரீஹரி.

**552-553 பவஜபாக்ஷர**

பவ என்றால் ருத்ர தேவரால் ஜபிக்கப்படும் ராம ரூப நாமாக்ஷர உள்ளவனான ஸ்ரீஹரி.

**554 அதீஷ** - ருத்ர தேவரை கூடிக்கொண்டு இருந்தவனான ஸ்ரீஹரி.

**மோஹமதவிரசித**

**555 மோஹ விரஹித. & 556 மத விரஹித**

எந்த விதமான மோகத்திலும் ஈடுபடாமல் இருந்து, தன்னில் இருந்த அதிசய சக்திகளைப் பற்றி கர்வம் கொள்ளாமல் இருப்பவனான ஸ்ரீஹரி.

**557 லோபக்ன**

நற்கதியை கொடுப்பதற்காக தன் பக்தர்களின் லோப – ஆசையை அழிப்பவனான ஸ்ரீஹரி.

**558 லௌகிக ப்ரவஹேத**

உலகத்தில் வ்யாப்தனான ப்ரவஹ வாயுவினால் பூஜிக்கப்படுபவனான ஸ்ரீஹரி

**559 லங்கௌஷ ஸார்த்தக**

ஓக- வீடு. லங்கா பட்டணமே வீடாக உள்ளவனான ராவணனை அழித்தவனான ஸ்ரீராமாவதாரியான ஸ்ரீஹரி

**560 லுப்த & 561 துஷ்ட நமோ**

பக்தர்கள் மேல் லோபம் உள்ள மற்றும் அவரின் பூஜையினால் மகிழ்பவனான ஸ்ரீஹரி

**வக்த்ருவர வால்மீகி க்ருதீஷ வி**
**விக்தமதி பரரீஷ க$^3$திப்ரத$^3$**
**வ்யக்த ஸுசரித பூர்த்$^4$வபட ப்ரஸ்தா$^2$ப வேத்$^3$ய நமோ |**
**ரிக்தப$^4$ய வைதே$^3$ஹி மனோஹர**
**த்யக்தப்ருக்ருத வொம்பே$^1$ஷதா$^4$க்ஷயா**
**த்$^3$யுக்திவாசக வந்த்$^3$யவந்தி$^3$த வஹகவாஹக நமோ || 40**
**(மேலுள்ள இந்த நுடியில் – வீ, வு, வௌ – அக்ஷரமாலை வந்திருக்கிறது).**

**562 வக்த்யவர / வால்மிகி க்ருதிஷ**

சிறந்தவனான வால்மிகியின் கிருதியான ராமாயணத்தில் புகழப்படுபவனான ஸ்ரீஹரி.

**563 விவிக்தமதி பரரீஷ**

ஏகாந்த ப்ரியபக்தருக்கு தலைவனான ஸ்ரீஹரி

**564 கதிப்ரத**

ஜீவாத்மர்கள் தத்தம் கர்மங்களால் ஸ்வர்க்காதி சுகபலன்களையும், அத்தகைய தமஸ் முதலான துக்க பலன்களையும் அடையுமாறு அருள்பவனான, கதியை கொடுப்பவனான ஸ்ரீஹரி

**565 வ்யக்த ஸுசரித**

ராமகிருஷ்ணாதி அவதாரங்களில் தன் நற்சரித்திரங்களை வெளிப்படுத்தியவனான ஸ்ரீஹரி

**566 வோர்த்வபட ப்ரஸ்தாப**

வோர்த்வபட – திகம்பரர். திகம்பரர்களை யோக்ய ஸ்தானத்தில் வைப்பவனான ஸ்ரீஹரி.

**567 வேத்யனமோ**

சஜ்ஜனர்களாலும் ஞானிகளாலும் நன்றாக அறியப்படுபவனான ஸ்ரீஹரி

**568 ரிக்தபய**

யார் மூலமாகவும், எந்த காலத்திலும், எந்த நிலையிலும், எந்த தேசத்திலும், எந்த வகையிலும் பயம் இல்லாதவனான ஸ்ரீஹரி

**569 வைதேஹி மனோஹர**

வைதேஹி – வைதேஹ தேசத்தை சேர்ந்தவளான சீதாதேவி. மனோஹர – மனதை வென்றவன். ஸ்ரீலட்சுமிதேவியின் அவதாரளான சீதாதேவியின் மனதினை வென்றவரான ஸ்ரீராமாவதாரியான ஸ்ரீஹரி

**570 த்யக்த ப்ராக்ருத**

ப்ராக்ருத அம்ச இல்லாதவனாக அப்ராக்ருத ரூபத்தைக் கொண்டவனான ஸ்ரீஹரி

**571, 572, 573, 574, 575 வௌம்பௌஷதாக்ஷ யாத்யுக்திவாசக**

வ+உ+ஓம்+ப+ஔஷத – ஆதி உக்தி வாசக. இந்த அனைத்து ஷப்த வாச்யனான ஸ்ரீஹரி.

**576 வந்த்ய வந்தித**

ஜகத் வந்த்யரான பிரம்மாதிகளினாலும் வணங்கப்படுபவனான ஸ்ரீஹரி

**577 வஹகவாஹக**

வஹக எனப்படும் வாயுதேவரையும் வழி நடத்துபவனான ஸ்ரீஹரி.

**ஷமயுதாக்ரணி ஷாம ஷிவகர**
**க$^3$மன ஷீக்$^4$ரக$^3$ ஷுத்$^3$த$^4$வித்$^3$யோ**
**த்$^3$யம ஷுசிவ்ருத ஷூர்ப்பனகி$^2$மத$^3$ ஹர்த்தா சேஷ ஸஹ |**
**ஷமத$^3$மாம்பு$^3$தெ$^4$ ஷைலக்$^3$ருஹ ஸம்**

**யமீக[3]ணார்ச்சித ஷோகதாப ப்ர**
**ஷமன கௌஜாரமுத மஹாப்ரபோ[4] ஷாந்தஷஸ்த நமோ ||** 41
**(மேலுள்ள இந்த நுடியில் – ஷௌ, ஷ: – அக்ஷரமாலை வந்திருக்கிறது).**

**578 ஷமயுதாக்ரணி**
ஷம என்றால் பகவன் இஷ்ட புத்தி உள்ளவர்களுக்கு, நாயகனான ஸ்ரீஹரி.

**579 ஷாம** - நாம 73 கிருஷ்ண பார்க்கவும்.

**580 ஷிவகர**
அனன்யாஸ்சிந்தயந்தோமாம் யே ஜனா: பர்யுபாஸதே |
தேஷாம் நித்யாபியுக்தானாம் யோகக்ஷேமம் வஹாம்யஹம் ||
(கீதை 9-22)

எந்த மக்கள் வேறு எதையும் சிந்திக்காமல் என்னையே சிந்தித்து பஜிக்கிறார்களோ; அத்தகைய பக்தர்களின் நலன்களை நான் காப்பேன். (பு.தி. நரசிம்மாசார்யர் இயற்றிய கீதா அனுவாத).

பக்தர்களின் ரக்ஷணை ரூபமான க்ஷேமத்தை நிர்வகிப்பவன் – பகவந்தன். தன்னை நிரந்தரமாக வணங்குபவர்களின் யோக க்ஷேமத்தை தானே நிர்வகிக்கிறேன் என்று கீதாசார்யன் கூறுகிறான். இத்தகைய ஷிவ ஷுபகரனானவனான ஸ்ரீஹரி.

**581 கமனஷீக்ரக**
நாம 419 தூரக பார்க்கவும். பகவந்தன் அனைத்து இடங்களிலும் இருப்பவன். அதாவது தூரத்திலும், அருகிலும், அனைத்தின் உள்ளேயும் வெளியேயும் இருப்பவன். (ஈஷாவாஸ்ய உபநிஷத் 1-5 மற்றும் பாஷ்யம்). அப்படியே பகவந்தன் அனைவரையும்விட சிறந்தவன் ஆகிறான். (ஈஷாவாஸ்ய உபநிஷத் 1-4 மற்றும் பாஷ்யம்).

பகவந்தன் அனைத்து இடங்களிலும் இருப்பதாலேயே அனைத்து உலகங்களும் அவனின் சமீபத்திலேயே இருக்கின்றன என்று

ரிக்வேதம் சொல்கிறது. (ரிக்வேத 34-5 மற்றும் பாஷ்யம்). இவ்வாறு கமன ஷீக்ரகனானவனான ஸ்ரீஹரி.

**582 ஷுத்த வித்யோத்யம**
ஷுத்த வித்யாபிரசாரமே முக்கிய நோக்கமாக உள்ள வ்யாஸாவதாரியான ஸ்ரீஹரி.

**583 ஷுசிவ்ருத** - ஷுத்த சரித்திரத்தைக் கொண்டவனான ஸ்ரீஹரி

**584 ஷூர்பனகி மதஹர்த்த**
ஷூர்ப்பனகியின் கர்வத்தை அடக்கிய ராமாவதாரியான ஸ்ரீஹரி

**585 அசேஷஸஹ** - அனைத்தையும் சகிப்பவனான ஸ்ரீஹரி

**586 ஷமாம்புதெ** - ஷம – பகவந்தனைக் குறித்தான புத்தி

**587 தமாம்புதெ**
தம – இந்திரிய நிக்ரஹ. விஷ்ணு பக்தியுடன், வேத அத்யயனத்தை செய்தவன் மந்த அதிகாரி. ஷமதமாதிகளுடன் பக்தி, வேத அத்யயனத்தை செய்தவன் மத்யம அதிகாரி. இவ்வாறு தன் பக்தர்களில் ஷம, தமங்களை கடலைப் போல விஷாலமாக அருள்பவனான ஸ்ரீஹரி

**588 ஷைலக்ருஹ ஸம்யமீகணார்ச்சித**
ஷைல+ க்ரஹ + ஸம்யமீ + கண + அர்ஜித. மலை + வீடு + சமானம் உள்ளவனின் + பக்த வ்ருந்த + பூஜித. மலையே வீடாக ஆக்கிக் கொண்டு, இந்திரியங்களை தன் கட்டுப்பாட்டில் வைத்துக்கொண்டு, சிறந்தவர்களான முனிவர்களால் பூஜிக்கப்படுபவனான ஸ்ரீஹரி.

**589 ஷோக ப்ரஷமன & 590 தாப ப்ரஷமன**
ஷோக + தாப + ப்ர + ஷமன. துக்க+ கவலை+ நன்றாக+ அழித்து அமைதிப்படுத்து. துக்கம் மற்றும் கவலைகளை தன் கருணைப்பார்வையால் அமைதிப்படுத்துபவனான ஸ்ரீஹரி.

**591 கௌஜாரயுத மஹாப்ரபோ**

கௌ – என்றால் பூமியில். ஜாத: – பிறந்த சஜ்ஜனர்கள். பூமியில் பிறந்த சஜ்ஜனர்களின் மகாபிரபுவான ஸ்ரீஹரி

**592 ஷாந்தஷஸ்த** - ஷாந்த நியமனம் உள்ளவனான ஸ்ரீஹரி

**ஷட்$^3$விபூ$^4$தே நிஷா$^2$த$^3$ப$^4$யஹர**
**ஷட்$^3$வதூ$^4$த$^4$வ ரிஷிவதூ$^4$ஸக$^2$**
**ஷாட்$^3$வலசர இஷ்டீக இஷு$^2$காண்ட$^3$ ஸவிஹாரா |**
**ஷட்$^3$விகாரதீத விஜிதா**
**நட்$^3$வேஷ உசித ஸௌரபே$^4$யபூ$^4$**
**விட்$^3$வரக்$^4$ன வ்ருக்ஷாக்$^4$ன ஸ்வர்ண விஷ$^2$ங்க$^3$சாப நமோ || 42**
**(மேலுள்ள இந்த நுடியில் – ஷூ, ஷெ, ஷை, ஷோ, ஷே, ஷ: – அக்ஷரமாலை வந்திருக்கிறது).**

**593 ஷட்விபூதெ**

ஷட் – ஆறு. விபூதி – ஐஸ்வர்ய. ஆறு ஐஸ்வர்யங்களை உள்ளவனான ஸ்ரீஹரி. நாம 1 - ஸ்ரீரமாவர – பார்க்கவும்

**594 நிஷாத பயஹர**

வேட ஜாதியை சேர்ந்தவரான, ஸ்ரீராமாயண கர்த்ருவான வால்மிகி முனியின் பயத்தினை போக்கியவரான ஸ்ரீஹரி.

**595 ஷட்வதூதவ**

ருக்மிணி சத்யபாமா மட்டுமல்லாமல், இன்னும் ஆறு கன்யைகளின் கணவனான கிருஷ்ண வம்சத்தின் ஸ்ரீஹரி. நாமம் 755 அஷ்ட மஹிஷியரு – பார்க்கவும்.

**596 ரிஷிவதூ சக**

கௌதமர் தமது ஆசிரமத்தில் இல்லாதபோது, இந்திரன் அவர் போலவே மாறுவேடம் அணிந்து, அவரது ஆசிரமத்தில் நுழைந்து, அவரின் மனைவியான அகலிகையை போகித்தான். இதனை அறிந்த கௌதமர், அகலிகைக்கு கல் ஆகு என்று சாபம் அளித்தார். ஸ்ரீராமன் காட்டில் சஞ்சரித்தபோது, அகலிகையின் ஸ்வபாவிகமான பக்திக்கு மெச்சி, அவளது சாப விமோசனம் செய்து, மறுபடி

கௌதமருடன் சேர்த்து வைத்தான். இவ்வாறு கௌதமரை மனைவியுடன் சேர்த்து வைத்த ராமாவதாரியான ஸ்ரீஹரி.

**597 ஷாட்வலசர இஷ்டீக**

ஷாட்வல – பச்சைப் புல். இஷ்டீக – விருப்பப்பட்ட. பச்சைப் புல்லில் சஞ்சரிக்க ஆசைப்பட்டவனான ராமாவதாரியான ஸ்ரீஹரி.

**598 இஷ்டு காண்டஸவிஹாரா**

இஷ்டு = பாண + காண்ட + பாக + ஸ + விஹாரா. வில் அம்புகளுடன் சஞ்சரித்த – ராமாவதாரியான ஸ்ரீஹரி.

**599 ஷட்விகாராதீத**

1. காம 2. க்ரோத 3. லோப 4. மோஹ 5. மத 6. மாத்ஸர. இந்த ஆறு விகாரங்களுக்கும் வசமாகாதவனான ஸ்ரீஹரி. நாமம் ஷடூர்மிஹர பார்க்கவும்.

**600 விஜிதானட்வீஷ**

விஜித+ அனட்ய + ஈஷ. வென்றவன்+ எருது + ஈஷ. நீலாதேவியின் சுயம்வர காலத்தில் ஏழு எருதுகளை அடக்கி, அவற்றிற்கு மூக்கணாங்கயிறு போட்டவனான கிருஷ்ணாவதாரியான ஸ்ரீஹரி. நாமம் 755 அஷ்ட மஹிஷியர – பார்க்கவும்.

**உசிதஸௌரபேய பூ – விட்வரக்ன**

**601. உசித விட்வரக்ன & 602 ஸௌரபேய – விட்வரக்ன & 603 பூ – விட்வரக்ன**

உசித+ ஸௌபேய+ பூ – விட்+ வர+ க்ன; யோக்ய+ பசு+ பூதேவி. பசுக்களையும், பூதேவியையும் துன்பப்படுத்துவர்களில் மோசமானவர்கள் எனப்படும் துஷ்டர்களை அழிப்பவனான ஸ்ரீஹரி.

**604. வ்ருக்ஷௌக்ன**

கொதிக்கின்ற பாலை இறக்க வேண்டும் என்பதற்காக முலைப்பால் கொடுத்துக் கொண்டிருந்த ஸ்ரீகிருஷ்ணனை யசோதை கீழே இறக்கி வைத்துவிட்டு வீட்டிற்குள் சென்றாள். அப்பொழுது ஸ்ரீகிருஷ்ணன் அருகில் இருந்த பானையிலிருந்து தனது கையில் சிக்கும் அளவிற்கு தயிர் எடுத்துக் கொண்டு இன்னொரு மூலையில்

அமர்ந்து தின்று கொண்டிருந்ததைக் கண்ட யசோதை, அவனைப் பிடித்து அங்கு இருந்த ஒரு உரலில் அவனைக் கட்டினாள். இவ்வாறு வயிற்றில் கயிற்றினால் கட்டப்பட்டதால் தாமோதரன் எனப்பட்ட ஸ்ரீகிருஷ்ணன் அந்த உரலுடன் அருகில் இருந்த இரண்டு மரங்களுக்கு நடுவே சென்றான். அவன் அந்த மரங்களை முறித்து தள்ள வேண்டி இருந்தது. 'யமளார்ஜுன பஞ்சன' என்று சொல்ல வேண்டியிருந்தது. இதற்கு காரணம் குபேரனின் மக்களான நளகூபர், மணிக்ரீவ என்னும் இருவர் நாரதரின் சாபத்தினால் இங்கு மரங்களாக நின்றிருந்தனர். கிருஷ்ணனின் ஸ்பரிசத்தால் அவர்களுடைய சாபம் விமோசனம் ஆயிற்று. அதற்காக கிருஷ்ணன் அந்த மரங்களின் நடுவே உரலை இழுத்துக்கொண்டு சென்று, அந்த மரங்களைத் தள்ளினான். அவர்களின் சாப விமோசனம் ஆயிற்று.

'நாங்கள் கர்வம் கொண்டு நடந்ததால் இந்த கதி வந்தது. நம்முடைய கர்வத்திற்கு தக்க சாபம் கிடைத்தது' என்று கூறி, எங்களுடைய கண்கள் எப்பொழுதும் உன்னுடைய ரூபத்தை பார்க்குமாறு, காது உன்னுடைய மகிமைகளையே கேட்குமாறு, வாய் உன்னுடைய குணங்களை கொண்டாடுமாறு, கைகள் உன்னுடைய சேவை செய்யுமாறு, தலை எப்பொழுதும் உனக்கு வணங்கியே இருக்குமாறு, மனம் எப்பொழுதும் உன்னுடைய பாத ஸ்மரணை செய்வதாக அருள்வாயாக' என்று பிரார்த்தனை செய்தனர். அதே சமயத்தில் அந்த மரங்களில் இருந்த துனி மற்றும் சமு எனும் இரு அசுரர்கள் இறந்தனர்.

ஸவிஷயுத்ரூப உச்சித்ய தைத்யனே கௌவபுஷோ ஆஹனத் | மணி மஞ்சரி

யசோதை சத்தம் கேட்டு ஓடி வந்து பார்க்கிறாள். மிகப்பெரிய இரு மரங்கள் விழுந்து கிடக்கின்றன. கிருஷ்ணனுக்கு என்ன ஆயிற்றோ என்னும் பயம் அவளுக்கு வந்து பார்த்தாள். கிருஷ்ணன் அந்த மரத்தின் மேல் சுகமாக ஆடியவாறு நின்று கொண்டு இருக்கிறான். இவ்வாறு வ்ருக்ஷோக்ன ஆனவனான கிருஷ்ண அவதாரியான ஸ்ரீஹரி.

**605 ஸ்வர்ணநிஷங்க சாப**

நிஷங்க - அம்பறாத்தூணி. சாப - வில். தங்கத்தினால் ஆன, வில், அம்பறாத்தூணிகளை தரித்தவனான ஸ்ரீஹரி.

**ஸரஸிஜானன ஸாத்[4]யஸித்[3]த[4] நி**
**கரகரார்ச்சித ஷிக்ஷாரக்ஷக**
**ஸுரஹ்ருன் மந்தி[3]ர ஸூரி ஹ்ருத்[3]கு[3]ஹஸேவ்ய ஸுரமௌளி |**
**நிரஜஸைந்த[4]வ ஷாஸ்திர ஸ்தோமா**
**ப[4]ரணதோஷ[2]க ஸௌம்யரத்னா**
**கரக[3] நிரஞ்சன ஸஞ்சயோத்ஸவ ஸஹஜஷூர நமோ || 43**
**(மேலுள்ள இந்த நுடியில் - ஸீ- அக்ஷரமாலை வந்திருக்கிறது).**

**606 சரஸி ஜானன**

சரஸ்ஸு + ஜ + ஆனன. தாமரையைப் போல எப்போதும் மலர்ந்த முகத்தைக் கொண்டவனான ஸ்ரீஹரி.

**607 ஸாது நிகர கரார்ச்சித & 608 ஸித்த நிகர கரார்ச்சித**

நிகர - சமூகம். ஸாது சித்தர்களின் சமூகத்தினால் வணங்கப்படுபவனான ஸ்ரீஹரி.

**609 சிக்ஷாரக்ஷக**

சிக்ஷா - வேதாங்க. வேத மற்றும் வேதாங்க சிக்ஷகனானவனான ஸ்ரீஹரி

**610 ஸுரஹ்ருன்மந்திர**

ஸுர+ ஹ்ருத்+ மந்திர. தேவதைகளின் இதயம் என்னும் மந்திரத்தில் வசிப்பவனான ஸ்ரீஹரி.

**611 ஸூரிஹ்ருத்குஹ ஸேவ்ய**

ஸூரி - வித்வாம்சர்கள். ஞானிகள். ஞானிகளின் ஹ்ருதய என்னும் குகையில் சேவை பெற்றுக் கொள்பவனான ஸ்ரீஹரி.

**612 ஸுரமௌளி**

தேவதைகளில் சிறந்தவனான ஸ்ரீஹரி. நாமம் 1. 12 ஸுரமணி 2. 18 ஸுரேஷ 3. 255 ஸுரேந்திர 4. ஸுரெஜ்யேஷ்ட - பார்க்கவும்.

**613 நிரஜ**
ரஜஸ் குணமே முதலான ப்ராக்ருத குண சம்பந்தம் இல்லாதவனான ஸ்ரீஹரி.

**614 ஸைந்தவ** - சிந்து ஷயனனானவனான ஸ்ரீஹரி.

**615 ஷாஸ்த்ராஸ்தோமாபரண தோஷக:**
சாஸ்திரங்களின் சமுதாயமே ஆபரணமாகக் கொண்டவர்களான ஞானிகளை மகிழ்ச்சிப் படுத்துபவனான ஸ்ரீஹரி.

**616 ஸௌம்யரத்னாகரக** - நாம 95 குஷஷயன பார்க்கவும்.

**617 நிரஞ்சன**
அஞ்ஞானாதி பத வாச்யனான அவித்யா இல்லாதவனான ஸ்ரீஹரி. (தாத்பர்ய நிர்ணய 1-64).

**618. ஸஞ்சயோத்ஸவ**
எப்போதும் வெற்றியின் ரூபத்தையே கொண்டவனான ஸ்ரீஹரி

**619 ஸஹஜ ஷூர** - ஷூரத்வமே குணமாக உள்ளவனான ஸ்ரீஹரி

**620 முதல் 625** வரைக்குமான எண்ணிக்கையை, கிரந்தகாரர் கொடுத்திருக்கவில்லை.

**ஹலிஸஹக$^{3}$ ஹார்த்தி$^{3}$கமனோக$^{3}$த**
**ப$^{2}$லத$^{3}$ ஹிரண்யவஸன ஹீரா**
**வலய ஹூதபு$^{4}$க்$^{3}$ ப$^{3}$லத$^{3}$ ஹூணபவித்ர ஹேத்வார்த்தா$^{2}$ |**
**ஜலதி$^{4}$ புரபதெ ஹைமராஷித$^{3}$**
**ப$^{3}$லத$^{3}$ ஹோமத$^{3}$ ஹௌத்ர பா$^{4}$க$^{3}$த$^{3}$**
**ஸலலிதோத$^{3}$ன பரமஹம்ஸ ஸத்கூலஹருஷ நமோ || 44**
**(மேலுள்ள இந்த நுடியில் – ஹ: – அக்ஷரமாலை வந்திருக்கிறது).**

**626 ஹலிஸஹக**
ஹலி – பலராம. அண்ணனான பலராமனுடன் சஞ்சரித்ஹ்ட ஸ்ரீகிருஷ்ணாவதாரியான ஸ்ரீஹரி.

**627 ஹார்திக மனோகத பலத**

ஹார்திக – ஹ்ருதயத்தில் இருந்த முக்தாத்மர்களை, அவர்கள் விரும்பிய பலன்களைக் கொடுத்து, தன் ஆலயங்களில் வைத்து சுகத்தை கொடுத்தவனான ஸ்ரீஹரி.

**628 ஹிரண்மயவஸன**
தங்கத்தில் செய்த (ஜரிகை பீதாம்பர) பொருட்களை தரித்தவனான ஸ்ரீஹரி.

**629 ஹீராவலய**
ரத்னமயமான கடக (வளை) முதலான ஆபரணங்க்ளை தரித்தவனான ஸ்ரீஹரி

**630 ஹுூத்புக்பலத**
ஆஹுதியை ஏற்றுக் கொள்பவனான, வெந்தவற்றை ஏற்றுக் கொள்பவனான அக்னிதேவனுக்கு பலிகொடுப்பவனான ஸ்ரீஹரி.

**631 ஹொாண பவித்ர**
நீச ஜாதியை சேர்ந்தவர்களைக்கூட பவித்ரமாக்குபவனான ஸ்ரீஹரி.

கிராதஹ்ருத்கர்த்தபுலிந்த புல்கஸ: |
அபீரகங்கா: யவனாரகாதய: ||
அன்யேஷ்சபாபா: மதாஸ்ரயாத்கமாத்
ஷுத்தந்தி தஸ்ம்யை ப்ரபுவே நம: ||
(ஸ்ரீமத் பாகவத 2ம் ஸ்கந்தம்)

**632 ஹேத்வார்த்தா** - அனைத்திற்கும் காரணிபூதனான ஸ்ரீஹரி

**633 ஜலதி புரபதி**
கம்சனை கொன்றதால் அவனின் மாமனாரான ஜராசந்தன், மதுரையின் மேல் படையெடுத்து வந்ததால், கடலை பின்னுக்குத் தள்ளி, த்வாரகையில் ஒரு தீவினை கட்டியவனான ஸ்ரீகிருஷ்ணாவதாரியான ஸ்ரீஹரி. நாமம் 1. சுதர்கமாலய 2. குஷஸ்தளீக - பார்க்கவும்.

**634 ஹைமராஷித**

ஹைம – தங்கம். தன் பக்தனான குசேலனுக்கு (சுதாமனுக்கு) கொடுத்ததைப் போல தன் பக்தர்களுக்கு தங்கத்தின் ராஷியையே அருள்பவனான ஸ்ரீஹரி.

**635 பலத**

பகவந்தன் பலஸ்வரூபியானதாலேயே மொத்த உலகத்தை வழி நடத்துவதற்கு சாமர்த்தியம் உள்ளவனாக இருக்கிறான். பகவந்தனை பலஸ்வரூபி என்னும் அபிப்பிராயத்தில் 'பலம்' என்றே வணங்கப்படுகிறான். இத்தகைய ஸ்ரீஹரி. (ஸ்ரீமத் பாகவத 8-5-28).

**636 ஹோமத**

ஹோம திரவியங்களை நிறைவேற்றுபவனான ஸ்ரீஹரி

**637 ஹௌத்ரபாகத**

ஹுூதா என்பனில் இருந்துகொண்டு, அந்த பாகத்தை அவனுக்கே கொடுப்பவனான ஸ்ரீஹரி.

**638 ஸுலலிதோதன**

ஓதன – முகம். அதி ஸ்ரேஷ்டனான யக்ஞபாகத்தை ஏற்றுக்கொள்பவனான ஸ்ரீஹரி

**639 பரமஹம்ஸ & 640 ஸத்குல ஹருஷ**

1. கசேசக 2. பஹுூதக 3. பரமஹம்ஸ இவை முதலான சன்யாசத்தின் வகைகளில் சிறந்ததான பரமஹம்ஸருக்கு எப்போதும் மகிழ்ச்சியைக் கொடுப்பவனான ஸ்ரீஹரி.

**பளலவாந்தகளாட்4யயக்ஞா**
**வளிக்ருதாத3ர நிர்வளீக அ**
**கி2ள க்ருபாளுவரேண்ய ஜீவ ஜிளுக த்ருப்திகர |**
**ஸ்த2ள களேவர ப4ரித பி3ரம்மவீ**
**புள களைக்ய தளோர்த்4வ மத3வி**
**வ்ஹள பளௌக4னெ நிஷ்களங்க களா ப்ரபூர்ண நமோ || 45**
**(மேலுள்ள இந்த நுடியில் – ளெ மற்றும் ள: – அக்ஷரமாலை வந்திருக்கிறது).**

**641 பளலவாந்த & 642 களாட்ய**
புள, லவ முதலான காலத்தின் அம்சங்களிலும்கூட அதிகமாக இருப்பவனான ஸ்ரீஹரி.

**643 யக்ஞாவளிக்ருதாதர**
ஆவளி - சமுதாய (கூட்டம்). யக்ஞங்களின் கூட்டத்தில் மரியாதை உள்ளவனான ஸ்ரீஹரி.

**644 நிர்வ்யலிக**
அப்ரிய இல்லாதவனான. அதாவது, அனைவருக்கும் ப்ரியமானவனான ஸ்ரீஹரி

**645 க்ருபாளுவரேண்ய**
நாமம் 1. கருண 2. கருண ஸாகர - பார்க்கவும். கருணை செய்பவர்களில் சிறந்தவரான ஸ்ரீஹரி.

**646 ஜீவத்ருப்திகர & 647 ஜீளூக த்ருப்திகர**
ஜீளூக - கிருமி முதலான ஜீவ வர்க்கங்களுக்கும் திருப்தியைக் கொடுப்பவனான ஸ்ரீஹரி.

**648 ஸ்தளகளேவர பரித**
ஸ்தள - ஸ்தான. களேவர - சரீரம். சர்வ ஷரீர மற்றும் சர்வ ஸ்தளங்களில் வியாப்தனானவனான ஸ்ரீஹரி

**649 பிரம்ம**
ஓம் ஓம் அதாதோபிரம்ம ஜிக்ஞாஸா ஓம் ||
(பிரம்மசூத்ர ஜிக்ஞாஸ அதிகரண).

இந்த ஸ்தோத்திரத்தின்படி பிரம்ம என்றால் விஷ்ணுவே என்று பாஷ்யத்தில் ஸ்ரீமத்வாசார்யர் நிர்ணயித்திருக்கிறார். பிரம்மா என்னும் சொல் சர்வ வியாபக நாராயணனையே குறிக்கிறது. ஏனென்றால் ஞானிகள் யாரை கடலின் நடுவில் காண்கின்றனரோ, நாசம் இல்லாத பரமாத்மாவில் பிரம்மாதி ஜீவராசிகள் ஆதரவு தேடுகிறார்களோ, யார் மூலமாக அனைத்துலகத்தின் அருள்பவள் லட்சுமிதேவி பிறக்கிறாளோ, பல ஜீவராசிகளை பூமியின்மேல் படைக்கிறானோ, அதே சத்ய ஷப்த வாச்யன் என்று கூறுகின்றனர்.

அதே ஞானிகளுக்கு பிரம்மா என்னும் சொல் மிகவும் சிறந்ததாக தெரிகிறது.

இவ்வாறு ஸ்ருதி சொல்வதால், பிரம்ம என்னும் சொல், ஜீவ ஷப்த வாச்ய, பத்மாசனம் ஆகிய அர்த்தங்களை சொல்வதாலும், வேதத்தில் கூறிய பிரம்மா என்னும் சொல்கூட பூரண ஞானத்தைக் கொண்டவனான விஷ்ணுவையே சொல்கிறது. ஆகையால் பிரம்ம என்றால் பரப்பிரம்மனான ஸ்ரீஹரி.

**650 விஷுளகளைக்ய**
தன்னிடம் இருக்கும் அபரிமிதமான கலைகளில் வேறுபாடுகள் இல்லாதவனான ஸ்ரீஹரி

**651 தளோர்த்வ**
தள என்றால் பாதாள மற்றும் ஊர்த்வ – அதாவது, சத்யலோகமே முதலான அனைத்து பிரதேசங்களிலும் வியாப்தமான ஸ்ரீஹரி

**652 வாதவிஹ்வள** - ஆனந்த பரிபூர்ணனான ஸ்ரீஹரி

**653 பளௌக** - பல+ஓக. பலபரிபூர்ணமான ஸ்ரீஹரி

**654 நிஷ்களங்க** - நாம தோஷவிஹார – பார்க்கவும்

**655 களாப்ரபூர்ண**
அனைத்து கலைகளைவிடவும் பரிபூர்ணமானவனான ஸ்ரீஹரி

**க்ஷதவிதூ$^3$ர க்ஷௌரும்பு$^3$ ப$^3$ந்தி$^3$த**
**க்ஷிதி ப$^4$ரஹர க்ஷீர நிதி$^4$ க்$^3$ருஹ**
**அதுள க்ஷுத்$^3$ராரெ க்ஷௌராயுத$^3$னெ க்ஷீமைஷ்வர்ய**
**க$^3$திக$^3$தெ க்ஷௌ தீ$^3$பைக்ய க்ஷோணி**
**பதிபதெ க்ஷௌமரதா$^2$ க்ஷௌந்தி ப$^4$**
**ரித ந்ருகோத்$^3$த$^4$ர க்ஷத்தாவல்லப$^4$க்ஷ த்ரியவேஷ நமோ || 46**
**(மேலுள்ள இந்த நுடியில் – க்ஷை, க்ஷம், க்ஷ: – அக்ஷரமாலை வந்திருக்கிறது).**

**656 க்ஷதவிதூர**

க்ஷத – காயம். எந்தவொரு ஆயுதத்தினால் காயம் அடையாதவனான ஸ்ரீஹரி.

**657 க்ஷாராம்பு பந்தித**

க்ஷார – உப்பு. க்ஷாரம்பு – கடல். நாம வனதி பந்த விஹார – பார்க்கவும்.

**658 க்ஷிதிபரஹர**

க்ஷிதிபரஹரணம் குலசக்ராயுதஸ்ய எனும் பாகவத வசனத்தைப் போல, பூமிக்கு பாரமான தைத்யர்களை அழித்தவனான ஸ்ரீஹரி.

**659 க்ஷீரநிதிக்ருஹ**

பாற்கடலையே தன் வீடாகக் கொண்டிருப்பவனான ஸ்ரீஹரி

**660 அதுள**

அதுள என்றால் சமம் இல்லாதவன். இத்தகைய ஸ்ரீஹரி

**661 க்ஷுத்ராரெ**

க்ஷுத்ர – துஷ்ட. துஷ்ட அசுரர்களின் எதிரியான ஸ்ரீஹரி

**662 க்ஷூராயுதனெ**

க்ஷூர – சக்ர. சக்ராயுதத்தை தரித்தவனான ஸ்ரீஹரி

**663 க்ஷேமேஷ்வர்யகதிஹதெ**

க்ஷேம+ ஐஷ்வர்ய+ கதி+ கதெ. க்ஷேம, ஐஸ்வர்ய, கதி இவற்றிற்கு காரணமானவனான ஸ்ரீஹரி

**664 தீபைக்ய**

ஒளி பொருந்தியவனான அனைத்து பொருட்களில் வியாப்தனான ரூபங்களில் பேதம் இல்லாதவனான ஸ்ரீஹரி

**665 க்ஷோணிபதிபதெ**

க்ஷோணி – பூமி. க்ஷோணிபதி – அரசர். அரசர்களின் அரசர் என்றால் சக்ரவர்த்தியான ஸ்ரீராமாவதாரியான ஸ்ரீஹரி.

**666 க்ஷௌமரத.**

க்ஷௌம - பட்டு. பட்டுத்துணியாலும் போர்த்திக் கொள்வதான திவ்ய ரதத்தைக் கொண்டவனான ஸ்ரீஹரி.

**667 க்ஷாந்தி பரித**

தத்க்ஷம்யுதாம் ஸபகவான் புருஷ: புராணோ
நாராயண: ஸ்வபுருஷ்த்ரேர்யத ஸத்க்ருதிதம் ந: |
ஸ்வானுமஹோ நவிதுஷாம் ரசிதாம ஜலீனாம்
க்ஷாந்திர் வரீமஸினம: புருஷாய ப்ரூம்னே ||
(பாகவத 6-3-30)

ஸ்ரீமத் பாகவத ஸாரோத்தார - நாம பிரஷம்ஸா பிரகரண ஸ்லோகம் #359.

என்னுடைய தூதுவனால், அதாவது என்னால் உண்டான அயோக்கிய செயல்களை மன்னிப்பாயாக. அஞ்ஞானத்தினால் செய்த காரியங்களை, தவறுகளை மன்னிப்பாயாக - என்று பக்தர்கள் கேட்டபொழுது மன்னிப்பதில் உனக்கு சமமானவர்கள் வேறு யாரும் இல்லை. நீ குணபூர்ணன். அத்தகைய உனக்கு நான் வணங்குகிறேன் என்று அஜாமிளனை இழுத்து வரச்சென்ற தன்னுடைய தூதர்களின் சார்பாக, எமன், ஸ்ரீஹரியிடம் பிரார்த்தனை செய்கிறான். இத்தகைய க்ஷாந்தி பரிதனான ஸ்ரீஹரி. தாழ்மை மற்றும் மன்னிப்பு குணங்களை கொண்டவனாக ஸ்ரீஹரி.

**668 ந்ருகோத்தர**

ஒரு முறை கிணற்றில் விழுந்து கிடந்த மிகப்பெரிய ஓணானைக் கண்ட, சாம்ப, பிரத்யும்ன ஆகியோர் அந்த விஷயத்தை கிருஷ்ணனிடம் கூறினர். ந்ருகராஜன் என்பவனுக்கு சாபத்தினால் ஓனான் தேகம் வந்தது. அந்த சாபம் நீங்கும் நேரம் வந்ததால் ஸ்ரீகிருஷ்ணன் அந்த கிணற்றில் இருந்து அந்த பிராணியை மேலே எடுத்து கரையின் மேல் வைத்து சாப விமோசனம் அளித்தான், அந்த ந்ருக ராஜன் ஒருவனுக்கு தானம் செய்த பசு தப்பித்து வந்து, புதிய பசுக்களின் கும்பலில் நின்றது. அரசன் அதனை அறியாமல், அந்த பசுவினை திரும்ப இன்னொரு முறை தானம் அளித்து விட்டான். தானம் பெற்றுக் கொண்ட இரு பிராமணர்களும் வந்து,

அரசனுக்கு ஓனான் ரூபம் கிடைக்கட்டும் என்று சாபம் கொடுத்தனர். சாபத்தைப் பெற்ற ராஜன் ஸ்ரீகிருஷ்ணனை வணங்கி ஸ்வர்கத்திற்கு சென்றான். ஸ்ரீகிருஷ்ணன் ஊருக்கு வந்து சபையில், 'விஷம், அதனை குடித்த அவனை மட்டுமே கொல்கிறது. பிரம்மஸ்வம் அந்த குலத்தையே கொல்வதால், அது மிகவும் கொடூரமான விஷம் ஆகிறது' என்று கூறி, என்றும் பிராமண துரோகத்தை செய்யக்கூடாது என்று தன் மக்களிடம் எச்சரித்தான். இவ்வாறு கிருஷ்ணாவதாரியான ஸ்ரீஹரி.

**669 க்ஷத்தவல்லப**

கிருஷ்ணாவதாரத்தில் துரியோதனனின் ராஜ உபசாரத்தை புறக்கணித்து, தாசி புத்திரனான விதுரனின் அதிபத்யத்தை ஏற்றுக்கொண்ட விதுரப்ரியனான ஸ்ரீஹரி.

**670 க்ஷத்ரியவேஷ**

சிஷ்யர்களை பாதுகாத்தல். துஷ்டர்களை தண்டித்தல். இதற்காக க்ஷத்ரிய வேடத்தில் அவதரித்த ஸ்ரீராமாவதாரியான ஸ்ரீஹரி.

**ஏகராத்³ விஷ்வேக காரக**
**ஏகவ்யாபக ஏகஸ்தா²பக**
**ஏகபோ⁴ஜக ஏகயோஜக ஏகலோகாத்ம |**
**ஏகஸ்ருங் பு⁴வனைக வர்த்த⁴க**
**ஏகமாரக ஏக தாரக**
**ஏக யாசக ஏக ஸூசக ஏக பத்ர நமோ || 47**

**671 ஏகராட்** - ஏகஸ்வாம்ய உள்ளவனான ஸ்ரீஹரி.

உத்பத்தி ஸ்திதி ஸம்ஹார நியதிக்ஞானமாவ்ருதி: |
பந்தமோக்ஷஞ்ச புருஷாத்யுஸ்மாத்ஸ ஹரேகராடிதி ||
(ஸ்கந்த புராண)

|| ஓம் ஜன்மாத்யஸ்யயத: ஓம் ||
பிரம்மஸூத்ர 1ம் அத்தியாயம். 1ம் பாதம். 2ம் ஸூத்ரம். இதற்கு ஆனந்ததீர்த்தரின் பாஷ்யம்.

எந்த புருஷ ஷப்த வாச்யனால் பிரளயம், சம்ரக்ஷணம், சம்ஹாரம், ஞான, அக்ஞான, பந்த, மோட்ச ஆகியவை ஆகின்றனவோ, அவனே ஸ்ரீஹரி. இவ்வாறு ஸ்காந்த புராணம் சொல்கிறது.

**672 விஷ்வேகாரக**
உலகத்தின் நடவடிக்கைகளுக்கு முக்ய காரணமானவனான ஸ்ரீஹரி

**673 ஏகவ்யாபக**
உலகத்தில் அனைத்து இடங்களிலும் வியாப்தனானவனான ஸ்ரீஹரி

**674 ஏகஸ்தாபக**
உலகத்தின் முக்கிய ஸ்தாபகனானவனான ஸ்ரீஹரி

**675 ஏகபோஜக** - முக்ய போஜகனானவனான ஸ்ரீஹரி

**676 ஏக யோஜக** - முக்ய நியாமகனானவனான ஸ்ரீஹரி

**677 ஏகதோகாத்ம**
தோக – பாலகன். பாலகரூபியானாலும் கூட சர்வ நியாமகனான ஸ்ரீகிருஷ்ணாவதாரியான ஸ்ரீஹரி

**678 ஏகஸ்ருஜபுவன**
யுகயுகங்களிலும் ஒரே மாதிரியான உலகத்தினை நிர்மாணம் செய்தவனான ஸ்ரீஹரி

**679 ஏக வர்த்தக**
யுகயுகங்களிலும் ஒரே மாதிரியான உலகத்தினை வளர்ப்பவனான ஸ்ரீஹரி

**680 ஏகமாரக**
உலகத்தினை பிரளய காலத்தில் அழிப்பதற்கு முக்கிய காரணனான ஸ்ரீஹரி

**681 ஏகதாரக** - சங்கடங்களை முக்கியமாக பரிகரிப்பவனான ஸ்ரீஹரி

**682 ஏகபாச**
பலியின் யக்ஞத்தில் தானம் கேட்டு பூமி, ஆகாயங்களை கேட்டவனான ஸ்ரீஹரி

**683 ஏகஸூசக** - உலகத்தின் முக்கிய ஸூசகனான ஸ்ரீஹரி

**684 ஏகபத்ர**
பிரளய காலத்தில், பிரளய ஜலத்தில், ஆல இலையின் மேல் படுத்திருக்கும் ஜலரூபியான ஸ்ரீஹரி

**685 த்வயக்ரியேஷ்வர**
சரீரக மற்றும் மானசிக என இந்த இரு செயல்களுக்கும் தலைவனான மற்றும் கொடுப்பவனுக்கும், பெற்றுக் கொள்பவனுக்கும் தலைவனான ஸ்ரீஹரி.

**686 த்வயபதேஷ்வர**
ப்ரவ்ருத்தி மார்க்க மற்றும் நிவ்ருத்தி மார்க்க இந்த இரு மார்க்கத்தை பின்பற்றுபவர்களுக்கும் தலைவனான ஸ்ரீஹரி

**த்$^3$வயக்ரியேஷ்வர த்$^3$வய ப்ரதே$^2$ஷ்வர**
**த்$^3$வய ஸுவிஸ்தார த்$^3$வய விகோ$^3$சர**
**த்$^3$வய நிவாரக த்$^3$வயப்ரதா$^3$ரக த்$^3$வய ஸமய பூர்ண |**
**த்$^3$வய ப்ரவாஹக த்$^3$வய நியாமக**
**த்$^3$வய நிரந்தர த்$^3$வய த்$^3$வயேதர**
**த்$^3$வய ஸுபோ$^3$த$^4$க த்$^3$வய ப்ரஸாத$^3$க த்$^3$வய ப$^4$யக்$^4$ன நமோ || 48**

**687 த்வயஸுவிஸ்தார**
ஜீவிகளை மற்றும் ஜட வஸ்துகளை விஸ்தரிப்பவனான ஸ்ரீஹரி

**688 த்வய விகோசர**
ஸ்ருதி மற்றும் ந்ருதி - இந்த இரண்டினாலும் அறியப்படுபவனான ஸ்ரீஹரி.

**689. த்வயனிவாரக** - சித்தி புத்தி இரண்டினையும் கொடுப்பவனான ஸ்ரீஹரி

**690. த்வயப்ரதாகய;** **691 த்வயஸமயபூர்ண**

**692 த்வய ப்ரவாஹக; 693 த்வய நியாமக**
**694 த்வய நிரந்தர; 695 த்வய த்வயேதர**
**696 த்வயஸுபோதக; 697 த்வய ப்ரதாயக**
**698 த்வய பயக்ன**

**த்ரியுக$^{3}$ த்ரிவிக்ரஹ த்ரிபத$^{3}$ கா ல**
**த்ரயக$^{3}$ த்ரிதி$^{3}$வப த்ரிபத$^{2}$கா$^{3}$பி த்ரி**
**நயனாரிஹன் த்ரிபுரமோஹக த்ரயத்ரிம்ஷத் ஸுரப |**
**த்ரியுகு$^{3}$தி$^{3}$த த்ரிகு$^{3}$ணேஷ ஸாக$^{3}$ர**
**த்ரியபபஞ்சக த்ரிவித$^{4}$பா$^{4}$ஷ்ய நி**
**சயர சக த்ரித$^{3}$ஷார்ச்ச த்ரிஜக$^{3}$து$^{3}$த்$^{3}$த$^{4}$ரண மார்க்க$^{3}$ நமோ || 49**

**699 த்ரியுக**

க்ருத, த்ரேதா, த்வாபர இந்த மூன்று யுகங்களில் மட்டுமே அவதரிப்பதால் த்ரியுகனானவனான ஸ்ரீஹரி. இவ்வாறு பக்த பிரகலாதன் ஸ்ரீநரசிம்மாவதாரியான ஸ்ரீஹரியை பிரார்த்திக்கிறார்.

**700 த்ரிவிக்ரஹ**

பர: புருஷ ஏக - இஹாஸ்யதத்தே ஸ்தித்யாதயே ஹரிவிரஞ்ச ஹரேதி ஸங்ஞா: |

(பாகவத 1-2-24). பகவந்தன், உலகை நிர்வகிப்பதற்காக விஷ்ணு நாமக ரூபத்தையும், படைப்பதற்காக சதுர்முகனில் பிரம்ம நாமக ரூபத்தையும், சம்ஹாரம் செய்வதற்காக ருத்ரனில் சிவ ரூபத்தையும் தரித்திருக்கிறார். இவ்வாறு விஷ்ணு, பிரம்ம மற்றும் ஈஷ இந்த மூன்று ரூபங்களையும் தரித்தவாறு விக்ரஹனானவனான ஸ்ரீஹரி.

**701 த்ரிபத**

1. பகவந்தனின் அனந்தாசன வைகுண்ட மற்றும் பத்மனாப என்னும் பெயரின் ரூபங்கள், அனந்தாஸன, வைகுண்ட மற்றும் நாராயண புரங்களில் இருக்கின்றன. அம்ருத, க்ஷேம மற்றும் அபய என்றும், நாராயண, வாசுதேவ மற்றும் வைகுண்ட என்றும், பகவந்தனின் அந்த ரூப த்ரயங்கள் அழைக்கப்படுகின்றன. (பாகவத 2-6-18).

2. ஜாக்ரத அவஸ்த ப்ரேரகனான பகவந்தன் வலது கண்ணில் முனையில், ஸ்வப்ன அவஸ்த ப்ரேரகனான தைஜஸன், மனதில் -

அதாவது கழுத்தில்; சுஷுப்தி ப்ரேரகனான ப்ராக்ஞன் இதயத்தில் என, அனைவரின் சரீரத்திலும் மூன்று ரூபங்களால் பகவந்தன் இருக்கிறான், என்று மாண்டூக உபநிஷத் (1-1-2) சொல்கிறது.

3. காயத்ரியின் மூன்று பாதங்களால் புகழப்படுபவன் ஆகையால் த்ரிபத என்று அழைக்கப்படுபவனான ஸ்ரீஹரி.

**702. காலத்ரயக**
கடந்த, நிகழ் மற்றும் எதிர் என இந்த மூன்று காலங்களில் இருப்பவனான ஸ்ரீஹரி.

**703 த்ரிதிவப**
த்ரிதிவ + ஸ்வர்க்க. அதனை இந்திர அந்தர்கதனாக இருந்து காப்பவனான ஸ்ரீஹரி

**704 த்ரிபதகாபித**
பாகிரதி த்ரிபதகா – (அமரகோஷ).

1. த்ரி – என்றால் மூன்று. ஸ்வர்க்க, பூ, பாதாள – இந்த மூன்று உலகங்களில் சஞ்சரிக்கும் (பாயும்) பாகிரதி. அவளின் ஜனகனான த்ரிவிக்ரம ரூபி – ஸ்ரீஹரி.

2. த்ரி – என்றால் மூன்று. பத – ஞானமார்க்கத்தினால், கா – நடப்பவன். த்ரிவித ஞானதான என்றால், 1. முக்தியோக்யர் – ஹரிசர்வோத்தம. வாயு ஜீவோத்தம, தாரதம்ய, பஞ்சபேத சத்ய என்னும் பேத மார்க்க. 2. நித்ய சம்சாரிகள் – பஞ்சபேதத்தை அங்கிகரித்து தாரதம்ய அங்கீகரித்த மிஸ்ரஞான 3. தமோயோக்யர்கள் – மித்யா மார்க்க.

இந்த மூன்று மார்க்கத்தால் நடப்பவர்களுக்கு – பித, அதாவது தந்தையான பரமாத்மனான ஸ்ரீஹரி.

**705. த்ரிநயனாரிஹன்**

த்ரி+ நயன+ அரி+ ஹன். முக்கண்ணனின் எதிரியான பஸ்மாசுரனை, மோகினி ரூபம் எடுத்து அழித்தவனான ஸ்ரீஹரி.

**706 த்ரிபுர மோஹக**

அனந்தாஸன, வைகுண்ட மற்றும் நாராயண புரங்களில் இருந்து, அந்த புரங்களுக்கு மோஹகனான ஸ்ரீஹரி.

**707 த்ரியத்ரிம்ஷதஸுரப & 708 த்ரியுகுதித**

நாம 699 த்ரியுக பார்க்கவும்.

**709 த்ரிகுணேஷ ஸாகர & 710 த்ரியபபஞ்சக & 711 த்ரிவித பாஷ்ய நிசய கசக**

தர்ஷன, குஹ்யா மற்றும் அர்த்தம் உள்ள பாஷ்யத்தை இயற்றிய ஸ்ரீமத்வாந்தர்கதனான ஸ்ரீஹரி.

**712 த்ரிதஷார்ச்ச**

முக்தி அடைபவர்கள், நித்ய சம்சாரிகள் மற்றும் நரர் இந்த மூன்று தஷா (நிலை) அடைபவர்களால் போற்றப்படுபவனான ஸ்ரீஹரி

**713 ஜகத்குத்தரண மார்க்க**

உலகத்தை மேம்படுத்தும் க்ரியாசக்தனானவனான ஸ்ரீஹரி

**சதுர்விதா$^4$த்மா சதுர்ப$^4$ஜாங்கித**
**சதுர்ரூபா$^3$தி$^3$ப சதுர்விதா$^4$ர்த்த$^2$த$^3$**
**சதுர்வர்ணாஸ்ரம சதுர்முக்தி சதுஷ்டயேஷ்வரதா |**
**சதுஸ்ஸமுத்ரகெ$^3$ சதுரதரமதி**
**சதுர் விதா$^4$யத சதுர்ப$^3$லாம்பு$^4$தி$^3$**
**சதுர்வேதா$^3$ர்த்தி$^2$த சரண சதுஷ்யாஸ்த்ரபூஜ்ய நமோ || 50**

**714 சதுர்விதாத்மா**

1. ஆத்மா 2. அந்தராத்ம 3. பரமாத்ம 4. ஞானாத்ம என்னும் ஸ்ரீஹரி ரூபங்கள் முறையே 1. மனஸ் 2. அஹங்கார 3. மஹத் 4. அவ்யக்த என்னும் தத்வங்களில் இருந்து, அந்த தத்வங்களின் அபிமானி தேவதைகளின் மூலம் அனைத்து செயல்களையும் செய்கிறான். இத்தவைய சதுர்விதாத்மனான ஸ்ரீஹரி.

சதுரவித புருஷார்த்த சதுராத்ம நீனிரலு
இதர புருஷார்த்தனானொல்லெ |நானொல்லெ த்வத்பாத
ரதி பாக்ய நீனெ கருணிஸோ ||
(ஸ்ரீஜகன்னாததாசரின் தத்வசுவ்வாலி – 22 (211))

தர்ம, அர்த்த, காம, மோட்ச என்னும் நான்கு புருஷார்த்த ஸ்வரூபத்தின் சதுராத்ம – அனிருத்த, பிரத்யும்ன, சங்கர்ஷண மற்றும் வாசுதேவ ரூபங்கள் என்னும் நான்கு ரூபங்களைக் கொண்ட ஸ்ரீஹரி.

பிரளய காலத்தில் நாராயண என்னும் ஒரே ரூபத்தினால் இருந்த பகவந்தன் ஸ்ருஷ்டி செய்ய சங்கல்பம் செய்து, தன் பக்தர்களுக்கு மோட்சத்தைக் கொடுக்கும் ‘வாசுதேவ’ என்னும் ரூபத்தையும், சம்ஹாரத்திற்காக ‘சங்கர்ஷண’ என்னும் ரூபத்தையும், ஸ்ருஷ்டிக்காக ‘ப்ரத்யும்ன’ என்னும் ரூபத்தையும், காப்பதற்காக ‘அனிருத்த’ என்னும் ரூபத்தையும் எடுத்தான். (தாத்பர்ய நிர்ணய 1-6,7,8).

**715 சதுர்புஜாங்கித** - நான்கு கைகளைக் கொண்டவனான ஸ்ரீஹரி

**716 சதுர்முகபாதிப**
சதுர்முக+ ஆதி+ ப. சதுர்முகனான பிரம்மன் முதல் அனைவரையும் காப்பவனான ஸ்ரீஹரி.

**717 சதுர்விதார்த்தத**
1. தர்ம 2. அர்த்த 3. காம 4. மோட்ச இந்த நான்கு வித செல்வத்தையும் அருள்பவனான ஸ்ரீஹரி

**718 சதுர்வர்ணாஸ்ரம**
1. பிராமண 2. க்ஷத்ரிய 3. வைஷ்ய 4. ஷூத்ர இந்த நான்கு வர்ணாசிரமங்களையும் காப்பவனான ஸ்ரீஹரி.

**719 சதுர்முக்தி**
மாத்வ சம்பிரதாயத்தின்படி ஸாலோக்ய, ஸாமீப்ய, ஸாரூப்ய மற்றும் ஸாயுஜ்ய இவை முக்தியின் நான்கு வகைகள். ஸ்ரீஹரியில் பிரவேசத்தைப் பெறுவது சாயுஜ்ய; ஸ்ரீஹரியின்

இருப்பிடமான ஷ்வேதத்வீப, அனந்தாஸன, வைகுண்டங்களில் வசிப்பவது - ஸாலோக்ய; இந்த இடங்களை சுற்றிலும் இருப்பதான பாற்கடல் முதலான இடங்களில் வசிப்பது – ஸாமீப்ய. ஸ்ரீஹரியின் சிறந்த அணிகலன்களான ஸ்ரீவத்ஸ, கௌஸ்துபங்களைத் தவிர, ஸ்ரீஹரியின் சிறந்த ரூபத்தைப் பெறுவது ஸாரூப்ய முக்தி. இவ்வாறு அவற்றை ஸ்தூலமாக அர்த்தம் கொள்ளலாம். ஸாயுஜ்ய என்றால், ஸ்ரீஹரியுடனான ஐக்யம் இல்லை. வெறும் சம்பந்தம் மட்டுமே.

**720 சதுஷ்டயீஷ்வரதா**

அனித்யத்வம் தேஹாதிர் துக்கப்ராப்தி ரபூர்ணதா |
நாஷஷ்சதுர்விதோக்ஞேய ஸ்தரபாவோஹரேஸ்ஸதா ||

அநித்யத்வ, தேக நாசம், துக்க ப்ராப்தி மற்றும் அபூர்ணத்வ ஆகிய இந்த நான்கு வித நாசங்களும் ஸ்ரீஹரிக்கு இல்லை ஆகையால் இந்த நான்கு நாசங்களுக்கும் ஸ்வாமியான ஸ்ரீஹரி.

**721 சதுஸ்ஸமுத்ரக; 722 சதுரதரமதி**
**723 சதுர்விதாயதா; 724 சதுர்பலாம்புதி**
**725 சதுர்வேதார்த்திசரண**

ரிக், சாம, யஜு மற்றும் அதர்வண இந்த நான்கு வேதங்களால் பூஜிக்கப்படுபவனான ஸ்ரீஹரி.

**726 சதுஷ்சாஸ்த்ரபூஜ்ய –**

நான்கு சாஸ்திரங்களால் பூஜிக்கப்படுபவனான ஸ்ரீஹரி.

**பஞ்சமுக[2] முக[2]பஞ்ச முக[2]னுத**
**பஞ்சஜனரிபு பஞ்ச மோக்ஷத[3]**
**பஞ்ச பாண்ட[3]வ ப்ராணவர பஞ்சாக்ருதவ்ராத |**
**பஞ்ச ஷரபித பஞ்சவ்யோஹ ஸு**
**பஞ்சபே[4]த[3]மத பஞ்ச பர்வஹ**
**பஞ்ச காலக்ஞுக்ஞு ஸம்ப்[4]ருத பஞ்சபா[3]ண நமோ || 51**

**727 பஞ்சமுக**

முக – யக்ஞு. அனிருத்த சரீரத்தால் முக்தி அடைந்த ஜீவியை பகவந்தன் ஆதியில் ஆகாஷத்தில் இருக்க வைக்கிறான். பிறகு

மேக மண்டலத்தில் வைத்து, மழையின் மூலம் பூமியில் விளையும் தான்யாதிகளில் வைக்கிறான். திரும்ப அங்கிருந்து புருஷனின் தேஜோமயமான ரேதஸ்ஸில் சில காலம் வைத்து, அந்த புருஷனின் மூலமாக பெண்ணின் கர்ப்பத்தில் வைக்கிறான். பிறக்கும் அந்த ஜீவனுக்கு மட்டும் கர்ப்பத்தில் ஸ்ரீஹரி அனிருத்தாதி பஞ்சரூபங்களால் ஸ்தூல சரீரத்தை அருள்கிறான்.

இங்கு ககன, மேக, பூமி, புருஷ மற்றும் ஸ்த்ரி அக்னிகள். இந்த ஐந்து அக்னிகளில் மறக்காமல் ஜீவிகளை தேவதைகள் ஸ்ரீஹரியில் ஹோமிக்கின்றனர். என்று கூறும் கிரமத்திற்கு பஞ்சமஹாயக்ஞ என்று பெயர். தேவதைகளால் இவ்விதமான பஞ்ச மஹாயக்ஞத்தை ஏற்றுக் கொள்பவனான ஸ்ரீஹரி.

**728 முகபஞ்ச**
சிங்கத்தின் முகமும் மானவ சரீரமும் உள்ளவனான நரசிம்மாவதாரியான ஸ்ரீஹரி.

**729 முகனுத**
முக – சிவ. சிவனால் பூஜை செய்யப்படுபவனான ஸ்ரீஹரி. நாமம் கிரிஜாபதி நமித பார்க்கவும்.

**730 பஞ்சஜனரிபு**
ஹிரண்ய கஷ்யபனின் இரண்டாம் மகனான சஹ்லாதனின் மகனே பஞ்சஜன். இவன் ஸ்ரீகிருஷ்ணனின் குருவான சாந்தீப முனியின் புத்திரனை அபகரித்து கடலில் மறைத்து வைத்தான். பலராம கிருஷ்ணர்கள் வித்யாப்யாசத்தை முடித்து ‘குரு தக்ஷிணையை ஏற்றுக் கொள்ள வேண்டும்’ என்று சொல்ல, முனிவர் ‘இறந்த புத்திரனை கொண்டு வந்து கொடு’ என்றார்.

ராமகிருஷ்ணர் சமுத்திரராஜனிடமிருந்து அனுமதி பெற்று, கடலில் சென்று தேட, குரு புத்திரன் அங்கு இல்லை. ஆனால் பஞ்சஜன்ய என்னும் சங்கினைப் பெற்றனர். யமனின் பட்டணத்திற்குச் சென்று, அங்கிருந்த குரு புத்திரனை அழைத்து வந்து குருவிடம் ஒப்படைத்தனர். இவ்வாறு பஞ்சஜனரிபு’ஆன ஸ்ரீகிருஷ்ணாவதாரியான ஸ்ரீஹரி. (பாகவத 10ம் ஸ்கந்தம் 42ம் அத்தியாயம்).

**731 பஞ்சமோக்ஷத**

ஐந்து வகையான மோட்சங்கள் உள்ளன. 1. ஸாலோக்ய – பகவந்தனின் சமான லோகபிராப்தி. 2. ஸாரிஷ்டி – யோக்யதைக்கேற்ப ஐஸ்வர்ய ப்ராப்தி 3. ஸாமீப்ய – பகவந்தனின் சமீபஸ்தான பிராப்தி. 4. ஸாரூப்ய – பகவந்தனின் ஸமான ஸ்வரூப ப்ராப்தி 5. ஸாயுஜ்ய – பகவந்தனிலேயே லய ப்ராப்தி. இத்தகைய முக்தியைக் கொடுப்பவனான ஸ்ரீஹரி. நாமம் 719 சதுர்முக்தி – பார்க்கவும்.

**732 பஞ்சபாண்டவ ப்ராணவர**

மம ப்ராணா: பாண்டவா: – என்று சொல்லி, ஐந்து பேர் பாண்டவர்களையும், அவர்களுக்கு வந்த ஒவ்வொரு ஆபத்திலிருந்தும் அவர்களை காப்பாற்றிய ஸ்ரீகிருஷ்ணாவதாரியான ஸ்ரீஹரி.

**733 பஞ்சாக்ருதப்ராத**

ப்ராத – சமுதாய / கூட்டம். அசுரர்களின் சமுதாயத்தை பஞ்சத்வத்தை வென்றவன் – அதாவது கொன்றவனான ஸ்ரீஹரி.

**734 பஞ்ச ஷரபித**

1. அரவிந்த 2. அஷோக 3. சூத 4. நவமல்லிகா மற்றும் 5 நீலோத்பல என்னும் ஐந்து வண்ணங்கள் உள்ள பஞ்சாகர (மன்மத) காமதேவனை, சிவனின் மூன்றாவது கண்ணால் சுட்டு பஸ்மமான பிறகு, ஸ்ரீகிருஷ்ணாவதாரத்தில் காமதேவனுக்கு தந்தையான ஸ்ரீஹரி. (பாகவத 10ம் ஸ்கந்தம் உத்தரார்த்த 68ம் அத்தியாயம்).

**735 பஞ்சவ்யூஹ**

அனிருத்த, பிரத்யும்ன, சங்கர்ஷண, வாசுதேவ மற்றும் நாராயண ரூபி பஞ்சவ்யூஹனானவனான ஸ்ரீஹரி

**736 பஞ்சபேதமத**

1. ஜீவ ஜீவ பேத 2. ஜீவ ஜட பேத 3. ஜீவ ஈஷ பேத 4. ஜட ஜட பேத 5. ஜட ஈஷ பேத - என்று பஞ்சபேதங்களை சொல்லும் பேத மதத்திலேயே அபிமானம் வைத்திருப்பவனான ஸ்ரீஹரி. நாமம் 493 பேதவாதீஷா பார்க்கவும்.

**737 பஞ்சபர்வஹ**

1. தாமிஸ்ர 2. அந்த தாமிஸ்ர 3. மோஹ 4. மஹாமோஹ 5. நிதன; அல்லது 1. மாயை 2. அவித்யை 3. ப்ராந்தி 4. அஞ்ஞான 5. சம்வ்ருதி அல்லது 1. மோஹன 2. விஷீகரண 3. உச்சாடணை 4. வித்வேஷண 5. மாரண – இவற்றை அழிப்பவனான பஞ்சபர்வஹனான ஸ்ரீஹரி.

**738 பஞ்சகலாக்ஞக்ஞ**

1. அபிகமன 2. உபாதான 3. இச்யா 4. ஸ்வாத்யாய மற்றும் 5. யோக – இந்த ஐந்து காலங்களில் ஸ்ரீஹரியை பூஜிப்பது. 1. அபிகமன: விடியலில் சுமார் 4.30 மணிக்கு சௌஷாதிகளை முடித்து, ஸ்னான, ஸந்த்யா, ஜபங்களை த்ரிகரண சுத்தியுடன் செய்வது. 2. உபாதான: காலையில் 9 மணியிலிருந்து 12 மணிக்குள் பகவத் ஆராதனைக்கு தேவையான புஷ்ப, பழம் ஆகியவற்றை சேகரிப்பது. 3. இஜ்யா: மதியம் 12 மணியிலிருந்து பகவத் ஆராதனைக்குக் கொண்டு வந்த பதார்த்தங்களால் பகவத் ஆராதனை செய்வது. 4. ஸ்வாத்யாய : நான்காம் ப்ரஹரத்தில், பவித்ர கிரந்தங்களை படிப்பது; பிரவசனங்களை கேட்பது, சிந்திப்பது, அத்யயன, வியாக்யான, மற்றும் பாட பிரவசனங்களை நடத்துவது. 5. யோக: இரவு திரும்ப பகவத் பூஜை செய்து பிராணாயாம மற்றும் த்யானாதி அஷ்டாங்க யோகத்தை செய்து, ஓய்வு எடுப்பது. இப்படியாக ஆராதிப்பவர்களுக்கு விஷயனானவனான ஸ்ரீஹரி.

**739 ஸம்ப்ருத பஞ்சபாண**

1. காமனை போஷித்து காத்தவனான – காமபிதனான ஸ்ரீகிருஷ்ணாவதாரியான ஸ்ரீஹரி. 2. பஞ்சபாண ரூபமான வாயுதேவரை காத்தவனான ஸ்ரீஹரி.

**ஷட்ஸஹோத$^{3}$ர ஷட்சரணசர**
**ஷட்பத்னான்ஹன் ஷடூ$^{3}$ர்மிஹர**
**ஷட் ஷக்தாத்மக் ஷட்கு$^{3}$ணேஷ்வர ஷட்$^{3}$ருத ப்ரவஹ |**
**ஷட்கராபி$^{4}$த$^{3}$ ஷட்பரோக்ஷத$^{3}$**
**ஷட்க்ருக$^{3}$ ஷட் ஷாஸ்த்ய ப்ரய த$^{1}$ம**
**ஷட்கஸஹக$^{3}$ ***** நமோ || 52**
**(மேலுள்ள நுடியில் கடைசி வரியில் கடைசி இரு நாமங்கள் மட்டும் கிடைக்கவில்லை).**

*** 53வது ஸ்லோகம் கிடைக்கவில்லை.**

**740 ஷட்ஸஹோதர**

ஸ்ரீகிருஷ்ணனே, நீயே நாராயணன். உன்னிடம் நான் சரணடைகிறேன். முன்னர் இறந்திருந்த குரு புத்திரனை பிழைக்க வைத்தாய். அப்படியே இறந்திருக்கும் என் ஆறு பேர் மக்களை - உன் அண்ணன்கள். அவர்களை பிழைக்க வைப்பாயாக. -- என்று தேவகி கேட்டுக் கொண்டாள். ஸ்ரீகிருஷ்ணன் அப்படியே ஆகட்டும் என்று கூறி, ஸுதலோகத்தில் இருந்த பலி ராஜனிடம் சென்றபோது, பலி அவனை பக்தியுடன் வரவேற்றான். 'ஸ்வாமியே, நாங்கள் உன்னை த்வேஷிக்கும் தைத்ய குலத்தவன்.

ஆனாலும் எனக்கு தரிசனம் அளித்து அருளியிருக்கிறாய்' என்று வணங்கினான்.அப்போது ஸ்ரீகிருஷ்ணன் 'பலிராஜனே, ஸ்வாயம்புவ மன்வந்தரத்தில் பிரம்மபுத்ர மரீசிக்கு ஊர்ணா என்னும் மனைவியிடம் ஆறு பேர் மக்கள் பிறந்தனர். அவர்கள் தேவர்களை கேலி பேசியதால், சாபம் பெற்று காலநேமி என்னும் தைத்யனின் மக்களாக பிறந்தனர். ஹிரண்யகசிபுவின் சாபத்தினால் துர்காதேவி அவரை தேவகியின் கர்ப்பத்தில் வைத்தாள். அவர்கள் பிறந்த உடனேயே கம்சனால் கொல்லப்பட்டனர். அந்த ஆறு பேரும் உன்னிடம் உள்ளனர். தாயின் துக்கத்தை களைவதற்காக அவர்களை நான் இப்போது கேட்கிறேன். ஸ்மர, உத்கீத, பரிஷ்வங்க, பதங்க, க்ஷுத்ரப்ருத் மற்றும் க்ருணி' என்னும் பெயரைக் கொண்ட இந்த ஆறு பேரும் என் அருளால் முன்னர் முக்தியை அடைகின்றனர்' என்று கூறுகிறான்.

இவ்வாறு கூறி, ஸ்ரீகிருஷ்ணன் அவர்களுக்கு முன்னர் இருந்ததைப் போலவே சரீரத்தைக் கொடுத்து, தேவகியிடம் அவர்களை அழைத்து வந்தான். அப்போது கிருஷ்ண ஸ்தன்யத்தை தேவகி அவர்களுக்கும் கொடுக்கிறாள். அந்த ப்ரசாதத்தினாலும், ஸ்ரீகிருஷ்ணனின் ஸ்பரிசத்தாலும் அந்த ஆறு பேருக்கும் மூல ரூபங்கள் வந்து, அவர்கள் தம் இருப்பிடத்திற்கு சென்றனர். இதன்படி ஷட்ஸஹோதரனானவனான ஸ்ரீகிருஷ்ணாவதாரத்தின் ஸ்ரீஹரி.

**741 ஷட்ரணசர**

1. மல்யுத்தம் 2. கதாயுத்தம் 3. பாண யுத்தம் 4. வாள் யுத்தம் இதைப் போன்ற ஆறு வித யுத்தங்களில் தலைவனான ஸ்ரீஹரி

**742 ஷட்ஸபத்னான்ஹன்**

காம, க்ரோதாதி ஆறு எதிரிகளை கட்டுப்படுத்துபவனான ஸ்ரீஹரி

**743 ஷடூமீஹர**

1. பசி 2. தாகம் 3. சோகம் 4. மோகம் 5. கோபம் மற்றும் 6. த்வேஷம் இந்த ஆறு பிரச்னைகளையும் போக்குபவனான ஸ்ரீஹரி 'ஞானாய ஜாப்ரதி நிவ்ருத்த குணோர்விசக்ர' (பாகவத 2-3-12).

**744 ஷட்ஷக்த்யாத்மக & 745 ஷட்குணேஷ்வர**

நாம 96 பலபூர்ண; நாம 453 ஸுகுணநோததே பார்க்கவும்.

**746 ஷட்ருதப்ரவஹ**

வஸந்த, க்ரீஷ்ம முதலான ஆறு ருதுகளை காலத்திற்கு தக்கவாறு செலுத்துபவனான ஸ்ரீஹரி.

**747 ஷட்கராபிப** - ஆறு கைகளைக் கொண்டவனான ஸ்ரீஹரி

**748 ஷட்பரோக்ஷத**

பரோக்ஷ – தர்ஷன. ஆறு விதமான பரோக்ஷ தர்சனங்களை அருள்பவனான ஸ்ரீஹரி

**749 ஷட்க்ரயக**

அத்யயன, அத்யாபன, யஜன, யாஜன, தான, ப்ரதிக்ரஹ இந்த ஆறு கர்மங்களையும் தான் சரீரத்தில் இருந்தவாறு செய்து, செய்விப்பவனான ஸ்ரீஹரி.

**750 ஷட்சாஸ்திர ப்ரிய**

பகவந்தன் வேதவியாச அவதாரத்தை எடுத்து, அதிகாரிகள் தத்தம் தகுதிக்கேற்ப, தத்வஞான, வைதிக பதங்களின் சம்ஸ்கார மற்றும் அதன் மூலம் உத்தம உலகங்களின் பிராப்தி இவற்றைப் பெறட்டும் என்று நான்கு வேதங்கள், ஐந்தாம் வேதம் என்று புகழ்பெற்ற, இதிஹாஸ மற்றும் புராண மற்றும் நிர்ணாயக சாஸ்திர

எனப்படும் பிரம்மசூத்ர என ஆறு சாஸ்திரங்களை இயற்றி, ஷட்சாஸ்திரிய ப்ரிய - என்று அழைக்கப்படுபவனான, ஸ்ரீவேதவியாஸ அவதாரியான ஸ்ரீஹரி.

**751 தமஷட்கஸஹக**
நாம 353 கடுமதிக்ன பார்க்கவும்.

**752 மற்றும் 753** இந்த இரு நாமங்களும் இந்த 52ம் நுடியில் இன்னும் கிடைக்க வேண்டியிருக்கிறது.

**அஷ்டகாரண ஷிஷ்டமஹிஷேய**
**ரஷ்டகாஸ்ரம அஷ்டமதஹர**
**அஷ்டகாஷ்டக அஷ்டபூ[4]ததா[3]வ்யஷ்ட ஸ்ருத்யஹ ।**
**அஷ்டத[3]ள அக்ஷோபஜஹர**
**அஷ்ட நாக[3]ப அஷ்ட பு[4]ஜத[4]ர**
**அஷ்டாயுத[4] ஸம்ப்[4]ருதாஷோஷ[2]த[4] த்ரிபா[4]ங்க[3] நமோ ।। 54**

**754 அஷ்டகாரண** - நாம 169 ஸ்ருஷ்ட்யாத்யஷ்டகாரண பார்க்கவும்.

**755 சிஷ்ட்யமஹிஷீயரஷ்டகாஸ்ரய**
அஷ்ட மஹிஷியர்களான 1. ருக்மிணி 2. ஜாம்புவதி 3. ஸத்யபாமை 4. காளிந்தி 5. மித்ரவிந்தா 6. நீலா (ஸத்யா) 7. பத்ரா மற்றும் 8 லட்சணா - இந்த எட்டு பட்ட மஹிஷியர்களுக்கு ஆதரவான ஸ்ரீகிருஷ்ணாவதாரியான ஸ்ரீஹரி.

**756 அஷ்டமதஹர**
1. தன 2. குல 3. வித்யா 4. ரூப 5. யௌவன 6.பல 7. பரிவார 8. அதிகார. அல்லது 1. அன்னமத 2. அர்த்தமத 3. அஹங்கார மத 4. வைபவமத 5. ஸாஹஸ மத 6. தாத்ரிவஷ மத 7. ப்ராயமத மற்றும் மோஹ மத. இத்தகைய மதங்களைக் கொண்ட தைத்யர்களை அழித்தவனான ஸ்ரீஹரி.

**757 அஷ்டகாஷ்டக**
எட்டு திசைகளில் வெளிப்படுபவனான ஸ்ரீஹரி.

**758 அஷ்டபூதித**
தன் பக்தர்களுக்கு அஷ்ட ஐஸ்வர்யங்களையும் அருள்பவனான ஸ்ரீஹரி

**759 அவ்யஷ்டவ்யத்யஹ**
அஷ்ட ஐஸ்வர்ய இல்லாத சம்சாரத்தை விலக்குபவனான ஸ்ரீஹரி.

**760 அஷ்டதஷ அக்ஷோஹிணி ப்ரஜஹர**
பூ-பார ஹரணத்திற்காக அவதாரம் செய்த ஸ்ரீகிருஷ்ண பரமத்மன், பாண்டவ கௌரவர்களில் போர் வந்தபோது, பாண்டவர்களின் சார்பில் நின்று, குருக்ஷேத்ர யுத்தத்தில் 18 நாட்களில் 18 அக்ஷோஹிணி சைன்யம் முழுக்க அழியுமாறு செய்தவனான ஸ்ரீகிருஷ்ணாவதாரியான ஸ்ரீஹரி.

**761 அஷ்டநாகப**
நாக – யானை. 1. ஐராவத 2. புண்டலீக 3. வாமன 4. குமுத 5. அஞ்சன 6. புஷ்பதந்த 7. ஸார்வபௌம 8. ஸுப்ரதீக. இந்த எட்டு யானைகளை அல்லது அஷ்ட நாகங்களை காப்பவனான ஸ்ரீஹரி.

**762 அஷ்டபுஜதர; 763 அஷ்டாயுதா ஸம்ப்ருத**
ஸ்ரீஹரி எட்டு தோள்களை தரித்து, அவற்றில் ஒவ்வொன்றிலும் ஒவ்வொன்று ஆயுதத்தை ஏந்தியிருக்கிறான். அதன் விவரம்.

1. தர்மஞானாதி குண ஸமேதமான ஸத்குண – ஸ்ரீதேவி என்னும் பத்ம
2. ஓஜஸ், பலம் இவற்றுடனான பிராண என்னும் கதை
3. ஜலதத்வத்தின் சங்கு
4. தேஜஸ் தத்வத்தின் சக்ர
5. ஆகாஷ தத்வத்தின் வாள்
6. தமஸ் தத்வத்தின் கேடயம்
7. காம ரூபமான சார்ங்க தனுஸ்
8. புண்ய கர்மமான – அம்பறாத்தூணி

இவ்வாறு எட்டு தோள்களில் எட்டு ஆயுதங்களை தரித்தவனான ஸ்ரீஹரி. (ஸ்ரீமத் பாகவத 12ம் ஸ்கந்தம் க்ரியா யோகம் மானஸ பூஜா விபாகம்).

**764 அஷ்டௌஷத**

1. ஆஸவ 2. அரிஷ்ட 3. சூர்ண 4. யாத்ரெ 5. பஸ்ம 6. அஞ்சன 7. லேஹ்ய 8. தூப. இவ்வாறான எட்டு வித ஔஷதிகளில் நிலைத்திருப்பவனான தன்வந்திரி ரூபத்தின் ஸ்ரீஹரி.

**765 த்ரிபாங்க**

1. ஸ்வ ப்ரகாஷ 2. பர ப்ரகாஷ 3. உபய ப்ரகாஷ என்னும் மூன்று வித ப்ரகாஷத்தைக் கொண்டவனான ஸ்ரீஹரி.

**நவஸூரத்னா ப$^{4}$ரணயுக த்ரி**
**ர் நவக$^{1}$ப்ரிய நவத்$^{3}$வார புரப்ரபே$^{4}$ம்**
**நவஷக்த்யாத்மக நவக்$^{3}$ரஹ நவத$^{3}$யாகு$^{3}$ண |**
**நவரஸேஷ்வர நவப்ரஷேஷப**
**நவ நிதீ$^{4}$ஷ நவார்த$^{4}$னே தா$^{4}$**
**நவரிபுவெ நவகோச்ய மரரிம் நமித சரண நமோ || 55**

**766 நவரத்னாபரணயுக்**

1. மௌக்திகா 2. மாணிக்ய 3. வைடூர்ய 4. கோமேத 5. வஜ்ர 6. விட்ரூம 7. பத்மராக 8. மரகத மற்றும் 8 நீல. இந்த நவரத்னங்களால் நிர்மாணிக்கப்பட்ட ஆபரணங்களை தரித்தவனான ஸ்ரீஹரி.

**767 த்ரிர்நவகப்ரிய**

(3*9) அதாவது 27 தத்வங்களில் நிலைத்திருப்பவனான ஸ்ரீஹரி.

**768 நவத்வாரபுர ப்ரபேம்**

புரஞ்சன எனப்படும் இந்த சரீரத்திற்கு ஒன்பது த்வாரங்கள். மேலேயிருந்து 7 வாயில்கள். இரு கண்கள், இரு காதுகள், மூக்கில் இரு துளைகள் மற்றும் ஒரு வாய். கீழிருந்து இரு வாயில்கள் – மல மூத்ர த்வாரங்கள் இத்தகைய புர – பட்டணத்தில் ஜீவாத்மனுடன் சேர்ந்து சரீரத்தில் பிம்பரூபமாக இருக்கும் பரமாத்மன், தன் ப்ரபை – அதாவது, ஒளியினால் ஒளிர்பவனான ஸ்ரீஹரி. (ஸ்ரீமத் பாகவத 4-24,25,26,27,29 அத்தியாயங்கள்).

**769 நவஷக்த்யாத்மக**

விமலா, உத்கர்ஷிணி ஆகிய ஷக்தி ரூபமான ஸ்ரீஹரி.

**770 நவக்ரஹ**

1. சூர்ய 2. சந்திர 3. அங்காரக 4. புத 5. குரு 6. சுக்ர 7. சனி 8. ராஹு 8. கேது – இந்த ஒன்பது கிரகங்களின் அந்தர்யாமியாக இருந்து, அவற்றின் நியாமகனாக இருப்பவனான ஸ்ரீஹரி.

**771 பவதாயாகுண; 772 நவரஸேஷ்வர**

நகை , அழுகை , இளிவரல் , மருட்கை , அச்சம் , பெருமிதம் , வெகுளி , உவகை , அமைதி – இந்த நவரசங்களின் தலைவனான ஸ்ரீஹரி.

**773 நவ ப்ரஜேஷப**

நவ+ ப்ரஜேஷ+ ப. பிரம்மதேவர் தம் அவயவங்களால் நவ ப்ரஜேஷ்வரர்களை படைத்தார். அதன் விவரம். 1. மனதிலிருந்து – மரீசி 2. அங்குஷ்டத்தால் – தக்ஷ 3. ப்ராணத்தால் – வசிஷ்டர் 4. சர்மத்தினால் – ப்ருகு 5. கையினால் – க்ரது 6. நாபியினால் – புலஹ 7. காதுகளால் – புலஸ்த்ய 8. முகத்தினால் – அங்கீரஸ 9. கண்களால் – அத்ரி. இத்தகைய பிரம்மனால் படைக்கப்பட்ட ப்ரஜேஷ்வரர்களை காப்பவர்களான ஸ்ரீஹரி. (ஸ்ரீமத் பாகவத 3ம் ஸ்கந்தம் 18ம் அத்தியாயம்).

**774 நவிநிதீஷ**

1. மஹாபத்ம 2. பத்ம 3. ஷங்க 4. மகர 5. கச்சப 6. முகுந்த 7. குந்த அல்லது நந்தக 8. நீல 9. வர அல்லது கர்க்க. இந்த நவநிதிகளின் தலைவனான ஸ்ரீஹரி.

**775. நவார்த்தன**

நவவித பக்தியினால் ஒன்பது விதமான தோஷங்களை அழிப்பவனான ஸ்ரீஹரி. நவவித பக்தி, நவதோஷங்களின் விவரம் – ஸ்ரீமத் பாகவதத்தில் மற்றும் ஸ்ரீவிஷ்ணு தீர்த்தரின் பாகவத சாரோத்தாரத்தில் இருக்கிறது.

**த³ஷஷதானன த³ஷஷதாம்ப³க**
**த³ஷஷத ஸுதோர்த³ண்ட³ த⁴ரக²ள**
**த³ஷத³ஷாபி⁴த³ த³ஷஷதாபி⁴த³ க²கா²மரப**

**த$^{3}$ஷவரூத$^{2}$ஜ த$^{3}$ஷமுக$^{2}$க்$^{4}$ன த்ரி**
**த$^{3}$ஷ ப$^{3}$யாந்தக த$^{3}$ஷககுப$^{4}$ ஹஸத்**
**த$^{3}$ஷன த$^{3}$ஷமதிபா$^{4}$ஷ்ய ரதத$^{3}$ர்ஷனி ஷத்$^{3}$ரக்ஷ நமோ || 56**

776 **தானவரிபுவெ** - தானவ வைரியானவனான ஸ்ரீஹரி

777 **நவகோட்யாமரரின் நமிப சரண**
நவகோடி தேவதைகளால் வணங்கப்படுபவனான ஸ்ரீஹரி

778 **தஷஷதானன**
(ஆனன - முகம்). ஆயிரக்கணக்கான முகங்களைக் கொண்டவனான ஸ்ரீஹரி. சஹஸ்ர சீர்ஷா புருஷ: - புருஷ சூக்தம்.

779 **தஷஷதாம்பக**
அம்பக - கண். ஆயிரக்கணக்கான கண்களைக் கொண்டவனான ஸ்ரீஹரி.

780 **தஷஷதஸுத**
ஸுத - மக்கள். ஆயிரக்கணக்கான மக்கள் கொண்டவனான ஸ்ரீஹரி.

781 **ஓர்தண்டதரகள**
உன்மத்தரான அசுரர்களை தண்டித்து சம்ஹரித்தவனான ஸ்ரீஹரி

782 **தஷதஷாபித**
தஷாவதாரங்களுக்கு பெயர் பெற்றவனான ஸ்ரீஹரி

783 **தஷஷதாபித**
ஆயிரக்கணக்கான பெயர்களால் அழைக்கப்படுபவனான ஸ்ரீஹரி.

784 **ககாமரப**
பறவைகளிலிருந்து துவங்கி தேவதைகள் வரை - அனைவரையும் காப்பவனான ஸ்ரீஹரி.

785 **தஷவரூதஜ**
வரூத - ரத. தசரதனின் புத்திரனான ஸ்ரீராமவதாரியான ஸ்ரீஹரி

**786 தஷமுகக்ன**

ஸ்ரீஹரியின் வாயிற் காப்பாளர்களான ஜயவிஜயர், தம் இரண்டாம் பிறவியில் ராவண, கும்பகர்ணனாக பிறந்து, ஸ்ரீஹரியின் த்வேஷிகளாக இருந்து, ஸ்ரீசீதாதேவியை அபகரித்ததால், ஸ்ரீராமாவதாரத்தில் 10 தலை அரக்கனை, ராவணனைக் கொன்றவனான ஸ்ரீஹரி.

**787 த்ரிதஷபயாந்தக**

த்ரி+தஷ=த்ரிதஷ. தேவதைகளின் பயம் மற்றும் பலி முதலான தொந்தரவுகளை போக்கிய ஸ்ரீஹரி. த்ரிதஷ – இதற்கு ஸ்ரீஜகன்னாததாசர் இயற்றிய ஹரிகதாம்ருதசார 12ம் சந்தி, 25ம் நுடியைப் பார்க்கவும்.

**788 தஷகருபஹஸத் தஷன**

தஷ – 10. கருப – திசை. ஹஸத்+ நகுவ. தஷத – 10 திசைகளிலும் வியாப்தனாக இருந்து புன்னகைத்துக் கொண்டிருப்பவனான ஸ்ரீஹரி.

**789 தஷமதிபாஷ்யரத தர்ஷன**

தஷமதி – கூர்மையான புத்தியுள்ள, மத்வாசார்யர். மத்வாசார்யர் இயற்றிய பாஷ்ய கிரந்தங்களுக்கு ப்ரியனான ஸ்ரீஹரி.

**790 ஈஷத்ரக்ஷ**

ருத்ரதேவரை காத்தவரான ஸ்ரீஹரி

**ஷதஸுகா$^2$ர்த்தி$^4$த ஷதாப்$^3$தி$^2$ஷயன ஸு**
**ஷதமகா$^2$ர்ச்சித ஷத கோ$^3$பீபதெ**
**ஷதஸோமப ந்ருஷஷதக ஸ்தா$^2$பக ஷதஷதாம்ஷத$^4$ரா |**
**ஷதகுஞ்சஹன் ஷதகுலோத்$^3$த$^4$ர**
**ஷதாயு:ப்ரத$^3$ ஷதாபராத$^4$ப**
**ஷதஸஹஸ்ரார்க்காபி$^4$ ஷதபத்ராக்ஷஸுக$^2$த$^3$ நமோ || 57**

**791 ஷதஸுகார்த்தித**

ஷதஸுக – பிரம்ம. ஆர்த்த – ஆராதிக்கப்படும். பிரம்மதேவரால் ஆராதிக்கப்படுபவனான ஸ்ரீஹரி.

**792 ஷதாப்திஷயன**

நூறு ஆண்டுகள் பிரளய ஜலத்தில் சயனித்திருப்பவனான ஸ்ரீஹரி

**793 ஸுஷதமகார்ச்சித**

நூறு யக்ஞங்களை செய்த இந்திரனால் பூஜிக்கப்படுபவனான கிருஷ்ணாவதாரியான ஸ்ரீஹரி.

**794 ஷதகோபீபதெ**

நூற்றுக்கணக்கான கோபிகாஸ்த்ரீயர்களின் பதியான ஸ்ரீகிருஷ்ணாவதாரியான ஸ்ரீஹரி.

**795 ஷதஸோமப**

நூறு பேர் ஸோம பானத்தை குடிப்பதற்கு தகுதியான தேவதைகளை காப்பவனான ஸ்ரீஹரி.

**796 நூறு ஜனஸ்தோமபாஸாஹரரு**

| | |
|---|---|
| மருத் கணர்கள் | 49 |
| அஸ்வினி தேவதைகள் | 2 |
| விஸ்வே தேவதைகள் | 10 |
| ருத்ரர்கள் | 11 |
| சூரியர்கள் | 12 |
| ப்ருஹஸ்பதி | 1 |
| பித்ருகண | 3 |
| வசுகள் | 8 |
| முக்ய பிராணதேவர் | 1 |
| த்யுலோக அபிமானி, வாயு தேவரின் மனைவி பாரதி தேவி | 1 |
| பூமி | 1 |
| ருபுகண | 1 |

(ஸ்ரீஜகன்னாததாசரின் ஹரிகதாம்ருதசார 29ம் சந்தி அணுதாரதம்ய சந்தி பார்க்கவும்).

**797 ந்ருபஷத கஸ்தாபக**
ப்ரியவ்ரத, மாந்தாதா, பலி, ஹய ஹய: இப்படியான நூற்றுக்கணக்கான அரசர்களுக்கு தக்க ஸ்தானத்தைக் கொடுத்தவனான ஸ்ரீஹரி

**798 ஷதஷதாம்ஷதரா**
அனேக அம்சங்களையும் தாரணம் செய்தவனான ஸ்ரீஹரி

**799 ஷதகுஞ்சஹன்**
ஷதகுஞ்ச என்னும் அசுரனைக் கொன்றவனான ஸ்ரீஹரி

**800 ஷதகுலோத்தர**
ஷத – அதிகம். கம்சனின் தொந்தரவு தாங்காமல் தேசத்தை விட்டு சென்றவர்கள் அனைவரையும் த்வாரகைக்கு அழைத்து வந்து அமர்த்திய ஸ்ரீகிருஷ்ணாவதாரியான ஸ்ரீஹரி.

**801 ஷதஸஹஸ்ரார்க்காபி**
அர்க்க – சூரியன். ஆயிரக்கணக்கான சூரியர்கள் ஒரே சமயத்தில் உதயம் ஆனால் வரும் ஒளியைவிட அதிகமான ஒளியைக் கொண்டவனான ஸ்ரீஹரி

**802 ஷதாயு:புத**
மனுஷ்ய ஜீவிகளுக்கு ஒரு நூறு ஆண்டுகள் வரை ஆயுளைக் கொடுத்து, வாழ்க்கையை நடத்துவதாகவும், சாதனையை செய்துகொண்டு உத்தம உலகத்தை அடையுமாறு அருளியவனான ஸ்ரீஹரி

**803 ஷதாபராதிப** - நாம 188 தூஷர்ணாந்தக பார்க்கவும்

**804 ஷதபத்ராக்ஷஸுகத**
ஷதபத்ர – தாமரை. அக்ஷ – கண். தாமரையைப் போன்ற கண்களைக் கொண்ட ஸ்ரீலட்சுமிதேவியை தன் அர்த்தாங்கினியாகக் கொண்டு, பாரதி சரஸ்வதியரும் தன் மருமகளாகவும், அவர்களுக்கு அனைத்து சௌபாக்கியங்களை அருளி, அபாரமான சுகத்தைக் கொடுப்பவனான ஸ்ரீஹரி.

**க்ஷிதிப்லவோத்$^{3}$த$^{4}$ர க்ஷிதிப்$^{4}$ருலோத்$^{3}$த$^{4}$ர**
**க்ஷிதிதளோத்$^{3}$த$^{4}$ர க்ஷிதிசரனகர**
**க்ஷிதி த்ரிபத$^{3}$த$^{4}$ரக்ஷிதி பக்ஷயகரக்ஷிதி கன்யாம்ஸகர |**
**க்ஷிதிஜனாகர க்ஷிதிக$^{2}$ள மோஹக**
**க்ஷிதிப$^{3}$ரார்த்த$^{3}$க க்ஷிதிதிபாலனகர**
**க்ஷிதிவலயசர க்ஷிதிஜனேதர க்ஷிதி ஸுரேஷ நமோ || 58**

**805 க்ஷிதிப்லவோத்தர; 806 க்ஷிதிப்ருதோத்தார**
**807 க்ஷிதிதளோத்தர; 808 க்ஷிதிசலனகார**
பூமி தன் பாதையில் செல்லுமாறு செய்தவனான ஸ்ரீஹரி

**809 க்ஷிதித்ரிபததர**
பூமியை மூன்று பாதங்களால் அளந்தவனான த்ரிவிக்ரம அவதாரியான ஸ்ரீஹரி

**810 க்ஷிதிபக்ஷகர ; 811 க்ஷிதிகன்யாம்ஸகர**
**812 க்ஷிதிஜனாகர**
பூமியில் மக்கள் வசிக்குமாறு செய்தவனான ஸ்ரீஹரி

**813 க்ஷிதிகளமோஹக**
பூமியின் மேல் உள்ள துஷ்ட அசுரர்களை மயக்கி அழித்தவனான ஸ்ரீஹரி

**814 க்ஷிதிஸுரேஷ**
க்ஷிதி பூமி ஸுர - தேவதைகள். ஈச - பிரபு. பூமியின் மேல் உள்ள தேவதைகள், என்றால், பிராமணர்கள் அவர்களின் பிரபுவான ஸ்ரீஹரி

**அம்பு$^{3}$க$^{3}$மன பயோம்பு$^{3}$மத$^{2}$ன ல**
**யாம்பு$^{3}$ தளகா$^{3}$ருணாம்பு$^{3}$ ஸடபா$^{3}$**
**ஹ்யாம்பு$^{3}$ ப்ரவஹக அம்பு$^{3}$ஷோஷக அம்பு$^{3}$தி$^{4}$ மத$^{3}$க்$^{4}$ன |**
**அம்பு$^{3}$க்$^{3}$ருஹ மஹாம்பு$^{3}$தே$^{4}$ த$^{3}$**
**ர்மாம்பு$^{3}$ஸ்ரீமத் அம்பு$^{3}$ஜேஷ ஸு**
**தா$^{4}$ம்பு$^{3}$தி$^{4}$ ஸமானோத$^{3}$யாம்பு$^{3}$த$^{3}$ கா$^{3}$த்ரக பித நமோ || 59**

**815 அம்புகமன**
பிரம்மனிடமிருந்து பிறந்த ஹிரண்யாக்ஷனை, கஷ்யப பத்னி திதியில் பிறந்த ஹிரண்யாக்ஷனை, பூமிதேவியை அபகரித்ததால், தண்ணீரில் மூழ்கி அவர்களை சம்ஹரித்தவனான ஸ்ரீஹரி. நாம 72 வரஹ பார்க்கவும்.

**816 பயோம்புமதன**
அம்ருதத்தை விரும்பி பாற்கடலை கடைய, மந்தார பர்வதத்தை மத்தாக வைத்து, செயலை செய்யத் துவங்கியபோது, மலை கீழே சரியத் தொடங்கியபோது, கூர்மனாக அந்த பர்வதத்தை தன் முதுகில் தாங்கி, இன்னொரு அஜித ரூபத்தினால் சமுத்திரத்தை தேவதைகளுடன் சேர்ந்து மதனம் செய்தவனான ஸ்ரீஹரி.

**817 லயாம்புதளக;** **818 அருணாம்புஸட**
**819 பாஹ்யாம்புப்ரவாஹக**
நாம 350 க.டா ஹபஞ்சக பார்க்கவும்

**820 அம்பு ஷோஷக**
(பிரளய காலத்தில்) அனைத்தையும் சம்ஹாரம் செய்யத் தொடங்கிய பகவந்தன், நரசிம்ம ரூபத்தினால் சமுத்திரத்தின் நடுவில் இருந்து, அங்கு இருக்கும் அபாரமான ஜலராஷியை பஸ்மம் ஆக்கியவன் என்று வைஹாயஸ சம்ஹிதை சொல்கிறது. இவ்வாறு தண்ணீரை எரித்தவனான நரசிம்மாவதாரியான ஸ்ரீஹரி

**821 அம்புதி மதக்ன** - நாம 48 வனதிபந்தவிஹார பார்க்கவும்

**822 அம்புக்ருஹ**
அம்பு = தண்ணீர். க்ருஹ – வீடு. பாற்கடலையே தன் வீடாக ஆக்கிக்கொண்டு, சேஷதேவரின் படுக்கையின் மேல் படுத்துக்கொண்டு ஸ்ரீதேவியினால் சேவையைப் பெற்றுக் கொள்பவனான ஸ்ரீஹரி

**823 மஹாம்புதே;** **824 அம்பஜேஷ**
அம்பு – சமுத்ரஜ – பிறந்தவள். ஈஷ – பதி. சமுத்திர மகளான ஸ்ரீலட்சுமி தேவியின் பதியான ஸ்ரீஹரி.

**825 ஸுதாம்புதி ஸமானோதர**

ஸுதா - பால். அம்புதி - சமுத்திரம். பாற்கடல். பாற்கடலுக்கு சமானமான வயிறு கொண்டவனான ஸ்ரீஹரி.

**826 அம்புதகாத்ரகபித**

அம்பு - நீர். த - கொடுக்கும். அதாவது, கருப்பு மேகம். க - பிரம்ம பித - தந்தை. அதாவது, ஸ்ரீஹரி மழை பொழியவைக்கும் கருப்பு மேகத்தைப் போல நீல வர்ணனான ஸ்ரீகிருஷ்ணாவதாரியான ஸ்ரீஹரி

**அக்$^{3}$னிபி$^{3}$ப$^{4}$ அப்$^{3}$த்$^{4}$யாக்$^{3}$னி ஸஹசர**
**அக்$^{3}$னிமய ப்ரளயயாக்$^{3}$னி லோசன**
**அக்$^{3}$னி கார்யாக்$^{3}$ஞாக்$^{3}$னி பூஜித அக்னிஹோத்ர யுதா |**
**அக்$^{3}$னிருத அன்னாக்$^{3}$னி கோபன**
**அக்$^{3}$னிஸ்தா$^{2}$பக அக்$^{3}$னிவ்யாபக**
**அக்$^{3}$னிவர்த்த$^{4}$க அக்$^{3}$னிதீ$^{3}$பக அக்$^{3}$னிவர்ண நமோ || 60**

**827 அக்னினிப; 828 அப்த்யாக்னி ஸஹசர**
**829 அக்னிமய; 830 ப்ரளயாக்னி லோசன**

நாமம் 1. 351 நிடிலத்ருக் 2. 820 அம்புஷோஷக - பார்க்கவும்.

**831 அக்னிகார்யக்ஞ; 832 அக்னிபூஜித**
**833 அக்னிஹோத்ரயுதா; 834 அக்னிருத**
**835 அன்னாக்னிகோபன**

வைஷ்வானரோபூத்வா ப்ராணினாம் தேஹமாஸ்ரித: |
ப்ராணாபான ஸமானயுக்தா: பசாம்யன்னம் சதுர்விதம் ||

ஜீவாத்மரில் இருந்துகொண்டு அவர்களின் ஜடராக்னியை எரியச் செய்பவனான ஸ்ரீஹரி.

**836 அக்னி ஸ்தாபக; 837 அக்னி வர்த்தக**
**838 அக்னி தீபக; 839 அக்னி வர்ண**

அக்னியைப் போல வண்ணம் கொண்டவனான ஸ்ரீஹரி

**வாதஜனக சக்ர வாதஸமபி$^{4}$ரம**
**வாதாக்$^{3}$ரஜ நாஸிக ஜலய**
**வாத ஸமக்வாஷாங்க வாதப்$^{4}$ராத்ருஹித கரணௌ |**
**வாத ஸக$^{2}$க$^{3}$த வாதப$^{4}$வனுத**
**வாத ஸுதமத வாதரஷன ஸு**
**வாதஸம ஹரிக$^{3}$மன ஸூத்ரவாத ஜனக நமோ || 61**

**840 வாதஜனக** - நாம 848 ஸூத்ர ஸுவாதஜனக பார்க்கவும்.

**841 சக்ரவாத ஸமப்ரம; 842 வாதாக்ரஜ நாஸிகஜ:**
சக்ரவாதத்தைப் போல சஞ்சரிப்பவனான ஸ்ரீஹரி. வாதாக்ரஜ + நாசிக+ ஜ. வாயுதேவரின் அண்ணனான பிரம்ம, அவனின் நாசிக (மூக்கு) அங்கிருந்து ஜ - தோன்றிய மஹாவதாரத்தின் ஸ்ரீஹரி. நாம 72 வரஹ மற்றும் மூகஸம்பவ.

**843 லயவாத ஸமாக்வாஷக**
லயவாதத்தில் உள்ள வாயுதேவருக்கு சமரான க - பிரம்மதேவரின் ஆசைகளுக்கு விஷயனான ஸ்ரீஹரி.

**844 வாதப்ராத்ருஹிதகரணௌ**
பீமஸேனதேவரின் தம்பியான அர்ஜுனனுக்கு இதத்தைக் கொடுத்த, ஸ்ரீகிருஷ்ணாவதாரியான ஸ்ரீஹரி. வாதஸககத - வாதஸக - அக்னி. அக்னியில் இருப்பவனான ஸ்ரீஹரி.

**845 வாதபவனுத**
வாதபுத்திரனான ஹனுமந்தனால் சேவை பெற்றுக் கொண்ட ஸ்ரீராமாவதாரியான ஸ்ரீஹரி. வாதபுத்திரனான பீமசேவனால் சேவை பெற்றுக் கொண்ட ஸ்ரீகிருஷ்ணாவதாரியான ஸ்ரீஹரி. வாயு அவதாரியான ஸ்ரீமத்வாசார்யரால் சேவை பெற்றுக் கொண்ட ஸ்ரீவியாசாவதாரியான ஸ்ரீஹரி.

**846 வாதஸுதமத**
ஹனுமத மதவே ஹரிய மதவு - ஸ்ரீபுரந்தரதாசர். வாதசுத - ஹனும பீம மத்வ - இந்த மத்வ மத ப்ரியனான ஸ்ரீஹரி

**847 வாதரஷன** - மத்வமத ப்ரியனான பௌத்தாவதாரத்தின் ஸ்ரீஹரி.

**848 ஸுவாத ஸமஹரிகமன –**
ஹரி – கருட. நல்ல காற்றின் வேகத்தால், சஞ்சரிப்பவனான கருட கமனனான ஸ்ரீஹரி.

**849 ஸூத்ரஸுவாதஜனக**
ஸ்ருஷ்டி உத்பத்தி காலத்தில் சங்கர்ஷண ரூபியான பரமாத்மன், தன் மனைவி ஸ்ரீலட்சுமியின் ரூபமான ஜயாதேவியில் ஞான, பலங்களால் கூடிய வாயு என்னும் புத்திரனைப் பெற்றான். அந்த வாயுதேவருக்கு ஸூத்ர என்றும்கூட பெயர் உள்ளது. (தாத்பர்ய நிர்ணய அத்தியாயம் 3). இத்தகைய ஸூத்ர என்னும் வாதனின் ஜனகனான சங்கர்ஷண ரூபியான ஸ்ரீஹரி.

**அம்ப3 ரமணஜார்ச்சித நவாம்ப3ர**
**அம்ப3ர க்ரீடா3ம்ப3ராளக**
**ஸம்ப4ஜித ஸ்வாம்ப3ர ப4ரித பத3 அம்பா3ரேணுகன் |**
**அம்ப3ரக3வங்கேந்தி3ர த்3வாம்ப3ராப ஹராம்ப3ர**
**அம்ப3ரக3 ஹயகா3ம்ப3ரபம் பாம்ப3கஸ நாபி4 நமோ || 62**

**850 அம்பரமணஜார்ச்சித**
அம்ப+ ரமண+ ஜ+ அர்ச்சித. பார்வதிபதி சங்கரனின் மகனான கஜவதனனால் பூஜை செய்யப்படுபவனான ஸ்ரீஹரி.

**851 நவாம்பர**
நவ+ அம்பர. புதியதான அம்பர (வஸ்திர) பீதாம்பர தரித்தவனான ஸ்ரீஹரி.

**852 அம்பரக்ரீடா** - அம்பர – ஆகாசத்தில் செயலாற்றுபவனான ஸ்ரீஹரி.

**853 அம்பராளக ஸம்பஜித**
அம்பராளக – ருத்ர தேவ்ர். ருத்ர தேவரால் பூஜிக்கப்படுபவனான ஸ்ரீஹரி.

**854 ஸ்வாம்பக பரிதபத**

ஸ்வ+அம்பர+பரித+பத. தன்னாலேயே நிர்மாணிக்கப்பட்ட ஆகாசத்தை தன் ஒரே பாத அளவில் அளந்த த்ரிவிக்ரம ரூபியான ஸ்ரீஹரி.

**855 அம்பாரேணுகஹன்**

தாயான ரேணுகா தேவியை, தந்தையான ஜமதக்னி முனியின் ஆணைப்படி சம்ஹரித்தவனான பரசுராம அவதாரியான ஸ்ரீஹரி. நாம 363 ப்ருகுஜ பார்க்கவும்.

**856 அம்பரகவம்ஷேந்த்ர**

அம்பர+க+வம்ஷ+இந்திர. ஆகாயத்தில் சஞ்சரிக்கும் சூர்ய மற்றும் சந்திர வம்சங்களில் பிறந்து, சிறந்தவர் என சொல்லிக்கொண்ட, ஸ்ரீராமாவதாரியான மற்றும் கிருஷ்ணாவதாரியான ஸ்ரீஹரி.

**857 கோபவத்வாம்பர்கஹரா**

கோபவத்வா+ அம்பர+ அபஹரா. கோபிகா ஸ்த்ரீயரின் துணிகளை அபகரித்த ஸ்ரீகிருஷ்ணாவதாரியான ஸ்ரீஹரி

**858 அம்பாரம்பர**

அம்பர – ஆகாயம். ஆகாயத்தில் இருந்த வாயுதேவரின் பத்னியான த்ரௌபதி தேவிக்கு, அக்ஷயமான வஸ்திரத்தை அருளிய ஸ்ரீகிருஷ்ணாவதாரியான ஸ்ரீஹரி.

**859 அம்பரகஹயகா**

அம்பர – ஆகாயம். க – போகும். ஹய – குதிரை. கா – பெற்ற. ஷைக்ய, சுக்ரீவ, மேகபுஷ்ப, பலாஹக என்னும் வானில் சஞ்சரிக்கும் நான்கு குதிரைகள் உள்ளவனான ஸ்ரீகிருஷ்ணாவதாரியான ஸ்ரீஹரி. (பிராமணனின் மக்களை காப்பாற்ற முடியாதவனான அர்ஜுனன், அதன் ப்ராயச்சித்தமாக அக்னிபிரவேசம் செய்ய தயார் ஆனபோது, ஸ்ரீகிருஷ்ணன், தானே இத்தகைய அற்புத ரதத்தில் ஏறி, அந்த பிராமணனின் மக்களை திரும்ப கொண்டு வந்து கொடுத்தான்).

**860 அம்பர**

ஆகாஷ தத்வத்தைப் போல நிர்லிப்தனான ஸ்ரீஹரி.

**861 பம்பாம்பகஸனாபி**

பம்பா க்ஷேத்திரத்தில், ருத்ரதேவரின் அண்ண, தத்தா, துர்வாஸ (ருத்ர), ஸோமன். அத்ரியின் மக்களாக இருப்பவனான ஸ்ரீஹரி.

**ஷப்$^{3}$த$^{3}$போ$^{3}$த$^{4}$க ஷப்$^{3}$த$^{3}$காரக**
**ஷப்$^{3}$த$^{3}$ க$^{4}$ர்க$^{4}$ர ஷப்த$^{3}$ ஹூகர**
**ஷப்$^{3}$த$^{3}$ பாரக$^{3}$ ஷப்$^{3}$த$^{3}$ வீரக$^{3}$ம்பீ$^{4}$ர ஷப்$^{3}$தா$^{3}$ங்கா |**
**ஷப்த$^{3}$ஷோத$^{4}$க ஷப்$^{3}$த$^{3}$ தூ$^{3}$ஷ$^{2}$க**
**ஷப்$^{3}$த$^{3}$ ஸ்தா$^{2}$பக ஷப்$^{3}$த$^{3}$ விஸ்த்ருத**
**ஷப்$^{3}$த$^{3}$ பி$^{3}$ரம்மாக்$^{3}$ஞேஷ ஷப்$^{3}$தா$^{3}$தீத ஷப்$^{3}$த$^{3}$ நமோ || 63**

**862 ஷப்தபோதக; 863 ஷப்தகாரக**
**864 ஷப்தகர்வர; 865 ஷப்தபாரக**
**866 ஷப்த வீரபீர கப்தாங்கா; 867 ஷப்த கோதக**
**868 ஷப்ததூஷர்; 869 ஷப்தஸ்தாபக**
**870 ஷப்த நிஸ்த்ருத; 871 ஷப்த பிரம்மேக்ஞேக**
**872 ஷப்தாதீத**

**வ்ருஷ$^{2}$ப$^{4}$ கே$^{3}$ஷ்டமிது$^{2}$ன மர்த்த$^{3}$க**
**விஷ$^{22}$ய கர்கஷ ம்ருத்யு பரிஹரி**
**விஷ$^{2}$ரத$^{3}$ன கன்யா பதிஸக$^{2}$ வ்ருஸ்சிகாபா$^{4}$ங்கா$^{3}$ |**
**விஷ$^{2}$பத$^{4}$ன ஹர மகரகுண்ட$^{3}$ல**
**விஷ$^{2}$கும்ப$^{4}$ ஸ்தன பானதத்பர**
**விஷ$^{2}$ய ஸுக$^{2}$மய மீன மேஷா$^{2}$ரூட$^{4}$ விஷ$^{2}$ய நமோ || 64**

**873 ப்ரஷபகேஷ்ட**

வ்ருஷபாரூடனாக சஞ்சரிக்கும் மஹாதேவருக்கு இஷ்ட என்றால், ப்ரியமான ஸ்ரீஹரி. நாம 79 கிரிஜார்ச்சத பதாப்ஜ பார்க்கவும். சமஸ்த வைதிக உலகத்தை ரிக்வேதம் 'வ்ருஷப;' என்று வர்ணிக்கிறது. அத்தகைய வ்ருஷப என்றால், வைதிக உலகத்தை போதிக்கும் பிராமணர்கள் அனைவருக்கும் மகிழ்ச்சியைக் கொடுப்பவனான ஸ்ரீஹரி.

**874 மிதுனமர்த்தக**

மிதுன - இரட்டையர்களான ஹிரண்யாக்ஷ - ஹிரண்யகசிபுகளை கொன்ற ஸ்ரீஹரி.

**875 விஷய கர்கக**

தன்னிடம் எதிர்ப்பைக் காட்டிய அசுரர்களில் தன் கடோரத்வத்தை காட்டிய ஸ்ரீஹரி

**876 மைத்யுகரி ஹரி**

ஹரி - சிங்கம். மரணம் என்னும் யானைக்கு எதிரியான சிம்மத்தைப் போல இருக்கும் ஸ்ரீஹரி

**877 விஷரதன கன்யா பதி சக**

ரதன - பல். விஷரதனகன்யா - நாக கன்யா. நாக கன்யையயான உலுபியின் கணவனான அர்ஜுனனின் சகனான ஸ்ரீகிருஷ்ணாவதாரியான ஸ்ரீஹரி

**878 வ்ருஸ்சிகாபாங்க**

வ்ருஸ்சிக - தேள். ஷம்ஷுபால ரூபியான ஸ்ரீஹரி

**879 விஷபதன ஹர**

விஷத்தையே தனது தனமாக வைத்துக் கொண்ட சர்ப்பத்தின் விஷயத்தினை போக்கிய மற்றும் காலிமர்த்தன செய்தவனான ஸ்ரீகிருஷ்ணாவதாரியான ஸ்ரீஹரி. நாம 1. 446 நாககர்வஹன் 2. 230 பணிமதஹர - பார்க்கவும்.

**880 மகரகுண்டல**

தன் கர்ணபூஷணார்த்தமாக மகர குண்டலங்களை தரித்தவனான ஸ்ரீஹரி

**881 விஷகும்ப ஸ்தனபான தத்பர**

ஸ்தனரூபி கும்பங்களில் விஷத்தை நிரப்பி வந்து பாலகிருஷ்ணனைக் கொஞ்சியவாறு, முலைப்பால் கொடுத்தவளான பூதனி என்னும் கம்சனின் சேவகியை, பால் குடிப்பதைப் போல காட்டி, ஸ்ரீகிருஷ்ணன் அவளின் பிராணனையே எடுத்தவனான ஸ்ரீஹரி. நாமம் 52 பூதனாந்தக பார்க்கவும்.

**882 விஷய சுகமய மீன**

தற்போது நடந்து கொண்டிருக்கும் வைவஸ்வத மன்வந்தரத்தின் அதிபதியான ஸூர்யபுத்ர ஸ்ராத்ததேவன் சாக்ஷுஷ மன்வந்தரம்

(இந்த மன்வந்தரத்தின் முந்தையது) முடியும் காலத்தில், 'ஸத்யவ்ருத' என்னும் பெயரின் அரசனாக இருந்தான். சாக்ஷுஷ மன்வந்தரம் முடியும்போது, ஜலபிரளயமாக (மன்வந்தர பிரளயம்), கடல் பூமியை சூழ்ந்தது. அனைத்து பிராணிகளும் அழிந்தன. சிறிது நாட்களுக்கு முன்னர் மத்ஸ்ய ரூபத்தினால் ஸத்யவ்ருத ராஜனுக்கு தரிசனம் அளித்தது. ஸ்ரீஹரி, ப்ரளய ஜலத்திலிருந்து தப்பிக்கும் வழியை உபதேசித்தான். அதைப் போலவே சத்யவ்ரதன் படகு ஒன்றில் அமர்ந்து, ப்ரக்ஷுப்தமான கடலில் சென்று கொண்டிருக்க, மத்ஸ்யரூபி ஸ்ரீ ஹரி அந்த படகினை காப்பாற்றி, மன்வந்தராதிபதி ஆகும் அந்த மனுவிற்கு, அவசியமான ஞானோபதேசத்தை செய்தான்.

தத்ர ராஜர்ஷி: கஸ்சித் நாம்னா ஸத்யவ்ருதோ மஹான் |
யோஸே அஸ்மின் மஹாகள்பே மனத்வே ஹரிணார்ஷித: ||
(ஸ்ரீமத்பாகவதம்)

மஹாகல்பம் என்றால் இங்கு தினகல்பம் என்று அர்த்தம். ஒரு தின கல்பத்தில் 14 மனுகல்பங்கள் இருக்கின்றன. இவ்வாறு மன்வந்தராதிபனை மன்வந்தர ஜலத்தில் காப்பாற்றி, அவனுக்கு ஞானோபதேசம் செய்த ஸ்ரீஹரி.

**883 மேஷாரூடி விஷய**
அக்னியில் யோகிகளுக்கு தரிசனம் அளிப்பவனான ஸ்ரீஹரி.

**அஷ்வரூப மஹாப$^{4}$ரணி ஸக$^{2}$**
**விஷ்வக்ருதி காயங்கி$^{3}$ வரரோஹி**
**ணீஷ்வரோத்$^{3}$ப$^{4}$வ ம்ருக$^{3}$மதா$^{3}$ங்காரி த்$^{3}$ரவிணஹரணௌ |**
**நிஸ்வஜன புனர்வஸூத$^{3}$ கு$^{3}$ரோர்கு$^{3}$ரோ**
**ஹீஷ்வராஸன பித்ருசயார்ச்சித**
**ஸ்வஸ்வபா$^{4}$க்$^{3}$ய ஸூபூர்ணாம்ருத மர்யோத்தர ஸூஹஸ்த நமோ ||** **65**

**884 அஷ்வரூப**
அஷ்வரூபியான ஹயவதன அவதாரியான ஸ்ரீஹரி

**885 மஹாபரணிஸுக**

ஸ்ரீமஹாலட்சுமிக்கு சுகத்வத்தைக் கொடுப்பவனான ஸ்ரீஹரி

**886 விஷ்வக்ருத்திகாயங்கீவர**

விஷ்வ (ஜகத்)+ க்ருத்திகாமங்கி (கிருதி என்பவளின்)+ வர (கணவன்). உலகத்தின் ஸ்ருஷ்டிகர்த்தன், கிருதி ரமணனான பிரத்யும்னன். ஸ்ருஷ்டியின் துவக்கத்தில், நாராயணனின் உதரத்திலேயே அனந்த ஜீவராசிகள் அஸ்ருஜ்ய அவஸ்தையில் இருந்தன. வாசுதேவன் அவற்றை எடுத்து, அனிருத்தனின் கைக்கு கொடுக்கிறான். அனிருத்தன் அவற்றிற்கு அனிருத்த தேகத்தைக் கொடுக்கிறான். இதே 'சூக்ஷ்ம ஸ்ருஷ்டி'. லிங்கதேக பங்கம் ஆகும்வரை இந்த தேகம் அனைவருக்கும் இருக்கின்றது.

பிறகு அனிருத்தன், இந்த பிரம்ம கல்பத்தில் சாதனையின் மூலம் முக்திக்கு தகுதியான ஜீவர்களையும் பிரத்யும்னனுக்குக் கொடுக்கிறான். பிரத்யும்னன் க்ருதியுடன் சேர்ந்து அவர்களுக்கு ஸ்தூல ஷரீரத்தைக் கொடுக்கிறான். மற்றும் ஸ்ருஷ்டி கொடுக்கிறான். இதுவே - ஸ்தூல ஸ்ருஷ்டி.

பிரம்மாண்டத்தின் வெளியே சேதனருக்கு சூக்ஷ்ம தேகத்தை அடைந்து, அனிருத்தன் ஸ்ருஷ்டித்த சேதனர்களை பிரம்மாண்டத்தின் உள்ளே ஸ்தூல தேகத்தையும் அடைந்து, க்ருதியுடன் சேர்ந்து ஸ்ருஷ்டிக்கிறான். இத்தகைய பிரத்யும்னன் காமாந்தர்யாமி ஆகியிருக்கும் பிரத்யும்னன், ஸ்த்ரி புருஷர்களில் அன்யோன்யமாக சம்பந்தத்தை செய்து, புருஷர்களின் மூலம் பெண்களில் சந்தான பரம்பரையை உருவாக்குகிறான். இத்தகைய பிரத்யும்ன ரூபி - ஸ்ரீஹரி.

**887 ரோஹிணீஷ்வரோத்பவ**

ரோஹிணீஷ்வர - சந்திரன். உத்பவ - பிறந்த. சந்திர வம்சத்தில் பிறந்த ஸ்ரீகிருஷ்ணாவதாரியான ஸ்ரீஹரி

**888 ம்ருகமதாங்க**

ம்ருக+ மத+ அங்க.

1. கம்சனின் வதையின் காலத்திற்கு, வில் விழா மண்டபத்தின் மகாத்வாரத்தில் நிறுத்தப்பட்டிருந்த குவலயாபீட என்னும் மத

யானையை தன் முஷ்டியினால் கொன்றவனான ஸ்ரீகிருஷ்ணாவதாரியான ஸ்ரீஹரி.

2. கோசலை தேசத்து அரசன் தன் மகளான நீலாதேவியின் ஸ்வயம்வரத்திற்கு, முன்னர் கூறியிருந்த விதிப்படி வைத்திருந்த ஏழு எருதுகளை தன் கைகளால் கட்டி, அடக்கிய ஸ்ரீகிருஷ்ணாவதாரியான ஸ்ரீஹரி. நாமம் 755 அஷ்டமஹிஷியர - பார்க்கவும்.

**889 அரித்ரவணஹரண**

அரீஷத்ருகள் + த்ரவிண (ஹண) + ஹரண - அழிக்கும். ஜராசந்தனின் மரணத்திற்குப் பிறகு அவனின் பொருட்களை எடுத்துக் கொண்டவனான ஸ்ரீஹரி

**890 நிஸ்வஜன புனர்வஸுத.**

நி:+ஸ்வஜன+ புன:+ வஸு+த. பலியின் ஆக்ரமிப்பினால் ஸ்வர்க்காதிபத்யத்தை இழந்த தேவதைகளுக்கு, வாமன அவதாரத்தில் பலியிடமிருந்து பூமி மற்றும் ஸ்வர்க்கத்தை தானமாகப் பெற்று அதனை திரும்ப தேவதைகளுக்குக் கொடுத்தவனான ஸ்ரீஹரி. நாமம் 70 த்ரிவிக்ரம பார்க்கவும்.

**சித்ரரத$^{2}$ஸாதி ஷததூ$^{3}$ர ம**
**ருத்தானுராத$^{4}$ கோத்$^{3}$த$^{4}$ர**
**கோ$^{3}$த்ரி ஸூர்க$^{2}$ர மூலராக்ஷஸ வந்த்$^{3}$ய ஜலரூப |**
**ஷத்ரு ஸ்ரவணாஹித த$^{4}$னிஷ்ட$^{2}$ ந**
**க்ஷத்ர ஷதபதி குலஜ மத்$^{3}$யபூ**
**ர்வோத்தர பா$^{4}$த்$^{3}$ரபதே$^{3}$ஷ ரேவதி ரமணௌஜ நமோ || 66**

**891. மருத்தலேஷா**

மருத் - வாயுதேவரின் அவதாரபூதரான மத்வாசார்யரின் மதத்தை அனுசரித்து, ஆராதிப்பவர்களை அருள்பவனான ஸ்ரீஹரி.

**892. கோத்ரீஸுககர**

பாதகெ கம்ஸன பயதிந்தோடி ஹோாத
பூத ஜீவர யாதவரென்னெல்ல
ஆதுரதி கரெஸித தீனவத்ஸல கிருஷ்ண

ப்ரீதியலி ஸ்வஸ்தானதல்லிட்டனவர ||5

தாஷார்ஹ, வ்ருஷ்டி அந்தக, மது, குக்குரரு, ஸாத்பதரு, குலபந்துகளு |
தேஷாந்தரதி பளதி கரெஸி தந்தவர வாஸுதேவ ஸங்க்யதல்லிட்டு பஹள ||6

தன் குலத்தில், கோத்திரத்தில் பிறந்த உற்றார் உறவினர் அனைவருக்கும், மூத்தவன், சிறந்தவன் என்று சொல்லிக்கொண்டு நட்பினை பாராட்டிய, ஸ்ரீகிருஷ்ண அவதாரியான ஸ்ரீஹரி.

**893 தனிஷ்ட**

தன்னை வணங்குபவர்களுக்கு 1. தர்ம 2. அர்த்த 3. காம 4. மோட்ச ஆகியவற்றை, அவரவர்களின் இஷ்டமான செல்வத்தை அருள்பவனான ஸ்ரீஹரி.

**894. நட்சத்திர ஷதபதி குலஜ**

நட்சத்திர+ஷத+பதி+குல+ஜ. நூற்றுக்கணக்கான + தலைவன் + வம்சம் + பிறந்த. நூற்றுக்கணக்கான நட்சத்திரங்களின் தலைவனான சந்திரன். அவனின் வம்சத்தில் அவதரித்த ஸ்ரீகிருஷ்ணாவதாரனான ஸ்ரீஹரி. சந்திரகுலத்தில் உதித்தவனான ஸ்ரீகிருஷ்ணாவதார ஸ்ரீஹரி.

**895. மத்வபூர்வோத்தர பாத்ரப்ரதேஷ**

கிழக்கு மற்றும் வடக்கு பாத்ரபத நட்சத்திரங்களில் தலைவனான சந்திரனின் நடுவில் – அதாவது, அந்தர்யாமியானவனான ஸ்ரீஹரி. பகவான், சிம்சுமார ரூபத்தினால் கிரஹ நட்சத்திராதிகள் தத்தம் கக்ஷையில் இருக்குமாறு செய்து, அவற்றிற்கு தலைவன் எனப்படுகிறான்.

**896. ரேவதி ரமணானுஜ**

ரேவதியின் தலைவனான பலராமனின் தம்பியான ஸ்ரீகிருஷ்ணாவதார ஸ்ரீஹரி.

**897. மூலராக்ஷஸவித்யா**

நாமம் – மதுமதனம் பார்க்கவும்.

**கரார்ச்சித கிதவஹர ஸத்ய**
**வ்ருதப க்ரீடா$^3$பத$^3$கு த$^4$ரகு**
**ஜித நிக$^3$மவேத்$^3$ய கோ$^3$க$^2$ரமுக$^2$ கோஸல ஜவரபா |**
**ஸ்ருதிஹராஹர கண்ட$^2$ரேகா$^2$ங்**
**கித கஷ்யபஸூத கருணபா$^4$ஸக**
**ஷத ஸுபோ$^3$த்$^3$த$^4$ர ஸிததரோத$^3$ர ஷப$^2$ரிரூப நமோ || 67**

**898 ஸத்யவ்ருதப**

1. நாம 881 விஷயசுகமயமீன 2. நாம – 348 ஜுஷபதி பார்க்கவும் 3. நாம – 218 ஜுஷ.

**899 ஸ்ருதிஹராஹர**

1. நாம 29 வரஹ 2. நாம 849 வாதாக்ரஜநாஸிகஜ பார்க்கவும்.

**900 கஷ்யபஸூத**

கழுத்தில் அற்புதமான லட்சணங்களைக் கொண்ட மூன்று ரேகைகளைக் கொண்ட கூர்மாவதாரியான ஸ்ரீஹரி. 1. நாம 73 வாமன 2. நாம 70 த்ரிவிக்ரம 3. நாம 176 உபேந்திர 4. நாம கஷ்யபாத்மஜ பார்க்கவும்.

**901 கருண பாஸக**

கருணாகரனான ராமாவதார ஸ்ரீஹரி. 1) நாம 38 ஜனப 2) நாம 39 முனிஸுத 3) நாம 40 தாடகாந்தக 4) நாம 41 ஜனகஜாவர 5) நாம 42 லக்ஷ்மணாக்ரஜ 6) நாம 45 ஸூர்யஸுதபால 7) நாம 49 தினபகுலபதி 8) நாம 47 தினவத்ஸல 9) நாம 48 வனதிபந்தவிஹார 10) நாம 49 தஷஷிரஹனனகாரண 11) நாம 50 பரதபாலக - பார்க்கவும்.

**902 கோஸலஜவரபா**

கோஸல+ஜ+வர+பா. கோஸலதேசத்தின் அரசனனின் மகளாக பிறந்த கௌஸல்யையின் வரன், அதாவது கணவனான தசரத மகாராஜனை, அவன் தன் மனைவியான கைகேயிக்கு கொடுத்த வரங்களை தான் காப்பாற்றி, தசரதனை வாக்கு தவறியவன் ஆகாதவாறு காப்பாற்றிய ஸ்ரீராமாவதாரியான ஸ்ரீஹரி.

**903 ஸிததரோதர**

ஸிததர+உதர. ஸிததர – தூய்மையான. தூய்மையான வயிற்றினைக் கொண்ட, மத்ஸ்யாவதாரியான ஸ்ரீஹரி.

**904 ஷபரிரூப** - நாம 903 ஸிததரோதர பார்க்கவும்.

**கமட$^2$காலய கில்பி$^3$ஷோ$^2$த$^3$ர**
**விமல லீலாசேஷ்ட குலகி$^3$ரி**
**ப்$^4$ரமணகர குத$^4$ரேஷ்வர கேஷ்வரேஷ்டகர |**
**அமித கைதவாஷ்ட கோமல**
**விமல ஜட$^2$ரகடி$^2$ண வபு:கௌ**
**ர்ய மஹத்க்ருதிப்ரிய கண்ட$^2$லம்ப$^3$ கச்சபாத்ம நமோ || 68**

**905 கேஷ்வரேஷ்டகர**

க (பிரம்ம) + ஈஷ்வர (ருத்ர) + இஷ்டகர – பிரம்ம மற்றும் ருத்ர இவர்களுக்கு இஷ்டமானவனாக நடப்பவனான ஸ்ரீஹரி

**906 குபதகமேதர**

குபத – பாதத்தினால் பிறந்த பூதேவி. கமா – ஆனந்த முக்தளான லட்சுமிதேவி (க – ஆனந்தம்). பாதத்தினால் பிறந்த பூதேவி மற்றும் ஆனந்தத்தைக் கொண்டவளான லட்சுமிதேவி – இவர்களிடமிருந்து வேறுபட்டவனான ஸ்ரீஹரி.

**907 குலகிரிப்ரமணகர** - நாம 816 பயோம்பு மதன – பார்க்கவும்.

**908 அமிதகைதவானிஷ்ட**

அமித +கைதவ +அனிஷ்ட. மிகவும் கஷ்டத்தை தரும் தைத்யர்களுக்கு இஷ்டமில்லாதவனான ஸ்ரீஹரி.

**909 கோமலஜடர; 910 விமலஜடர**
**911 கடிணவபு:கௌர்ம; 912 மஹத் ஸ்ம்ருதிப்ராய**
**913 கண்டலம்ப; 914 கச்சபாத்ம – கூர்மாவதாரத்தின் ஸ்ரீஹரி**
கோமலவிமல ஜடர – கடிண வபு:கௌர்ம |
மஹதஸ்ம்யைதி ப்ரியகண்டலம்ப கச்சபாத்ம || - அமரகோஷ

**கனகப⁴ய காபுருஷ மத²ன கி**
**சினஜ கீர்த்தித யக்ஞரு குஷமய**
**தனுஶ்ரீகுத⁴வ க்ருபா ஷௌண்ட³கைஷோர குஜவந்த³ ।**
**மனஸமஸ்வன ரோப³க⁴ர்கு⁴ர**
**மனு ஸனக நுத காதுகாடண**
**கனககி³ரிசர கஞ்சப⁴ய கஷ்டஹரண நமோ ।। 69**

**915 கனகபவகாபுருஷமதன**

பிரம்மனால் பிறந்த ஹிரண்யாக்ஷனை கொன்ற – வராஹரூபியான ஶ்ரீஹரி. 1. நாம 72 வரஹ 2. நாம 842 வாதாக்ரஜ நாஸிகஜ – பார்க்கவும்.

**916 கிடனட**

மனைவியான பூதேவியுடன் செயல்களை புரிந்த வராஹாவதாரியான ஶ்ரீஹரி.

**917 கீர்த்திதயக்ஞ**

1. நாம 73 வாமன 2. நாம 70 த்ரிவிக்ரம – பார்க்கவும்.

**918 குஷமயதனு**

தேகம் முழுக்க சிலிர்த்து நின்ற ரோமங்களைக் கொண்ட வராஹாவதாரத்தின் ஶ்ரீஹரி. 1. நாம 72 வரஹ 2. நாம 70 த்ரிவிக்ரம பார்க்கவும்.

**919 ஶ்ரீகுதவ**

ஶ்ரீ – லட்சுமிதேவி. கு – பூதேவி. லட்சுமிதேவி மற்றும் பூதேவியின் பதியானவனான ஶ்ரீஹரி.

**920 க்ருபாகௌண்ட**

1. நாம 212 கருணாநிதி 2. நாம 512 கருணாம்பக பார்க்கவும்.

**921 கைஷோரகுஜவரத**

கு – பூதேவி. ஜ – பிறந்த. வராக அவதாரத்தில் பூதேவியிடமிருந்து பிறந்த நரகாசுரனுக்கு, அவரின் கருணையைக் காட்டிய வராகாவதாரத்தின் ஶ்ரீஹரி.

**922 கமஸமஸ்வன**
மேகத்தைப் போல கர்ஜிக்கும் நரசிம்மாவதாரத்தின் ஸ்ரீஹரி

**923 ரோலகர்கர**
கர்ஜிக்கும் த்வனி கொண்ட நரசிம்மாவதாரியான ஸ்ரீஹரி

**924 மனுனுத; 925 ஸனகனுத**
மனு மற்றும் ஸனகாதிகளால் வணங்கப்படுபவனான ஸ்ரீஹரி

**926 கௌதுகாடண**
வியப்பான செயல்களைக் கொண்டவனான ஸ்ரீஹரி

**927 கனககிரிசர**
சுவர்ண (கனக) கிரியில் இருப்பவனான வெங்கடேச தேவனான ஸ்ரீஹரி. ராமாவதாரத்தில் சீதை லட்சுமணர்களுடன் சஞ்சரித்த ராமாவதாரியான ஸ்ரீஹரி.

**928 கஞ்சபவ மத கஷ்டஹரண**
கஞ்சபவ - பிரம்மதேவர். அடுத்து பிரம்ம பதவிக்கு வரப்போகிறவரான வாயுதேவரின் அவதாரரான மத்வாசார்யரின் மதத்தைப் பின்பற்றுபவர்களின் கஷ்டங்களை பரிகரிப்பவனான ஸ்ரீஹரி.

**மத்4வவல்லப4 மத்4வதீர்த்த2க3**
**மத்4வமதபர மத்4வபதே முனி**
**மத்4வரமண ஸ்ரீமத்4வ யதினுத மத்4வஸூரபா**
**மத்4வபோஷ2க மத்4வபா4ஷ2க**
**மத்4வதோஷ2க மத்4வலிபுஹர**
**மத்4வகாவத3 மத்4வஹ்ருத்கு3ஹ மத்4வவிப4வ நமோ || 70**

**929 மத்வவல்லப**
வாயுதேவரின் மூன்றாவது அவதாரமான மத்வாசார்யரின் அனைத்துமான (பிரபு மற்றும் ஆராத்ய தெய்வமான) வேதவியாச அவதாரியான ஸ்ரீஹரி.

**930 மத்வதீர்த்தக**
மத்வதீர்த்த+க. வாயுதேவரின் மூன்றாவது அவதாரமான மத்வாசார்யரின் மனதில் நிலையாக நின்றிருக்கும் ஸ்ரீவேதவியாச அவதாரியான ஸ்ரீஹரி.

**931 மத்வமதபர**
ஸ்ரீமத்வாசார்யரின் மதமான த்வைதமதத்தை ஒப்புக் கொள்பவனான ஸ்ரீஹரி.

ஹனுமன மதவே ஹரிய மதவு |
ஹரிய மதவே ஹனுமன மதவு ||

**932 மத்வபதே** - நாம 929 - மத்வவல்லப பார்க்கவும்.

**933 முனி மத்வரமண** - நாம 929 மத்வவல்லப பார்க்கவும்.

**934 ஸ்ரீமத்வயதி நுத**
ஸ்ரீமத்வாசார்யரால் வணங்கப்படும் வேதவியாச அவதாரியான ஸ்ரீஹரி

**935 மத்வபுஷ்கரபா**
ஸ்ரீமத்வாசார்யர் என்னும் ஆனந்தமய ஸரோவரத்தை அருளியவரான ஸ்ரீஹரி.

**936 மத்வபோஷக**
த்வைதமத ப்ரவர்த்தகரான ஸ்ரீமத்வாசார்யரை அருளியவரான ஸ்ரீஹரி

**937 மத்வபாஷக**
ஹனுமன மதவே ஹரிய மதவு |
ஹரிய மதவே ஹனுமன மதவு ||

என்று தாசர் பாடியதைப்போல, வேதவியாசர் வேதங்களை பிரித்துக் கொடுத்ததற்கேற்ப, வாயுதேவரின் மூன்றாம் அவதாரியான மத்வாசார்யரால், பாமர மக்களுக்கு அர்த்தம் ஆகுமாறு பாஷ்யம் இயற்றிக் கொடுத்தவரான ஸ்ரீஹரி.

**938 மத்வபோஷக**

வாயுதேவரின் மூன்றாவது அவதாரமான மத்வாசார்யருக்கு மண்ணின் கட்டியில் பாலகிருஷ்ணனாக காட்சியளித்து, உடுப்பியில் பிரதிஷ்டை செய்யப்பட்டு, அவரை அருளிய ஸ்ரீஹரி.

**939 மத்வரிபு ஹர**

பிரம்மசூத்ரத்திற்கு வெவ்வேறு 21 மக்கள் குபாஷ்யம் இயற்றி, மக்களின் மனதை மயக்கினர். மத்வாசார்யர் அவர்கள் அனைவரையும் பரிகரித்து, தமதேயான வேறு ஒரு பாஷ்யம் இயற்றி சுஜீவிகளின் கஷ்டங்களை / சந்தேகங்களை போக்க வைத்தவனான ஸ்ரீஹரி.

**940 மத்வகாவத**

மத்வாசார்யர் இயற்றிய 37 கிரந்தங்களின் இயற்றலுக்கு, அவரின் அந்தர்யாமியாக நின்று அருளியவனான ஸ்ரீஹரி.

**941 மத்வஹ்ருத்குஹ**

மத்வாசார்யரின் இதயம் என்னும் குகையில் வசிப்பவனான ஸ்ரீஹரி

**942 மத்வவிபவ**

மத்வாசார்யர் அத்யாத்ம வைபவத்தை அடையுமாறு அருளியவனான ஸ்ரீஹரி

**ப்ரஸன்ன ப$^{4}$வன ப்ரஸன்ன பா$^{4}$ஷ$^{2}$ண**
**ப்ரஸன்ன கார்ய ப்ரஸன்ன கு$^{3}$ணநிதே$^{4}$**
**ப்ரஸன்ன நாமத ப்ரஸன்ன தேஜத$^{3}$ ப்ரஸன்னதர மூர்த்தே |**
**ப்ரஸன்ன புருஷ ப்ரஸன்ன ஸோங்கித**
**ப்ரஸன்னகத$^{2}$ன ப்ரஸன்ன பூ$^{4}$ஷ$^{2}$ண**
**ப்ரஸன்ன சரித ஸ்ரீப்ரஸன்ன வெங்கட ப்ரஸன்ன க்ருஷ்ண நமோ || 70**

**943 பிரசன்ன பவன**

ஷ்வேதத்வீப, அனந்தாஸன, வைகுண்ட என்னும் மகிழ்ச்சியைக் கொடுக்கக்கூடிய பவனங்களைக் கொண்டவனான ஸ்ரீஹரி.

**944 பிரசன்ன பாஷண**

1. அத்யாத்ம ஞானத்தைக் கொடுத்து, மோட்சத்தைக் கொடுக்கக்கூடிய பாஷணங்களால் தன் தாயான இதரா தேவியை மகிழ்ச்சிப்படுத்திய மஹிதாஸ அவதாரியான ஸ்ரீஹரி. நாமம் 'மஹிதாஸ' பார்க்கவும்.

2. தன் பாலபாஷங்களால் நந்த யஷோதையரை மகிழ்ச்சிப்படுத்தியவனான ஸ்ரீகிருஷ்ணாவதாரியான ஸ்ரீஹரி.

**945 பிரசன்ன கார்ய**

துஷ்டர்களை தண்டிப்பது, சிஷ்யர்களை காப்பது என்னும் தன்னுடைய செயல்களால், வராஹ, நரசிம்ம, பரசுராம, ராம, கிருஷ்ண ஆகிய அவதாரங்களால், தேவதைகளையும், ஸூஜீவிகளையும் மகிழ்ச்சிப்படுத்திய ஸ்ரீஹரி.

**946 பிரசன்ன குணநிதே**

தன் ஞான, ஆனந்த, ஸௌந்தர்ய, ஷக்தி, பக்தவாத்ஸல்ய ஆகிய அனந்தகல்யாண குண பரிபூர்ணங்களால் மகிழ்ச்சியை கொடுக்கக்கூடியவனான ஸ்ரீஹரி.

**947 பிரசன்ன நாமத**

'நின்ன நாமத பலஒந்தித்தரெ ஸாகு' - பெயர் ஒன்று இருந்தால் போதாதா என்று ஹரிதாசர்கள் பாடியதைப் போல, நாமஸ்மரணையினால் அனந்தாஸன வைகுண்டாதிகளில் இடத்தை அருளி, பக்தர்களுக்கு மகிழ்ச்சியைக் கொடுப்பவனான ஸ்ரீஹரி.

**948 பிரசன்ன தேஜத**

சூரியனில் ஆதித்ய நாமகனாக இருந்து, தன் ஒளியினால் அனைத்து உலகிற்கே வெளிச்சத்தைக் காட்டி, மகிழ்ச்சியைக் கொடுப்பவனான ஸ்ரீஹரி. (சாந்தோக்ய உபநிஷத் 2-1-6 மற்றும் பாஷ்யம். பிருஹதாரண்யக உபநிஷத் 8-2-9 மற்றும் பாஷ்யம்).

**949 பிரஸன்னதர மூர்த்தே**

ஸ்ரீகிருஷ்ண அவதாரத்தில், தேவகி கிருஷ்ணனிடம், 'உன்னுடைய பால லீலையை நான் பார்க்கவே இல்லை. அந்த சிறிய மூர்த்தியை எனக்கு காட்டுவாயாக' என்று கேட்டாள். ஸ்ரீகிருஷ்ணன்

தன்னுடைய பால மூர்த்தியை அவளுக்குக் காட்டி அருளினான். அதனை பார்க்க விரும்பிய ஸ்ரீருக்மணி, தனக்கு பூஜைக்காக ஒரு விக்ரகம் வேண்டும் என்று வேண்டினாள். அவளுக்கும் அதைப்போலவே ஸ்ரீகிருஷ்ணன் அருளினான். அதையே வாயுதேவரின் மூன்றாம் அவதாரமான மத்வாச்சாரியார், மண் கட்டியில் கண்டு, அதனை வேண்டிப் பெற்றுக்கொண்டு, உடுப்பியில் அதனை ஸ்தாபனம் செய்தார். இத்தகைய பாலகிருஷ்ண மூர்த்தியின் தரிசனத்தால் மகிழ்ச்சியைக் கொடுப்பவனாக ஸ்ரீஹரி.

**950 பிரசன்ன புருஷ**

ருக்மணியுடன் பேசிக்கொண்டிருந்த ஸ்ரீகிருஷ்ணன், நகைச்சுவையாக சில சொற்களைக் கூறினான். 'ஹே ராஜகுமாரியே, கடலில் வசித்து பிழைக்கும் நான், நாரதனின் பேச்சில் மயங்கினேன். சிசுபாலன் முதலான அரசகுமாரர்களை விட்டு, பசுக்களை மேய்ப்பவனான என்னை, ஏன் அடைந்தாய்?' என்று கேட்டான். இதனைக் கேட்ட ருக்மணி தேவி மயங்கி விழுந்ததைக் கண்டு, அவளுடைய முன் விழுந்த கூந்தலை சரிப்படுத்தி, சமாதான வார்த்தைகளை சொல்லி, 'இதற்கு இப்படி கலங்குவார்களா?' என்று ஆறுதல் கூறினார். அதற்கு மகிழ்ந்த ருக்மணி தேவி, 'இந்த உலகத்தின் அதிபதி நீங்கள். நான் உனக்கு அவியோகி ஆகிறேன்' என்று கூறினாள். 'உத்தம பெண்கள் நம்மை ஆள்வதற்கு சரியான குணங்களில் சிறந்தவரான புருஷர்களே கணவனாக ஆக வேண்டும் என்று விரும்புவார்களே தவிர, நம்முடைய ஆணைக்கு ஏற்ப நடக்கும் பேடிகளை அவர்கள் விரும்புவதில்லை' என்று கூறி ருக்மணியை மகிழ்ச்சிப்படுத்தியவனான ஸ்ரீஹரி.

**951 பிரசன்ன ஸொங்கித**

சித்தியின் கடும் சொற்களுக்கு மனம் கலங்கி, எட்டு வயது சிறுவனான துருவன், காட்டில் நாரதரிடம் மந்திர உபதேசத்தைப் பெற்று தவம் செய்யத் தொடங்கினான். அவருடைய பக்திக்கு மெச்சி, தரிசனம் அளித்த பகவான், எப்படி பிரார்த்தனை செய்யவேண்டும் என்பதை அறியாத பாலகனின் மனதை அறிந்து, தன்னுடைய கையில் இருந்த சங்கினால் அவனுடைய கன்னத்தை தொட்டான். அப்பொழுது அந்த சிறுவன் திவ்ய ஞானி ஆக,

பகவானின் ஸ்தோத்திரம் செய்து, துருவ பதவியை வரமாகப் பெற்றான். தன்னுடைய கையில் இருந்த பாஞ்சஜன்யம் என்னும் சங்கினை ஊதி, பால துருவனுக்கு மகிழ்ச்சியைக் கொடுத்தவனான வாசுதேவ அவதாரமான ஸ்ரீஹரி.

**952 பிரசன்ன கதன**

கௌதமரின் சாபத்தினால் வேதங்கள் புரியாமல் போக, முனிவர்கள் பகவானை பிரார்த்தனை செய்தனர். பகவான் வேதவியாசர் அவதாரம் எடுத்து வேதங்களை பிரித்து, வேதம், உபநிஷத், மற்றும் 18 புராணங்களை, மோட்சத்தை விரும்பும் ஜீவர்களுக்குக் கொடுத்து, அவர்களுக்கு பகவானின் ஞானம் தெரியுமாறு செய்து, அவர்களுக்கு மகிழ்ச்சியை கொடுத்தவனான ஸ்ரீஹரி.

**953 பிரசன்ன பூஷண**

வைஜயந்திமாலை தரித்தவனான பகவான், கிருஷ்ண அவதாரத்தில் வனமாலை மற்றும் மயில் தோகைகளால் அலங்கரிக்கப்பட்டு, பசுக்களை மற்றும் கோபாலகர்களை மகிழ்ச்சிப்படுத்துபவனான, இத்தகைய ஸ்ரீகிருஷ்ண அவதாரியான ஸ்ரீஹரி.

**954 பிரசன்ன சரித**

பித்ரு வாக்கியத்தை காப்பதற்காக வனவாசத்திற்குச் சென்ற ஸ்ரீராமனை திரும்ப அழைத்து வருவதற்கு, அனைத்து ராஜ மரியாதைகளுடன் வந்த பரதனை நிறுத்தி, தான் வனவாசத்தை முடித்துக்கொண்டு வருகிறேன் என்றும், பிறகு பட்டாபிஷேகம் செய்து கொள்கிறேன் என்றும், வாக்கு கொடுத்தான் ஸ்ரீராமன். தன்னுடைய பாதுகைகளை கொடுத்து, பரதனை திரும்ப ஊருக்கு அனுப்பினான். அப்பொழுது பரதன் 14 ஆண்டுகள் முடிந்த பிறகு, நீங்கள் வரவில்லை என்றால், நான் அக்னிப்பிரவேசம் செய்துவிடுவேன் என்று கூறியதை நினைவில் வைத்துக்கொண்டு, ராவணனை மற்றும் அவருடைய அசுர சைன்யங்களை கொன்ற பிறகு, தன்னுடன் இருந்த அனைவருடனும் புஷ்பக விமானத்தில் ஏறி, அயோத்திக்கு வந்து, தன்னுடைய தம்பியான பரதனுக்கும் மற்றும் அனைவருக்கும் தன்னுடைய உத்தம சரித்திரத்தால் மகிழ்ச்சியைக் கொடுப்பவனாக ஸ்ரீராமனான ஸ்ரீஹரி. நாமம் 50 - பரதபாலகா பார்க்கவும்.

**955 பிரசன்ன வெங்கட**

ராவணன் சீதையை அபகரிக்க விரும்பும் விஷயத்தை அறிந்து, அனைத்து தேவதைகளும் சீதையை அக்னி தேவரிடம் விட்டு, அவளுக்கு பதிலாக வேதவதியின் உருவத்தை செய்தனர். ராவணனின் சம்ஹாரத்திற்குப் பிறகு, சீதையின் ரூபத்தில் இருந்த வேதவதி, அக்னி பிரவேசம் செய்தாள். அக்னிதேவன் உண்மையான சீதா தேவியையும், சீதா தேவியின் ரூபத்தில் இருந்த வேதவதியையும், ஸ்ரீராமனிடம் ஒப்படைத்தான். அப்பொழுது சீதாதேவி, இலங்கையில் உண்மையாக கஷ்டப்பட்டது வேதவதி என்று கூறி, அவளை அருளி பாணிக்கிரஹணம் செய்து கொள்ளுமாறு கேட்டுக் கொண்டாள். ஆனால் ஸ்ரீராமன், தான் ஏகபத்தினி விரதன் என்று கூறி, அடுத்து கலியுகத்தில் இவளை திருமணம் செய்து கொள்வேன் என்று வாக்கு அளித்தாள். அதன்படியே, அந்த வேதவதியே பத்மாவதியாக பிறந்து வந்தாள். மற்றும் பகவான் ஸ்ரீநிவாசன் ஆகி, அவளை பாணிக்கிரஹணம் செய்து கொண்டான். இவ்வாறு கொடுத்த வாக்கினை காப்பாற்றியவனான, ஸ்ரீலக்ஷ்மி தேவியை மகிழ்ச்சிப் படுத்தியவனான, ஸ்ரீ வேங்கடரமணனான ஸ்ரீஹரி.

**956 பிரசன்ன கிருஷ்ண**

ஸ்ரீபிரசன்ன வெங்கட தாசர், தம்முடைய இந்த ‘சமஸ்த நாம மணி கண ஷட்சரண பத்ய மாலாவை’ ஸ்ரீகிருஷ்ணார்ப்பணம் என்பதற்கு மகிழ்ச்சி அடைபவனான ஸ்ரீஹரி.

**ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து**

***